மத்திய தகவல் ஒலிபரப்புத்துறை அமைச்சர் சுஷ்மா ஸ்வராஜ், தென்னிந்திய திரைப்பட வர்த்தக சபையின் கூட்டத்தில் கலந்து கொள்ள கடந்த பத்தாம் தேதி சென்னை வந்தார். நிகழ்ச்சியை முடித்துவிட்டு திருச்சி மற்றும் திருவையாறு நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள வேகமாய்ப் பறந்து கொண்டிருந்த அவரை மறித்தோம். நமக்கு அளிக்கப்பட்ட 'பொக்கே'களை மகளிரணி விஐபிக்களுக்குத் தானம் பண்ணிவிட்டு நமக்கும் ஒரு பொக்கேயைக் கொடுத்தார் 'பஹுத் சுந்தர் ஹே!' என்றபடி.

'விரிவான பேட்டி இன்னொரு முறை. இப்போது இரண்டு மூன்று கேள்விகள் மட்டும் போதும்' என்று சின்ன கண்டிஷன் போட்டதும் கேட்டோம்.

# டி.டி.ஹெச்சைக் கட்டுப்படுத்த முடியாதா?

"நல்லதையும் கெட்டதையும் இன்று வீட்டுக்குள்ளேயே வந்து டெலிவிஷன் கொடுக்கிறது. அடுத்து டி.டி.ஹெச். முறையில், நேரடியாக செயற்கைக் கோளிலிருந்து, வீட்டுக்குள் நுழையப் போகிறது. கெட்டவை வராமல் தடுக்க என்ன நடவடிக்கை எடுக்கப்போகிறீர்கள்?"

"நல்லதை வழங்கவும், கெட்டதைத் தடுக்கவும் சட்ட பூர்வமாக என்ன செய்ய வேண்டுமோ? அதைச் செய்து கொண்டிருக்கிறோம். நிகழ்ச்சி மற்றும் விளம்பரங்கள் இரண்டிலும் அரசாங்கம் வகுக்கும் கொள்கைகளை,



கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

# வெற்றி ரகசியம்!

YOU CAN WIN புத்தக ஆசிரியர் சிவ் கேரா ஜனவரி 9ம் தேதி திருச்சிக்கு வந்திருந்தார். ரவுண்ட் டேபிள் சங்கம், மூன்றாக் ரவுண்ட் டேபிள் சங்கம், லேடீஸ் சர்க்கிள் மற்றும் தினமலர் நாளிதழ் இணைந்து 'தன் முனைப்பு ஆலோசகர் சிவ் கேராவுடன் ஒரு மாலைப் பொழுது' என்றொரு நிகழ்ச்சியை நடத்தினர். இதில் சிவ்கேரா ஆற்றிய உரையிலிருந்து:



* நம் வாழ்க்கை வாய்ப்புகளாலும் சமாதானங்களாலும் ஆனது. தேர்வு செய்வது நம் கைகளில் தான் உள்ளது. மகிழ்ச்சி என்பது வெளியில் இல்லை. நம்மிடமே உள்ளது.
* அனைத்து விஷயங்களும் நமக்கு சாத்தியமானதல்ல என்பதை உணர்ந்து, நமக்குச் சாத்தியப்படுவதைச் சிறப்பாய்ச் செயல்படுத்தி வெற்றி பெற வேண்டும். கிடைப்பதை சந்தோஷமாய் ஏற்றுக் கொள்வதும் ஒரு தேர்வுதான்.
* கொடுத்த உறுதிமொழிகளைக் காப்பாற்றுவது வெற்றியின் வழியாகும். வெற்றியாளர்கள் இறுதி இலக்கை மட்டுமே பார்க்கின்றனர். தோல்வியாளர்களோ தடைகளை மட்டுமே பார்க்கின்றனர்.
* எதிரியின் வலிமையை உணர்ந்து அதற்கு மேல் சிறிது முயற்சி செய்வதுதான் வெற்றியின் ரகசியம். நம்மில் அனைவருமே வெற்றியடைய ஆசைப்படுகின்றனர். ஆனால் சிலர் மட்டுமே உண்மையான வெற்றி பெறுகின்றனர். இதற்கும் அந்த சிறிய அதிகப்படியான முயற்சி மட்டுமே காரணமாக அமைகின்றது.
* உயரம் தாண்டுதலில் 7.4 அடி தாண்டி வெற்றி பெற்ற வீரன், 'எனது மனம் முதலில் தாண்டியது. பின் என் உடல் தொடர்ந்து வந்தது' என்று கூறினான். வெற்றியின் ரகசியம் இதுதான். தோல்வியை எதிர்கொள்ளும் முறையும் நமது அடுத்த வெற்றியைத் தீர்மானிக்கும்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

முழுமையாகக் கடைபிடித்தால் மட்டுமே நேரடியாக, செயற்கைக்கோள் தொடர்புக்கு அனுமதி வழங்கப்படும். மீறுபவர்களுக்குத் தண்டனை கடுமையாக இருக்கும். செயற்கைக் கோளிலிருந்து நேரடியாக டி.டி.ஹெச் (Direct to Home) முறையில் வரும் நிகழ்ச்சிகளைக் கட்டுப்படுத்துவது சாத்தியமில்லாத காரியம் என்கிற எண்ணம் பரவலாக இருக்கிறது. அது தவறு என்று நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

"தனியார் சேனல்களுடனான கடும்போட்டியில், தேசிய சானலான தூர்தர்ஷன் பெருமளவில் பார்வையாளர்களை இழந்து வருகிறதே?"

"இதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். இன்றும் நாட்டின் எண்பத்து எட்டு சதவீத கவரேஜ், தூர்தர்ஷனுக்குத் தான் இருக்கிறது. இன்று ஒளிபரப்பாகும் எல்லா சேனல்களும் சேர்ந்தால் கூட, தூர்தர்ஷனுக்கு இணையாக முடியாது. இன்று இந்தியாவில் முப்பத்தைந்து லட்சம் இல்லங்கள்தான் கேபிள் இணைப்பு பெற்றிருக்கின்றன. எனவே, தூர்தர்ஷன், பார்வையாளர்களை இழந்து வருகிறது என்று சொல்லுவதே தவறு."

"திரையுலகத்துக்கு 'இண்டஸ்டிரி' அந்தஸ்த்து கொடுத்துள்ளீர்கள். ஆனால், திரையுலகம் குறிப்பாக மும்பையில்-அண்டர் வோர்ல்டு டான்களின்- தாதாக்களின் பிடியில் சிக்கியுள்ளதே!"

"இது இன்று, நேற்று நடப்பதில்லை. அதன் காரணமாகவேதான், திரை உலகத்துக்கு, 'இண்டஸ்டிரி' என்கிற அந்தஸ்த்தை அளித்து, முறையான, நிதி உதவி கிடைக்க வழி செய்திருக்கிறோம். அங்கீகரிக்கப்பட்ட முறைகளில் நிதி உதவி கிடைக்குமானால், அண்டர் வோர்ல்டு கட்டுப்பாடு தளரும். இதற்காக ஐ.டி.பி.யை வங்கியின் சட்டதிட்டங்கள்கூட மாற்றப்பட்டுள்ளன."

— பாரதி

படம்: மீடியா ராமு




# கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

## குவிஸ் போட்டி—11

**பொ**ங்கல் எல்லாம் முடிந்ததா? இந்தவார கேள்விகள் அனைத்தும் உங்களுக்குப் போனஸ் மாதிரி ஈஸியானவை. முந்தைய வாரங்களில் செய்ததைப் போல விடைகளை கூப்பனில் எழுதி மற்ற கூப்பன்களோடு பூட்டி வையுங்கள். இருபத்தியாறு வார இறுதியில் எல்லா கூப்பன்களையும் எங்களுக்கு அனுப்புங்கள். இதில் மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான விடை எழுதும் ஒரு நபருக்கு

**அமெரிக்கப் பயணம்** பரிசு!

**ஐரோப்பா பயணம்** இரண்டாவது பரிசு!

**மலேஷியா—சிங்கப்பூர் பயணம்** மூன்றாவது பரிசு!

இந்த மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான பதிலை எழுதியிருந்தால் இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை! பயணப் பரிசு பெறாதவர்களுக்கு அமரர் கல்கியின் நூல்கள் உண்டு.

ஆசிரியர் தீர்ப்புதான் இறுதி!

## குவிஸ் கூப்பன்—11

1) சச்சின் டெண்டுல்கரின் மனைவியின் பெயர் என்ன?

2) ''கண்ணா, உன் ஆனந்த மோகன வேணுகானமதில்'' என்று தொடரும் கர்நாடக இசைப் பாடலின் தொடக்கத்தில் இடம்பெறும் வார்த்தை விடுபட்டுள்ளது. அது என்ன?

3) பிரிட்டனின் தேசிய மலர் எது?

4) தாதர், மாதுங்கா, செம்பூர் போன்ற பகுதிகள் அமைந்த நகரின் இதற்கு முந்தைய பெயர் என்ன?

5) ரவீந்திரநாத் தாகூரின் எந்தப் படைப்புக்காக அவருக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டது?

6) மன்னன் அலெக்சாண்டரிடம் செல்யூகஸ் நிகேடர் வகித்த பதவி எது?

**விடைகள்:**

1).................................................

2).................................................

3).................................................

4).................................................

5).................................................

6).................................................







# ஈருடல் ஓருயிர்!

**(காதல் சமாசாரம் அல்ல கருணை!)**

"அவனுக்கு விசாலமான இதயம்" என்று கதையில் வர்ணித்தால், அதன் பொருளோ வேறு. ஆனால் உடல் கூற்றின் நியதிப்படி இதயம் திடீரென விசாலமானதாகிவிட்டால், அதனால் சிக்கல்கள் ஏற்படும். உடலின் பல்வேறு பகுதிகளுக்குச் செல்லும் ரத்தத்தின் அளவு (இதயம் சுருங்கி விரிதல் பாதிக்கப்படுவதால்) குறைந்துவிடும். சில வருடங்களுக்கு முன் அப்படி ஒரு இதய பாதிப்புக்கு உள்ளானார் சுதர்ஸன்.

"போதை மருந்து பழக்கமோ, குடி பழக்கமோ எனக்குச் சிறிதும் கிடையாது. என்றாலும் இந்தப் பழக்கங்கள் இல்லாத சிலருக்கும் எந்தக் குறிப்பிட்ட காரணமும் இல்லாமலேயே சிலசமயம் இப்படி இதயம் பெரிதாகி விடுமாம். ஒரே வருடத்தில் என் நிலை வெகு மோசமடைந்தது. இன்னும் இரண்டு மாதம் அந்த நிலை தொடர்ந்திருந்தால் நான் இறந்திருப்பேன் என்று சொன்னார்கள் மருத்துவர்கள்."

ஆனால் ஐந்து வருடங்கள் ஆன பிறகும் நார்மலான வாழ்க்கையை நடத்தி வருகிறார். சென்னை அசோக்நகரில் தோல் ரசாயனங்கள் தொடர்பான வியாபாரம் செய்து வரும் இந்த இளைஞருக்கு இப்போது வரன் பார்க்கத் தொடங்கியிருக்கிறார்கள்.

இந்த உடல் நிலை முன்னேற்றத்துக்குக் காரணம் இதயமாற்று அறுவை சிகிச்சை. நாற்பது வயதான ஒருவரின் இதயம் இவருக்குப் பொருத்தப்பட்டிருக்கிறது; அதாவது மறுபிறவி எடுத்திருக்கிறார்.

"எப்படியும் இறப்புக்குப் பிறகு நம் உடல் பயனின்றிதான் போகப் போகிறது. அப்படியிருக்கையில் இனி உயிர் பிழைக்க வாய்ப்பில்லை என்ற நிலையில் உள்ளவர்களின் இதயத்தைத் தேவைப்படுபவருக்குத் தானமளிப்பதுதான் சரியான செயல்" என்று கூறும் சுந்தர்ராஜைப் பார்த்து யாரும் "இதெல்லாம் சொல்வதற்கு நன்றாகத்தான் இருக்கும்" என்று கூறி உதாசீனப்படுத்திவிட முடியாது. காரணம் இந்தியாவில் நடைபெற்ற முதல் இதயமாற்று சிகிச்சைக்குச் சம்மதம் அளித்தவர் இவர்.

1995 செப்டம்பர் 24ஆம் தேதி, பாரத ஸ்டேட் வங்கியின் தாம்பரம் கிளையில் பணிபுரிந்த ஹேமாவின் வாழ்க்கையில்

விதி விளையாடியது. வங்கிக்குச் சைக்கிளில் சென்று கொண்டிருந்தபோது லாரி ஒன்று மோதியதில் தூக்கியெறியப்பட்டார். தலையில் பலத்த காயம். முதலில் அருகில் உள்ள பாலாஜி நர்சிங் ஹோமிலும், பிறகு விஜயா மருத்துவமனையிலும் சேர்க்கப்பட்டார். ஆனால் ஆழ்ந்த கோமாவில் இருந்த அவரது மூளைப்பகுதி முழுவதுமே உயிர்ப்பின்றிப் போய்விட,



• செரியன்

இதயம் மட்டும் துடித்துக் கொண்டிருந்தது. அப்போதுதான் அவரது கணவர் சுந்தர்ராஜிடம் ஆலோசனை கூறினார் டாக்டர் செரியன்.

"நான் ஒரு தடகள வீரன். ஆசிய விளையாட்டுகளில்கூட நம் நாட்டின் சார்பில் பங்கெடுத்துக் கொண்டிருக்கிறேன். பொதுவாக நிதானமாக யோசிப்பவன் என்றாலும் "இனி உங்கள் மனைவி உயிர் பிழைக்க முடியாது. எனவே அவரது இதயத்தை, அது தேவைப்படும் ஒருவருக்குப் பொருத்தலாமே" என்று டாக்டர் செரியன் கூறியபோது உடனடியாக பதிலளிக்க முடியவில்லை. அதேசமயம் தொடர்ந்து கோமாவிலேயே இருந்து வந்ததால் என் மனைவி நினைவு திரும்பி சகஜ வாழ்க்கைக்கு வருவாளா என்ற கேள்விக்குறி பெரிதாகிக் கொண்டே வந்தது. எனவே டாக்டரின் ஆலோசனையை ஏற்றுக் கொண்டேன்.

ஓர் ஏழைத் பெண்மணிக்கு என் மனைவியின் இதயத்தைப் பொருத்தப் போகிறார்கள் என்பதைத் தவிர, என் மனைவியின் இதயம் பொருத்தப்பட்ட நபரைப் பற்றிய எந்த அடையாளமும் முதலில் எனக்குத் தெரியாது. பிறகுதான் அவர் ஒரு முஸ்லிம் பெண்மணி என்பது உட்பட மீறி விவரங்களை அறிய நேர்ந்தது.

"அதேசமயம் இது குறித்து எந்த விளம்பரமும் கூடாதென்று தீர்மானித்திருந்தேன். ஆனால் அதற்குச் சுமார் இரு வருடங்களுக்குப் பிறகு இதயமாற்று குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்த எல்லா உண்மைகளையும் பகிரங்கமாக்குவதுதான் நல்லது என்று மருத்துவர்கள்கூற, என் மனைவியின் இதயத்தைத் தானம் தர சம்மதித்ததைப் பகிரங்கமாக ஒத்துக் கொண்டேன்" என்று சொல்லும் சுந்தர்ராஜ் மறுமணம் செய்து கொள்ளவில்லை. சங்கரி, ஊர்மிளா ஆகிய இரண்டு மகள்களும் முறையே ப்ளஸ்டூ மற்றும் ஒன்பதாவது வகுப்பில் படிக்கிறார்கள். "அம்மா இல்லாமல் போனது ரொம்ப கஷ்டமாகத்தான் இருந்தது. ஆனா அவங்க இன்னொருத்தருக்கு உயிர் கொடுத்திருப்பதை நினைச்சா சந்தோஷமாகவும் இருக்கு" என்கிறார் - ஊர்மிளா.

• சுந்தர்ராஜன்



• சுதர்ஸன்



இந்து மதத்தின் இருவேறு ஜாதிகளைச் சேர்ந்தவர்கள் சுந்தர்ராஜ் தம்பதியர். இப்போது அந்த மனைவியின் இதயம் ஒரு முஸ்லிம் பெண்மணியின் உடலில். ஆக, கலப்புமணம் மட்டுமல்ல, உறுப்புதானம்கூட ஜாதிமதமற்ற சமுதாயத்தை உண்டாக்குவதில் சப்தமில்லாமல் தன் பங்கைச் செய்துவருகிறது!

மேலே குறிப்பிட்ட இரு இதயமாற்று சிகிச்சைகளையும் செய்தவர் டாக்டர் செரியன். அவரைத் தலைமை



**மெட்ராஸ் மெடிக்கல் மிஷன் மருத்துவமனையில் மருத்துவ ஆலோசகராகப் பணிபுரியும் சீனியர் டாக்டர் எஸ். ராஜன் இதயமாற்று சிகிச்சை பற்றிய சில அடிப்படை விவரங்களை விளக்கினார்.**

● ஒருவர் இறந்த பிறகுகூட சில மணி நேரங்களுக்குள் அவரது கண்களை எடுத்து இன்னொருவருக்குப் பொருத்த முடியும். ஆனால் இதயமாற்று அப்படியல்ல. இயங்கிக் கொண்டிருக்கும் இதயத்தை எடுத்துதான் மற்றவருக்குப் பொருத்த முடியும்.

● மூளை முழுவதும் செயலற்ற பிறகும் இதயம் துடிக்கலாம். அந்த நிலையில் இனி நிச்சயம் இவர் சீக்கிரம் உயிரிழப்பது உறுதி என்ற கட்டத்தில்) இதயத்தை எடுத்துக் கொள்ளலாம். இப்படி எடுக்கப்படும் இதயத்தை நான்கு மணி நேரங்களுக்குள் வேறொருவருக்குப் பொருத்தி விட வேண்டும்.

● மூளையின் ஒரு பகுதியில்தான் பலமான அடிபட்டிருக்கிறது என்றால்கூட, அவர் கோமாவில் இருந்தாலும், அவரது இதயத்தை நீக்க மாட்டோம். மூளையின் அத்தனை பகுதிகளும் செயலிழந்த ''ப்ரெய்ன் டெத்'' எனும் நிலையில்தான் இதைச் செய்வோம்.

● மாற்று இதயம் பொருத்திக் கொண்டவர்கள் சகஜ வாழ்வு வாழலாம். ஏன் விளையாட்டுகளில்கூட தாராளமாகக் கலந்து கொள்ளலாம்.

● இதயமாற்று ஏற்பாட்டில் ஆண் பெண் பேதமில்லை. ஆனால் ஐம்பது வயதுக்குட்பட்டவர்களின் இதயத்தை தானமாகப் பெறுவது ஏற்றது. இல்லையென்றால் வேறு சோதனைகளைச் செய்துவிட்டுத்தான் பொருத்த முடியும்.

● உடல்வாகு, எடை போன்றவற்றில் ஓரளவாவது ஒத்துப் போகும் இருவருக்கிடையேதான் இதயமாற்று சாத்தியம் - நீடித்த பலன் தரும்.

மருத்துவராகக் கொண்ட சென்னை முகப்பேரில் உள்ள மெட்ராஸ் மெடிகல் மிஷனும், அதே பகுதியைச் சேர்ந்த வேலம்மாள் உயர்நிலைப் பள்ளியும் இணைந்து சமீபத்தில் "உடலுறுப்புகள் தான விழிப்புணர்ச்சி வாரத்தைக் கொண்டாடினார்கள்.

"எங்கள் மருத்துவமனையில் மட்டுமே நூற்றி இருப்பத்து ஏழு நோயாளிகள் மாற்று இதயத்துக்காக காத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படிக் கிடைக்காமல் இறந்தவர்களின் எண்ணிக்கை மட்டும் ஐம்பதுக்கும் மேல்' என்று நம்மிடம் வருத்தப்பட்ட டாக்டர் செரியனிடம் 'இதற்கான காரணம் மக்களிடையே விழிப்புணர்வு இல்லாததுதானா?' என்று கேட்டோம். கூடவே பல அரசு மருத்துவமனைகளில் வாழ்வின் இறுதிக் கட்டத்தை நிச்சயம் எட்டி விட்டவர்கள் இருப்பார்களே, அவர்கள் அத்தனை பேரின் உறவினர்களும் இதயதானத்துக்கு அனுமதி அளிக்க மறுத்து விடுவார்களா என்ன? என்ற நம் வியப்பையும் வெளியிட்டோம்.

"மக்களை மட்டும் இந்த விஷயத்தில் குறை கூறிப் பயனில்லை. மருத்துவமனைகளுக்கிடையே ஒரு கூட்டுச் செயல்பாடு இல்லை. ஓர் அரசு மருத்துவமனையில் கோமாவில் ஆழ்ந்து, மூளை பயனற்றுப் போன ஒருவர் இருந்தால், அப்படி ஒருவர் இருப்பது பற்றிய தகவல் எங்களுக்குத் தெரிந்தால்தானே அவர்களின் உறவினரை அணுகமுடியும்? இதற்கென ஒருங்கிணைப்பு மையம் உருவாக்கப்பட்டால் நல்லது. தவிர மருத்துவர்களுக்கிடையே நிலவும் கடும் பொறாமையும் இப்போதைய நிலைமைக்கு ஒரு காரணம்'' எனும் டாக்டர் செரியனுக்குக் கருணைக் கொலையில் அறவே நம்பிக்கையில்லை.

"தவிர, நாங்கள் அந்த உறவினர்களை அணுகுவதைவிட, கோமாவில் ஆழ்ந்த நோயாளிக்குச் சிகிச்சை அளிக்கும் மருத்துவரே இது குறித்து அவரது உறவினர்களுக்கு எடுத்துச் சொல்வதுதான் அதிகப் பலனளிக்கும். மக்கிப் போகும் அல்லது எரியப்போகும் உடலுறுப்புகளை தானமளிப்பதைப் பலரும் செய்ய முன் வர வேண்டும்'' என்றார்.

— **ஜி.எஸ்.எஸ்.**

படங்கள்: **வெங்கடேஷ்**

**நா**சருக்கும் நெப்போலியனுக்கும் பழைய பகை. 'பழி வாங்காமல் விட மாட்டேன்' டைப். நாசருடைய செயல் திட்டம், தனது வளர்ப்பு (மரு) மகனை விட்டு நெப்போலியன் மகளைக் காதலிக்க வைத்து மணமேடையில் கல்யாணத்தை நிறுத்தி நெப்போலியனை மன்னிப்பு கேட்க வைத்து விடுவது. படத்தின் முடிவு : நாசரின் வெற்றி.

'லாங் லாங் அகோ, ஸோ லாங் அம்கா, நோபடி நோஸ் ஹௌ லாங் அகோ'வி லிருந்து பார்த்துப் படிக்கப்பட்ட கதை என்றாலும் ஸ்டோரி லைனைப் பிசிறில்லா மல் கொண்டு போயிருக்கிறார்கள்.




நெப்போலியன் தனது ஊரில் பெரிய அள வில் மதிக்கப் படும் ஒரு புள்ளி. கதை மூலம் இதைப் புரிந்து கொண்டால் சரி என்று விட்டு விடாமல் தனது நடை, உடை, பாவனை, நடிப்பு மூலம் 'க்ரிஸ்ப்' ஆக வெளிப்படுத்துகிறார்.

முரளியின் 'சைல்டு-லைக்' முகம் 'மாமா, நீ எது சொன்னாலும் ஆமா!' காரெக்டருக்கு நன்றா கவே பொருந்துகிறது.

ஆனால், நாசர் - நெப்போலியன் பகை, நாசர் - முரளி பிணைப்பு, முரளி - வடி வேலு நட்பு, நெப்போலியன் - சித்தாரா அந் யோன்னியம் என்று எல்லா ரிலேஷன் ஷிப்பையும் நியாயப்படுத்திய டைரக்டர், முரளி - பிரதியுஷா காதலில் கோட்டை விட்டுவிட்டார்.

ஹீரோயின் இன்னும் கொஞ்சம் சிரிக்க மாட்டாரா என்று ஏங்குவதுதான் த்ரில், இப்படி 180 டிகிரி 'ஃபிளாஷிங்' புன்னகை யால் பிரதியுஷா நம்மைப் பயமுறுத்துவது அநியாயம். அதுவும் அவர் கையை ஆட்டி ஆட்டிப் பேசுவது ஹைஸ்கூல் டிராமவை ஞாபகப்படுத்துகிறது.

வடிவேலுவின் காமெடி மெயின் - டிராக்கோடு இணைந்தே இருப்பதால் ரசிக்க முடிகிறது. (இரண்டு டிராக்கும் இணைந் தாலே இந்தக் காலத்தில் பாராட்ட வேண்டி யிருக்கிறதே!) ஆனால் அவருடைய காமெடி யைத் தூக்கிச் சாப்பிட்டு விடுகின்றன மூன்று விஷயங்கள்...

1. நெப்போலியனைத் தாக்க வரும் ஆங்கிலேய வீரர்கள் கையில் இருக்கும் ரைஃபிலை ரைஃபிலாகப் பயன்படுத்தாமல் அதைத் திருப்பி வைத்துக் கொண்டு ஈட்டியாகப் பயன்படுத்தித் தூள் கிளப்புவது.

2. பிரிட்டிஷ் காலத்தில் வளைய வரும் புது மாடல் ஜோங்கா ஜீப்.

3. பக்கத்திலிருக்கும் (கிளைமாக் ஸில் ஜனங்கள் நடந்தே வந்துவிடும் தூரத்தில் இருக்கும்) கிராமத்திலிருந்து வரும் முரளி 'நான் மெட்ராஸிலிருந்து வரு கிறேன், அடைக்கலம் தாருங்கள்!' என்பதும் இந்த கிராமத்து மக்கள் அதை அப்படியே நம்பி 'வாடா ராசா' என்று அணைத்துக் கொள்வதும்

'ஏலே கருத்தம்மா...' கிராமத்துப் பாடல், கிராமத்துச் சூழல் கிராமத்துப் பின் கொசு வம்... டான்ஸ் மட்டும் 'பிரேக் ஸ்டைல்...' தேவையா?

டிஸ்டிங்ஷன்
ஆவரேஜ் ✓
ஜஸ்ட் பாஸ்
ஃபெயில்

**- கிருஷ்ணா சிதம்பரம்**

# அ.தி.மு.க.விலிருந்து! ஆன்மிகத்துக்கு...!

சென்னையிலிருந்து வெளியூர் செல்லும் சாலைகளின் ஓரங்களில் உள்ள சுவர்களில் அரசியல் தலைவர்களின் பெயர்களைப் போலவே 'பெருமான் சுவாமி ரிஷி' பெயரும் எழுதப்பட்டுள்ளது. உலகில் ஆன்மிகம் தழைக்கவும், சமாதானம், அமைதி நிலைக்கவும், பெருமான்சுவாமி ரிஷி பாடுபடுவதாகச் சொல்கின்றன அந்தச் சுவர் அறிவிப்புகள்.

யார் இந்தப் பெருமான் சுவாமி ரிஷி? 1996வரை அ.தி.மு.க.வில் மாவட்டச் செயலாளராகப் பொறுப்பு வகித்துக்கொண்டு கறை வேட்டி கட்டிக் கொண்டிருந்தவர்தான். இப்போது திடீரென்று காவி வேட்டிக்கு மாறி 'ரிஷி' ஆகியிருக்கிறார் பெருமான்சுவாமி. அரசியலில் இருந்து ஆன்மிகத்துக்கு எப்படி?



அண்ணாநகரில் உள்ள அவரது பங்களாவில் சந்தித்தோம். நமக்காக ஒரு ஆத்மார்த்தமானத் தேடலில் ஈடுபடும் முயற்சியாகக் கண்களை மூடிக்கொண்டு பேசத் துவங்கினார் 'ரிஷி'

"என்னைப் பொறுத்தவரை இந்தத் தேடல் பதினாறு வயதிலேயே துவங்கிவிட்டது. எங்கள் ஊர் மதுராந்தகம் அருகே உள்ள ஜமீன் எண்டத்தூர். அப்போது எங்கள் ஊருக்கு ஆந்திராவில் இருந்து பிரம்மானந்த யோகி என்ற துறவி வந்திருந்தார். எங்கள் ஊரில் பெரும்பாலான குடும்பங்கள் தெலுங்கு பேசும் வைணவக் குடும்பங்கள். அந்த ஆந்திர யோகி பல நாட்கள் எங்கள் ஊரில் தங்கி ப்ரவசனம் செய்தார். நிறைய பேருக்குத் தீட்சையும் வழங்கினார். என்னைப் போன்ற சிறுவர்கள் அந்த யோகி இருக்கும் பக்கம் தலை வைத்துக்கூட படுக்கவில்லை. ஆனால் எனக்கு 'தீட்சை' வாங்க வேண்டும் என்று தோன்றியது. வீட்டில் எதுவும் சொல்லாமல் நான் போய் அவரிடம் தீட்சை வாங்கி விட்டேன். தீட்சை என்றால் சகஜ வாழ்க்கை வாழ்ந்துகொண்டே தினசரி சில அனுஷ்டானங்களைச் செய்ய வேண்டும். அவ்வளவு தான்.

அப்புறம் சில காலம் விவசாயச் சங்கத் தலைவர் நாராயணசாமியின் தலைமையின் கீழ் செங்கல்பட்டு மாவட்டத்தில் விவசாயிகளை ஒருங்கிணைத்து பல போராட்டங்களை நடத்தினேன். 1984ல் நாராயணசாமி நாயுடு மறைவுக்கு பின் ஆறு வருட காலம் எந்தவிதமான பொது சேவையிலும் ஈடுபடாமல் தொழில்களைக் கவனித்துக் கொண்டிருந்தேன். 1991ல் பிராமண சங்கத் தலைவர் பாலசுப்பிரமணியம் என்னை ஜெயலலிதாவுக்கு அறிமுகம் செய்து வைத்தார். என்னை மதுராந்தகம் ஒன்றியச் செயலாளராகப் போட்டார் ஜெயலலிதா. 1992ல் மாவட்டச் செயலாளராக உயர்த்தினார். 1996 வரை அந்தப் பொறுப்பில் இருந்தேன். இடையில் கோ-ஆப்டெக்ஸ் தலைவராகவும் பொறுப்பு வகித்தேன். ரியல் எஸ்டேட் வியாபாரமும் செய்து வந்தேன். போயஸ்தோட்டமே கதி என்று கிடந்தேன்.

**"இப்படிப் பரபரப்பாக இருந்த நீங்கள் திடீரென்று அரசியலிலிருந்து பின் வாங்கியது ஏன்?"**

"நேர்மையாக இருக்க விரும்பும் யாரும் அரசியலில் இருக்க முடியாது என்பதைப் புரிந்து கொண்

டேன். 1996ம் ஆண்டு திருச்சியில் கட்சி மாநாடு நடந்தது. அப்போது அமைச்சர் இந்திரகுமாரி, மனசாட்சிக்கு விரோதமாகச் சில செயல்களைச் செய்யச் சொன்னார். நான் முடியாதென்று சொல்லிவிட்டேன். உடனே ஜெயலலிதாவிடம் 'கோள்' மூட்டி விட்டார். இதனால் எனக்கு மிக்க வருத்தம் ஏற்பட்டது. எனக்கும் இந்திரகுமாரிக்கும் வாக்குவாதம் ஏற்பட்டது. இதற்காக நான் கோபப்படவில்லை. மாநாட்டின்போது என்னைக் கூப்பிட்டு ஜெயலலிதா பேசினார். இதுபற்றி விளக்கமாக நான் இப்போது சொல்ல விரும்பவில்லை. ஆனால் எனக்கு மேல் இருந்த அமைச்சர் மற்றும் எனக்குக் கீழிருந்த அதிகாரிகள் ஆகியோர் மீது மட்டும் தனிக் கோர்ட்டில் வழக்கு நடப்பதிலிருந்தே 'நான் நேர்மையாக நடந்து கொண்டேன்' என்பது புரிய வரும்.

**"இது போன்ற மனச்சங்கடத்தால்தான் அரசியலிலிருந்து விலகி விட்டீர்களா?"**

"1996க்கு முன்பு ஒரு சம்பவம் நடந்தது. 1995ல் நாவலரைக் கூப்பிட்டு காஞ்சிபுரத்தில் ஒரு கூட்டம் போட்டோம். கூட்டம் நடந்து கொண்டிருந்தபோது எனக்கு மிகவும் அசௌகரியமாக இருந்தது. மனத்தில் நிம்மதி இல்லை. உடனே உள்ளூர் பொறுப்பாளர்களிடம் சொல்லி விட்டு, நாவலர்கூட இன்னமும் பேசாத நிலையில், நான் திருப்பதி சென்று விட்டேன். அங்கே காட்டேஜில் தூங்கிக் கொண்டிருந்தபோது வெங்கடேச பெருமான் கனவில் வந்தார். "பூந்தமல்லியில் நீ வாங்கி வைத்திருக்கும் நிலத்தில் 108 திவ்ய தேசங்களைக் கட்ட வேண்டும்" என்று கட்டளையிட்டார். தூக்கம் போய் எழுந்து கொண்டேன். எனக்கு வேர்த்து விறுவிறுத்து போய்விட்டது.



1996ல் திருச்சியில் மாநாட்டின்போது ஜெயலலிதா மற்றும் இந்திரகுமாரி ஆகியோரால் ஏற்பட்ட மனவருத்தத்தில் இடையிலேயே வேளாங்கண்ணி சென்று விட்டேன். காட்டேஜ்



"டைரக்டர் சார், உங்க படத்துக்குத் தியேட்டர்ல கூட்டமே வரலை."
"நிஜமாவா?"
"20 ரூபா டிக்கெட் 5 ரூபாய்க்கு பிளாக்கில வித்துபார்த்துட்டோம். அப்போகூட கூட்டம் வர்லை."
— சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

வராண்டாவில் படுத்துக் கொண்டிருந்தபோது மாதா கனவில் வந்தார். இது போன்ற பல ஆச்சர்யமான சம்பவங்கள் என் வாழ்க்கையில் நடந்தபடியால் அரசியலில் எனக்கு ஆர்வம் குறைந்து ஆன்மிகத்தில் அதிக நாட்டம் ஏற்பட்டு விட்டது.

**"திவ்ய தேசங்கள் கட்டும் பணி துவங்கி விட்டதா?"**

"இந்த வருடம்தான் அந்தப் பணிகள் துவங்கின. ஆனால் இடையில் நான் உணர்ந்து கொண்டது, மதங்கள் வெவ்வேறு. ஆன்மிகம் ஒன்றுதான் என்பதைத்தான். எனவே அனைத்து மதங்களைச் சேர்ந்தவர்களும் வழிபடும் வகையில் ஆலயம் கட்ட விரும்பினேன். 108 திவ்ய தேசங்கள்; ஆழ்வார்கள் 12பேர், சிவனடியார்கள் 63 பேர்கள் உட்பட கிறிஸ்து, முஸ்லீம், சிக்கிய, ஜைன, யூத, பஹாய் மார்க்கங்களைச் சேர்ந்த இறைத் தூதர்கள் அனைவருக்கும் ஒரே இடத்தில் ஆலயம் அமைக்கிறோம். தேவலோக ரிஷி பீடம் என்று அந்த இடத்திற்குப் பெயர் சூட்டியிருக்கிறோம்.

**"ஆலயங்கள் கட்டுவது என்றால் சாதாரண நிலையிலிருந்து கட்டிவிட்டுப் போகலாமே! காவி உடை, ரிஷி பட்டம் தேவைதானா?"**

'ரிஷி' என்றவுடன் கையில் கமண்டலத்தைத் தூக்கிக்கொண்டு காட்டை நோக்கிச் செல்லும் அந்தக் காலத்து ரிஷிகள் உங்கள் நினைவுக்கு வருவதில் தவறேதும் இல்லை. ஒவ்வொருவரும் இல்லற தர்மத்தை அனுசரித்துக் கொண்டே துறவு வாழ்க்கை வாழ வேண்டும். ஆன்மிகத்தில் பற்றுக்கொண்டு, வாழ்க்கையைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். மனத்தை ஒரு நிலைப்படுத்தும் தியானத்தில் ஈடுபட வேண்டும். 'ரிஷி' என்பது ஆன்மிக அமைப்பு ஒன்று எனக்குக் கொடுத்த பட்டம். காவி உடை ஓர் அடையாளம்தான். அதுகூட சமீபத்தில் நடந்த மாற்றம்தான். நான் எடுத்துக் கொண்டிருக்கும் பணியில் தீவிரமாக என்னை ஈடுபடுத்திக் கொள்ள எனக்கு நானே சங்கல்பம் செய்து கொண்டிருப்பதைக் காட்டும் தோற்றம் அது. அவ்வளவுதான்.

**"உங்கள் சர்வ மத ஆலயத்தின் சிறப்பு என்ன?"**

நமது உலகம், வாழ்க்கை எல்லாமே எட்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. நமது உடல் எட்டு பாகங்கள். இப்படி எந்தப் பொருளை எடுத்தாலும் அதிக பட்சம் எட்டு பாகங்கள்தான் இருக்கும். மூன்று பாகங்கள் முக்கியமானவை. உடல் என்றால் தலை, மார்பு, வயிறு ஆகியவைதான் அவை. எனவே எட்டாகப் பிரிந்திருக்கும் பூமியிலும் மூன்று முக்கியப் பகுதிகள் இருக்கின்றன. அந்த மூன்று முக்கிய பகுதிகளை அடையாளம் கண்டு, அந்த இடத்தில்தான் சர்வமத ஆலயம் கட்டப்பட்டிருக்கிறது. அனைத்துத் தெய்வங்களின் பார்வையும் மையமாகக் கட்டப்பட்டுள்ள மண்டபத்தில் படும்படி அமைக்க இருப்பதால் அங்கு தியானம், பிரார்த்தனை செய்பவர்களுக்குச் சகல சௌபாக்கியங்களும், அனைத்து துன்பங்களிலிருந்து விடுதலையும் கிடைக்கும்.

**"இப்போதெல்லாம் காவி உடை கட்டியவர்களின் மேல் மக்களுக்கு நம்பிக்கை குறைந்துகொண்டே வருகிறதே! 'போலி'கள் பெருகி விட்டார்களே!"**

"அன்னப் பறவை எப்படி தண்ணீரை தவிர்த்து, பாலை மட்டும் அருந்துகிறதோ அது போன்று நாம் நல்லவைகளையும், உண்மையான விஷயங்களையும் அடையாளம் காண வேண்டும். சத்தியம் - உண்மைக்கு இணை வேறெதுவும் இல்லை. பகவத்கீதையில் சொல்லாத விஷயத்தை எந்தக் காவி அணிந்திருக்கும் ஆன்மிகவாதியாவது செய்தால் அவர் 'போலி'தான். நான் அருள்வாக்கு சொல்வதில்லை. மந்திரம், தந்திரம் செய்வதில்லை. ஏவல், பில்லி, சூன்யம் என்ற பேச்சுக்கே இந்தப் பீடத்தில் இடம் இல்லை.

**"உங்கள் இலட்சியம்தான் என்ன?"**

"மொத்த மதங்களையும் இணைத்து தேவலோக மதம் ஒன்றை உருவாக்க வேண்டும். ஆன்மிகத்திலும் பொருளாதாரத்திலும் விழிப்புணர்ச்சி உருவாக்க வேண்டும். உடனடியாக ஜாதி - மத வேறுபாடுகளைக் களைந்து நல்லிணக்கம் ஏற்பட பாடு பட வேண்டும். இந்த நோக்கங்களை அடிப்படையாக வைத்து ஊருக்கு ஊர் அரி ஓம் மன்றம் என்று அமைக்கும் பணியில் இறங்கியிருக்கிறோம்.

**சந்திப்பு: ப்ரியன் ஸ்ரீநிவாசன்**
**படம்: ராஜன்**

# பிட்ஸ் பஜார்

## உலகின் ஹீரோ!

என்னதான் சமாதானப் பிரியர்கள் வெறுத்தாலும், தீவிரவாதத் தலைவர்களின் புகழ் பாடவும் சிலர் இருக்கத்தான் செய்கிறார்கள். ஒசாமா பின் லேடனும் விதிவிலக்கல்ல. அவரை 'உலகின் கதாநாயகன்' என்று போற்றும் இந்த டீ-ஷர்ட்கள் பாகிஸ்தானில் தயாரானவையாம். இதில் வரையப்பட்டுள்ளது ஆப்கானிஸ்தான் நாட்டின் வரைபடம்.

## காற்று போதும்!

பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த என்ஜினியர் கய் நெக்ரே என்பவர், இவர் சமீபத்தில் உருவாக்கியுள்ள புதுமையான கார் இது. என்ன புதுமை என்றால் இதை இயக்குவதற்குப் பெட்ரோல் போன்ற எந்த எரிபொருளும் வேண்டாம்.

## மாயமான யானை!

தும்பிக்கையைத் தூக்கி ஆட்டிவரும் யானைமீது கேரள மேஜிக் நிபுணர் முத்துகாட் வருகிறார். பார்வையாளர்கள் கூட்டம் அப்படியே வேடிக்கைப் பார்க்கிறது. யானையைச் சுற்றி ஒரு வேலி அமைக்கப்படுகிறது. 'இப்போது யானையை மாயமாக்கப் போகிறேன்' என்கிறார் முத்துகாட். ஒன் டூ த்ரீ... புஸ்... யானை மாயம்! பார்வையாளர்கள் மேடையில் ஏறி யானையைத் தேடுகிறார்கள். ம்ஹூம்



## கட்டணமாக எலி வால்கள்!

பிலிப்பைன்ஸில் உள்ள மணிலா நகரில் ''மிஸ் எலி'' என்ற போட்டி சமீபத்தில் நடைபெற்றது. இதில் கலந்து கொண்டது எலிகள் அல்ல. மனித அழகிகள் தான். பின் ஏன் அந்தப் பெயரென்றால் இதில் கலந்து கொள்ளும் ஒவ்வொரு பெண்மணியும் ஐம்பது எலிகளின் வால்களையாவது கட்டணத்தொகையாகச் செலுத்த வேண்டும். நாட்டின் விளைச்சலை எலிகள் பெருமளவு நாசமாக்குவதால் 'ஏதோ எங்களால் முடிந்த உதவி' என்று கூறுகிறார்கள் நிகழ்ச்சி அமைப் பாளர்கள்!

— குல்லூ

அழுத்தம் கொடுக்கப்பட்ட காற்று மட்டுமே போதுமாம். மேலும் சில சோதனைகளுக்குப் பிறகு இதை மார்க்கெட்டில் அறிமுகப்படுத்தப் போகிறார்கள்.



## செட் தாங்க!

படத்தில் நீங்கள் பார்க்கும் பங்களா எங்கே இருக்கிறது என்று கேட்டு விடாதீர்கள். செட்! யெஸ்; சினிமாவுக்கான செட். அஜய்தேவ்கான்-கஜோல் நடிக்க உருவாகியிருக்கும் 'ராஜு'சாச்சா' படத்திற்குத்தான் இந்த அசத்தல் செட். படத்திற்காக மும்பையில் பதினான்கு மாத உழைப்பில் செய்யப்பட்ட இந்த செட் உடைத்தெடுக்கப்பட்டு 95 லாரிகளில் பார்ட் பார்ட்டாக ஊட்டிக்குக் கொண்டு வரப்பட்டு ஒன்று சேர்க்கப்பட்டது. இதற்கான செலவு நான்கு கோடி ரூபாய். இந்தச் செலவில் நான்கு தமிழ்ப்படம் எடுத்திருக்கலாமோ!

காணவில்லை.

கடந்த 31ம்தேதி இரவு கிஷ்கிந்தாவில்தான் இந்தக் கூத்து. 'எப்படிங்க?' என்று கேட்டால், 'இது கொஞ்சம் காஸ்ட்லி சமாசாரம்' என்கிறார் முத்துகாட் சிரித் துக் கொண்டே.

— எம்



# நீங்கள் கேட்டவை

● இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு

? மில்லெனிய அமைதி விருது ஐ.நா. பொதுச் செயலர் கோஃபி அன்னானுக்கு வழங்கப்படுவது பற்றி...?

! தகுதியானவருக்கு, காலத்தே கொடுக்கப்பட்டிருப்பதில் நாமெல்லாம் ஹாப்பி ஆனான்!

● எஸ்.சேகர், சென்னை - 24

? பாரதியார் விருது பெற்ற கவிஞர் வாலி, பேராசிரியர் அன்பழகன் காலில் விழுந்துள்ளாரே?

! அடக்கமும் பணிவும் மனத்தளவிலும் சொல்வடிவிலும் செயல்பாட்டிலும் இருந்தாலே போதும். இன்று காலில் விழும் கலாசாரம் பிரதமர் வரை தொற்றிக் கொண்டிருக்கிறது. இது நாடகம் போல் ஆகிவிடுகிறதேயன்றி உண்மையான பணிவாகத் தோன்றவில்லை.



• கம்ப்யூட்டர் தத்துவம்

## பிரதமரின் விடுமுறைக்கு ஐம்பது லட்சம் செலவாகியுள்ளதே!

• ஓய்வின் விலை!

● மா. சிவசக்தி, நெமிலி

? கடந்த நாற்பது ஆண்டுகளில் காங்கிரஸ் அரசு செய்த தவறுகளைச் சீர்திருத்தும் பணியை பா.ஜ.க. அரசு மேற்கொண்டு வருகிறது என்று பா.ஜ.க. தலைவர் பங்காரு லட்சுமணன் கூறியிருப்பது குறித்து...?

! இவர்கள் செய்யும் தவறுகளை யார் வந்து சீர்திருத்துவதாம்?

● கன்னி. சுப்பிரமணியன், ஈரோடு - 4

? பிரதமரின் ஒரு வாரத்துக்கான ஓய்வு செலவு ஐம்பது லட்சத்துக்கு மேல் ஆகியுள்ளதே? பொருளாதாரத்தில் பின்தங்கிய நமது நாடு இது போன்ற செலவைத் தாங்குமா?

! பிரதமர்களும் மனிதர்களே. அவர்களுக்கும் ஓய்வு தேவைதான். ஆனால் செலவுகளைக் கட்டுப்படுத்த முடியும். அவர்களின் சில நாள் ஓய்வைக் கெடுக்காத முறையில் பிறர் அனுசரித்துப் போகவும் முடியும். இரண்டும் நடப்பதில்லை!

● டீ.எஸ்.டீ. ராயன், நல்லத்துக்குடி

? 'உலகத்தின் அடிப்படைப் பிரச்னைகளைக் கம்ப்யூட்டர் தீர்த்து வைக்கும் என்று நம்புவது அறிவீனமாகும். ஆறு வருடங்களுக்கு முன்பு நான் அப்படிப்பட்ட அறிவீனனாகத்தான் இருந்தேன்' என்கிறாரே பில் கேட்ஸ்?

! கம்ப்யூட்டர் ஓர் அற்புதமான கருவி. அதைப் பயன்படுத்துபவரின் ஆற்றலைப் பொறுத்துத்தான் பலன்தரும். கருவியே காரியங்களைச் சாதிக்காது. கம்ப்யூட்டர்களைப் பயன்படுத்தி உலகத்தின் அடிப்படைப் பிரச்னைகளைத் தீர்த்து வைக்கிற பொறுப்பு உலகத் தலைவர்களிடம்தான் இருக்கிறது. இதைத்தான் பில்கேட்ஸ் கூறியிருக்கிறார்.

● சு. கணேசன், பனங்கோட்டூர்

? 'சட்டமன்றத் தேர்தலில் சீட்டே கிடைக்காவிட்டாலும் எங்கள் ஆதரவு ஜெயலலிதாவுக்குத்தான்' என்று முன்னாள் பிரதமர் தேவகவுடா கூறியிருப்பது பற்றி...?

! அட தேவுடா! இப்படியொரு சரணாகதியா? அடிமைத்தனமா!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? எழுத்தாளர் அறந்தை நாராயணன் மறைவு குறித்து...?

! நடமாடும் சினிமா டைரக்டரி மறைந்தது.

● ஆர்.பி.ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்

? 'பட்ஜெட்டில் ஒதுக்கப்படும் நிதியில் பெரும்பான்மையை ஊழல் விழுங்கிவிடுகிறது' என்று வாஜ்பாய் கவலைப்படுவது பற்றி...?

! ஆடு - மாடுகள் பயிரை மேய்வதாகக் காவலாளியே புலம்புவது போன்றதுதான் இது. விட்டால், ஊழல் வரி விதிப்பார் போலிருக்கே!

● கி. துரைசாமி, மங்கலப்பட்டி

? மனைவி என்பவர் கணவனுக்கு அடிமையா? இல்லையா?

! "சுதந்தரத்துக்காகத் தியாகம் செய்வேன்; அடிமைத்தனத்துக்காக தியாகம் செய்ய மாட்டேன்!" - சொன்னது தியாக பூமி ஸ்ரீதரனின் மனைவி சாவித்திரி. இந்த டயலாக் ஒலித்து முக்கால் நூற்றாண்டாகிய பிறகும் இப்படியொரு கேள்வி கேட்கும் துரைசாமியே! நீங்கள் எந்த நூற்றாண்டில இருக்கிறீர்? இது இருபத்தோராம் நூற்றாண்டு ஐயா!

- தராசு



● நாடகம்!

● வி. சிவா,
மதுரை - 10

*? 2020ம் ஆண்டுக்குள் நம் நாட்டில் வறுமை நீங்கி விடும் என இந்திய அறிவியல் மாநாடு அறிக்கை கூறுகிறதே?*

! வறுமை நீங்கிவிடும் என்று கூறவில்லை; விஞ்ஞானத்தின் உதவியுடன் வறுமை நீங்கி, சுகாதாரம் பெருகி, மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதாகத் தீர்மானம் மேற்கொண்டிருக்கிறது. இனி மேல்தான் செயலுருப் பெற வேண்டும்.

● மில்லெனிய மனிதர்

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

*? தமிழக நாடக நடிகர்களுக்குப் பத்மஸ்ரீ விருது வழங்கப்பட வேண்டும் என்று கவிஞர் வைரமுத்து விடுத்துள்ள கோரிக்கை பற்றி...?*

! முதல்ல சொல்லிக்கற மாதிரி நாடகங்கள் வரட்டும்; அப்புறமா விருது பற்றிப் பேசலாம்.

● ஆர்.கே. லிங்கேசன், எம்.கே.புதூர்

*? உலகளவில் ஊழல் மலிந்த நாடுகளுள் இந்தியா அறுபத்தாறாவது இடத்தைப் பிடித்திருப்பதாக சந்திரபாபு நாயுடு நினைவூட்டியுள்ளாரே...?*

! "என்னைப் பிரதமர் ஆக்குங்கள். ஒரே ஆண்டில் இந்தியா முதலிடத்தைப் பிடிக்குமாறு செய்து காட்டுகிறேன்" என்று நம்மூர் அரசியல்வாதி மார்தட்டுகிறாராம்!

● ... உபதேசம்!

● கே.வி.ராமன், சென்னை - 73

*? புத்தாண்டு வாழ்த்துச் செய்தியில், ஒன்பது குழந்தைகளுக்குப் பெற்றோர்களான லாலுவும், ராப்ரி தேவியும், கு.க.வையும் அளவான குடும்பத்தையும் போற்றிப் பேசியிருக்கிறார்களாமே?*

! அறிவுரையில் இரண்டு விதம் : 1. என்னைப் பார்த்துத் திருந்துங்கள். 2. என்னைப் பார்த்தாவது திருந்துங்கள். லாலு-ராப்ரியின் அறிவுரை இரண்டாவது விதமோ...?

● அரசியல் அடிதடி!



● 'சீர்திருத்த' கருத்து!

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு

*? அமெரிக்க அதிபரின் ஆண்டுச் சம்பளம் 1¼ கோடியாமே...?*

! புத்திசாலியாக இருந்தால் சேமித்துச் சேர்க்கலாம்; கிளின்டன்போல் நிலை தடுமாறி நடந்தால் வழக்காடல்களில் அத்தனை பணத்தையும் தொலைத்துவிட்டு நிற்கலாம்!

❑ ரூ.50 பரிசு பெறுபவர் :
**கன்னி சுப்பிரமணியன்**
**215, பவானி மெயின்ரோடு,**
**அசோகபுரம், ஈரோடு - 4**

● கு. குமரேசன், பம்மல்

*? மணமகன் மணமகளுடன் மேடையிலேயே பேசலாமா...?*

! பேசத்தானே பேசுகிறார். மந்திரங்கள் மூலமாக. 'என் வீட்டு நலனுக்காகவும் குடும்ப நலனுக்காகவும் உலகத்தின் நன்மைக்காகவும், பெண்ணே உன் காலடி எடுத்து வை' - என்று சப்தபதி மந்திரம் உன்னதமான பேச்சுத்தான்.



● ஊருக்கு...

● ஆர்.ஆர். சாமி, திருவண்ணாமலை ★

*? ஆசையே அறிவுக்குக் காரணம் என்றார் பகவான் புத்தர். ஆனால், ஆசையின் காரணம் எது?*

! மனம் என்னும் மாயப் பிசாசுதான்.

★ ரூ.25 பரிசு பெறுபவர் :
**ஆர்.ஆர். சாமி,**
**ஸ்ரீ ரமணாசிரமம்,**
**திருவண்ணாமலை- 606 603**

# இப்படியா...?




"கபாலி தன் வீட்டு வாசல்ல பிரபல ரவுடினு எழுதிப் போட்ருக்கானே.. ஏன்?"

"அவன் வீட்லயே ரெண்டு தடவை திருட்டுப் போயிருச்சாம்!"

"கள்ள நோட்டு அடிச்சு எப்படி மாட்டினே?"

"ஒரு பக்கம் நூறு ரூபாவும் இன்னொரு பக்கம் ஐம்பது ரூபாவும் தப்பா பிரிண்ட் ஆயிடுச்சு."

– பா. ஜெயக்குமார்





"குழந்தைகள் நல டாக்டர்னா இப்படியா?"

"என்னாச்சு?"

"விரல் சப்பிக்கிட்டு இருக்காரே!"

– அம்பை தேவா



"நேத்து என்னோட மாமியாரை ஒரு மாடு முட்ட வந்துச்சு..."

"ஐயையோ... அப்புறம் என்ன ஆச்சு?"

"ஒடிஞ்சுபோன கொம்போட மாடு எங்கேயோ ஓடிப்போச்சு!"

– புளியரை கணேசன்

இங்க வந்துடு! பால், தயிர், வெண்ணெய், நெய் எல்லாம் தரேன்..!

மியாவ் மியாவ் வா...

மறுபடியும் 21-ம் தேதி அன்னிக்கு உனக்குப் பால் தரேன், வந்துடு..!




2001 ஜனவரி 21
விக்ரம தை 8
மலர் : 59
இதழ் : 25

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## தேர்தல் வியூகங்கள்

பாட்டாளி மக்கள் கட்சித் தலைவர் டாக்டர் ராமதாஸ் தி.மு.க தலைவரைச் சந்தித்துப் பேசியிருப்பது முதற் பக்கச் செய்தியாக முக்கியத்துவம் பெற்றுள்ளது! ஒரே அரசியல் கூட்டணியைச் சேர்ந்தவர்கள்தான் இருவரும் என்ற போதிலும் அவர்களுடைய சந்திப்பு பல கேள்விகளை எழுப்புகிற அளவுக்கு அமைந்திருக்கிறது இன்றைய அரசியல் சூழல்!

தேசிய ஜனநாயக கூட்டணியில் இடம் பெறும் பாட்டாளி மக்கள் கட்சிக்கும் தமிழக ராஜீவ் காங்கிரசுக்கும் ஜன்மப் பகை உருவாகி, ஒரே அமைப்பில் இரு கட்சிகளும் தொடர்ந்து இடம் பெற முடியாது என்கிற அளவுக்கு அது வளர்ந்து நிற்கிறது. இரு தலைவர்களும் ஒருவரையொருவர் அறிக்கைகளால் தாக்கிக் கொள்வதும் சொற்போர் நிகழ்த்துவதும் சிரிப்புக்கிடமாகி விட்டன.

இந்த விரிசலைப் பயன்படுத்திக்கொண்டு, எதிர் அணியின் பிரதான கட்சியான அ.தி.மு.க, பாட்டாளி மக்கள் கட்சிக்கு வலை விரிக்கக் கூடும்.

அ.தி.மு.க தலைவி பேரிலும் அவரது சகாக்கள் பேரிலும் உள்ள ஊழல் வழக்குகள் ஏராளம். அவற்றிலிருந்து அவர் தப்ப ஒரே வழி, ஆட்சிக்கு வந்து அவற்றை வாபஸ்




பெற வழி வகுப்பதுதான். அதை நடத்திக் கொள்வதற்காக ஜெயலலிதா என்ன விலையும் கொடுக்கத் தயாராக இருப்பார் என்பதில் துளியும் சந்தேகம் இல்லை.

இந்நிலையில் தி.மு.க தலைவர் கருணாநிதியின் பொறுப்புதான் அதிகமாகிறது. தமது கட்சி கௌரவத்துடன் ஜெயித்து, சட்டமன்றத்தில் அதிக இடங்களைப் பிடிக்க வேண்டும் என்கிற இயல்பான எண்ணத்தையும் பின்னுக்குத் தள்ளிவிட்டு, தமிழகத்தின் ஒருமித்த நலன் கருதி கலைஞர் செயல்பட்டாக வேண்டியிருக்கிறது.

ராம்தாசுடன் மீண்டும் ஜனவரி இறுதியில் பேச்சுவார்த்தை நடக்கும்' என்பதற்குப் பதிலாக 'சந்தேகத்துக்கிடமின்றி பா.ம.க தேசிய ஜனநாயக கூட்டணியில் தொடர்ந்து இடம் பெறும்' என்று கலைஞரால் அறிவிக்க முடிந்திருக்குமானால் அது தேர்தலில் அவருடைய வெற்றிக்கு அஸ்திவாரம் அமைக்கும் அறிவிப்பாகவே இருந்திருக்கும்.

இப்போதோ, பா.ம.க தேசிய ஜனநாயக முன்னணியில் நீடித்திருக்கும் என்ற உத்தரவாதம் இல்லை;

இன்னொரு பக்கம் ம.தி.மு.க தலைமை இருபது தொகுதிகள் எதிர்பார்ப்பதாகச் செய்தி வெளிவருகிறது;

பா.ஜ.க, தமிழகத்தின் அறுபது சட்டமன்றத் தொகுதிகளில் கூட்டங்கள் நடத்தி தேர்தலுக்குத் தயார்ப்படுத்திக் கொள்ளப் போவதாகச் சொல்கிறது.

மொத்தத்தில் ஒரே கூட்டணியைச் சேர்ந்த இம்மூன்று கட்சிகளும் பிரதம கட்சியான தி.மு.கவுடன் தொகுதி ஒதுக்கீடு பேரம் பேசத் தயாராகிக் கொண்டிருக்கின்றன!

இதற்கிடையே மதச்சார்பற்ற கூட்டணி என்ற போர்வையில் அ.தி.மு.கவுடன் கூட்டுச்

சேர்ந்துள்ள கம்யூனிஸ்டுகள் 'தி.மு.கவைத் தோற்கடிப்பதே இலக்கு' என்கிறார்கள். ஜெயலலிதாவோ, கருணாநிதியைச் சிறையில் வைத்து திருப்தி கொள்ளப் போவதாக ஏற்கெனவே அறிவித்துவிட்டார்!

தொகுதிகளுக்காகப் பேரம் பேசும் கூட்டணி கட்சிகள்; தோற்கடிக்கத் துடித்துக் கொண்டிருக்கும் எதிரணி! இவற்றுக்கிடையே சிக்கியுள்ள முதல்வரின் நிலைமை மகிழ்ச்சிக்குரியதல்ல.

மிக கவனமாகவும் ராஜதந்திரத்துடனும் செயல்படுவதுடன் சட்டமன்றத் தேர்தலில் அ.தி.மு.க அணியை ஜெயிக்க விடாமல் செய்து தமிழகத்தைக் காப்பாற்ற கருணாநிதியால் மட்டுமே இயலும்.

அதற்கான வியூகங்களை அவர் உடனே அமைப்பது அவசியம். இதற்கு முழுமையான ஒத்துழைப்பைக் கூட்டணியில் உள்ள இதர கட்சிகள் அவருக்கு வழங்க வேண்டும். 'நமக்கு எத்தனை தொகுதிகள்?' என்பதைவிட 'தி.மு.க. கூட்டணிக்குச் சட்டமன்றத்தில் எத்தனை இடங்கள்?' என்பதே முக்கியம். இதை அனைவரும் உணர்ந்து செயலாற்ற வேண்டும்.

முதுகு சவாரிதான் என்றாலும் காங்கிரஸ் (இப்போது த.மா.கா) எந்த திராவிட கட்சியுடன் இணைகிறதோ, அக் கட்சியே தமிழக சட்டமன்றத்தில் இதுவரை பெரும்பான்மை பெற முடிந்திருக்கிறது. இந்த வோட்டு கணக்குதான் 'ஆட்சியிலே பங்கு' என்ற வாதத்தை முன் வைக்க த.மா.காவுக்குத் துணிவையும் அளித்துள்ளது. அ.தி.மு.க இதற்கு இணங்காத நிலையில் தமிழக அரசியலில் திடீர்த் திருப்பங்களுக்கு இன்னமும் வாய்ப்பு உள்ளது. அதனை சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள தி.மு.க தலைமை சாணக்கியத்துடன் செயல்பட வேண்டும். ○

“சீக்கிரமா வந்து பாரேன்! பவழமல்லி எப்படி பூத்து புஷ்பப் பாவாடை விரிச்சிருக்குத் தெரியுமோ?”

இப்படித்தான் பாபுஜி - அதுதான் என் பாட்டி - தினமும் காலையில் என்னை எழுப்புவாள். அப்போது குழந்தையான எனக்கு தோட்டத்திற்குப் போவதென்றால் ஒரே குஷி. பாட்டி சொல்லிக் கொடுத்த பாட்டை அவளோடு பாடிக் கொண்டே பூக்கூடையை எடுத்துக்கொண்டு போவேன்.

“போவோம் வாராய் சகியே!
புஷ்பவனம் தன்னை நாடி,
காவலர்கள் வருகுமுன்னே
பூக்களெல்லாம் கொய்திடுவோம்!”

வாசலில் அற்புதமான கோலம் ‘போட்டிருப்பாள் பாபுஜி. தினமும் புது கற்பனைகள் மிளிரும். ஒருநாள் புள்ளி நட்சத்திரங்கள் கண் சிமிட்டும். மற்றொரு நாள் தாமரைகளாகச் சொரிந்திருக்கும். அல்லது அன்னக் கிளிகள் பறக்கத் தயாராக சிறகுகளை விரித்திருக்கும். பண்டிகை நாட்களானால் கேட்கவே வேண்டாம். பெ-ரீ-ய்ய கல்யாணக் கோலம் சிவப்புக் கறையுடன் கட்டங்களில் பறங்கிப் பூக்கள் மலர ஜொலித்துக் கொண்டிருக்கும். பாபுஜியின் கோலங்களைப் பார்ப்பதற்கென்றே யார், யாரோ, சிலசமயம் வெளிநாட்டார் கூட வருவார்களென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

பவழ மல்லிகளைப் பொறுக்கியதும் ஒரு ஈர்க்குச்சியில் துளையிட்டு வாழை நாரை அதில் நுழைத்து பூ கோக்கச் சொல்லித் தருவாள். இரண்டு மாலைகள். ஒன்று தெய்வத்திற்கு. மற்றொன்று தெய்வத்திற்கும் மேலாக அவள் வாழ்நாள் முழுதும் போற்றிய கணவருக்கு.

அந்தக் கணவரைப் பற்றி பேசும்போது பாபுஜியின் குரலில்தான் என்ன பெருமிதம்! ஒரு தஞ்சாவூர் குக்கிராமத்தில் பதினாலு வயதுச் சிறுமியாக கிருஷ்ணமூர்த்தியைக் கைப்பிடித்தபோது அவர் ஒரு சாதாரணக் குடும்பத்தின் இரண்டாவது பிள்ளையாகவும், ஒழுங்காக விவசாயம் செய்யாமல் மதராஸ் பட்டிணத்தில் பத்திரிகை காரியாலய (“நவசக்தி”) ஊழியராகவும் இருந்தார். முரட்டுக் கதர் அணிந்த மாப்பிள்ளை. தேச சேவை, மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு என்றெல்லாம் அக்கிரஹாரத்திற்குப் புதிதான புரட்சிகரமான கருத்துக்களை உதிர்த்து, திகைக்க வைத்து, ஊர்க்காரர் கண்டனத்திற்கும் ஆளானார். விரைவிலேயே அவர் இதழியல் உலக சாதனையாளராகவும், தமிழ் எழுத்தாளர்களில் ஒரு தாரகையாகவும் பிரகாசிப்பார் என்று அப்போது யாருக்குமே தோன்றியிருக்காது.

பட்டிணவாசம் முதலில் பிரமிக்க



வைத்தாலும் சீக்கிரமும் ருக்மிணி தன்னை கணவருக்கு ஏற்ற மனைவியாக மாற்றிக் கொள்வதில் கவனம் செலுத்தினாள். படிப்பறிவு இல்லாத மனைவி கணவரிடமே அரிச்சுவடி பயின்று, பிறகு அக்கம் பக்கத்து பள்ளி மாணவர்கள் உதவியுடன் எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டு விட்டாள். கிருஷ்ணமூர்த்தி எழுதுவதை எப்படியாவது படித்துவிட வேண்டும் என்ற ஆவலே அவளை இந்த முயற்சியில் ஈடுபடுத்தியிருக்க வேண்டும். மேலும் கணவரி

## கௌரி ராம்நாராயண்

டமிருந்து அவர் போற்றிய பாரதியார் பாடல்களையும் கற்றார். அரசியல் நிலைமை பற்றியும் அறிந்துகொண்டாள்.

கல்கி சிறையிலிருந்து பாபுஜிக்கு எழுதிய கடிதங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு கம்ப ராமாயணப் பாடல் இருக்கும். "நான் திரும்பி வரும் முன் இதை நீ மனப்பாடம் செய்து விடு" என்ற கட்டளை வேறு! டி.கே.சி போன்ற இலக்கிய அன்பர்கள் குடும்ப நண்பர்களானவுடன் பாபுஜியின் கலாரஸனையும் விரிவடைந்தது. தொண்ணூறு வயதிலும் பாபுஜி பாரதி, கம்பன் கவிதைகளையும், நாடோடிப் பாடல்களையும் ஒரு அக்ஷரம் விடாமல் பாடுவதைக் கேட்டு எத்தனையோ பேர் ஆச்சரியப்பட்டிருக்கிறார்கள். அதுவும் அவர் செய்யும் ஆசிர்வாதத்திற்கு ஒரு ரசிகக் கும்பலே உண்டு. "நித்திய கல்யாணியாய், மங்களச் செல்வியாய், தையல்நாயகி போல தொங்கத் தொங்க தாலியுடன் பேரோடும், புகழோடும், அளவற்ற செல்வத்தோடும், முடிவில்லா கீர்த்தியோடும்..." என்று தொடங்கினால் அது ஏதோ பண்டைய காலப் புலவர் கூற்று போல நீண்டுகொண்டே போகும்!

# பாபுஜி!

கணவரின் சகவாசத்தால் மட்டுமல்லாமல், இயல்பாகவே பாபுஜிக்குக் கதை சொல்வதில் திறமை, ஆசை. பேரன் பேத்திகளை உட்கார வைத்து, கல் சட்டியில் பிசைந்த தயிர்சாதத்தை கையில் உருட்டிப் போட்டு, அதன் நடுவே ஒரு சொட்டு வற்றல் குழம்பு விட்டு பாபுஜி கதை சொன்னால் நாங்கள் எல்லாரும்வேறு ஏதோ ஒரு உலகத்திற்குப் போய் விடுவோம்.

மணவாழ்க்கையின் தொடக்க காலத்தில் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் நடத்திய எளிய வாழ்க்கையைப் பொன்னாட்களாக பாபுஜி கருதினாள். அந்த நாட்களில் பாபுஜிக்கு ராஜாஜியின் மகள்கள் நாமகிரி, லக்ஷ்மி இருவரும் நண்பர்கள். இவர்கள் ஒருத்தருக்கொருத்தர் எழுதிய கடிதங்களைப் படித்தால் இப்படி ஆண்டாண்டுகளாக நீடித்த ஆழமான நட்பு கொள்ள முடியுமா என்று நமக்குக் கொஞ்சம் வியப்பாகத்தான் இருக்கும். "உன் தாத்தா மறைந்த உடன் நான் பித்துப் பிடித்ததுபோல ஆகி விட்டேன். பாப்பா அத்தை (நாமகிரி)தான் தினமும் வந்து என்னை காரில் பீச்சுக்கு அழைத்து போய் நடக்க வைத்து தேறுதல் சொல்லுவார்" என்று பாபுஜி தழுதழுத்த குரலில் நினைவு கூர்வாள்.

"தனக்குச் சரியென்று எது தோன்றுகிறதோ, அதைத்தான் உங்க தாத்தா செய்வார். ராஜாஜியே எதிர்த்தாலும் தயங்க மாட்டார்" என்று பெருமையோடு உதாரணங்கள் சொல்லுவாள்.

பாபுஜியிடம் இந்தத் துணிவும் தன்னம்பிக்கையும் பிடிவாதமும் நிறையவே இருந்தன. உழைப்புக்கு அஞ்சவே மாட்டாள். 24 மணி நேரம் அவளுக்குப் போதாது. 'போராடிக்கிறது' என்ற சொல் அவள் அகராதியிலேயே இல்லை. எப்படி இருக்கும்? எந்த காரியம் செய்தாலும் இதை 'விட உயர்வாகச் செய்ய முடியாது என்று மெச்சும்படி செய்வது அவளுடைய குறிக்கோள் – அது அறையைப் பெருக்குவதானாலும் சரி, மைசூர்பாக் கிளறுவதானாலும் சரி, அல்லது பேத்தியின் தலையில் தாழம்பூ வைத்துப் பின்னி விடுவதானாலும் சரி.

எழுபத்தைந்து ஆண்டுகள் சென்னைவாசியாக இருந்தாலும் பாபுஜியின் பேச்சிலும் பண்பிலும் கிராம வாடைதான். "பிரியம் காட்டத் தெரிய வேண்டும். உற்றார் உறவினர் என்று கொண்டாட வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே இருப்பார். பாபுஜிக்கு மூன்று தலைமுறை நண்பர்கள் வேறு. குடும்பத் தலைவியாக இருந்த காலத்தில்கூட அவர் நண்பர்களுக்காக நேரம் ஒதுக்கத் தவறவில்லை. அந்த நண்பர் ஒவ்வொருவரும் பாபுஜிக்கு நாம்தான் 'ஸ்பெஷல்' என்று நினைத்துக் கொண்டிருப்பார்கள். கல்கியின் நாவல்களை ஆராயும் மாணவியைப் பற்றிய எல்லா விவரங்களும் பாபுஜிக்குத் தெரியும். பிறகென்ன? இருவரும் தோழிகளாகி விடுவார்கள்! "நீ எப்படி இவ்வளவு நன்றாகத் தேர்ந்த பழமா பார்த்துப் பார்த்து வாங்கிண்டு வரே!" என்று மற்றொரு பெண்ணைச் சிலாகிப்பாள். இளம் தாய்க்கு, குழந்தை அடிக்கடி அழுதால் செய்ய வேண்டிய வீட்டு வைத்தியம் சொல்லுவாள். (அது பலிக்கவும் செய்யும்!)

ஒரு சங்கீத வித்வானோ நடனமணியோ வந்துவிட்டால் பாபுஜிக்கு உற்சாகம் கரைபுரண்டு ஓடும். அவர்களுடைய கலையை நன்றாகப் புரிந்துகொண்டு அனுபவித்ததைக் கூறி புகழ்ந்து பாராட்டுவாள்.



ஒருமுறை பக்கத்துவிட்டு இளைஞர் வாசு, தாம் நண்பர்களுக்கு ஜாலியாக பார்ட்டி கொடுக்கும்போது "ஓபனர் இருக்கிறதா? லிம்கா பாட்டில் திறக்க வேண்டும்," என்று கேட்டுக் கொண்டே வந்தார். பாபுஜி ஓபனரை அவர் கையில் கொடுத்துவிட்டு "இதோ பார்! லிம்கா எல்லாம் அதிகம் குடிக்கக் கூடாது தெரியுமா?" என்று ஜாடையாகக் கண்டித்தவுடன் வாசு பெரிதாகச் சிரித்துக்கொண்டே போய் விட்டார். அன்றிலிருந்து அவர் பாபுஜி விசிறியாகிவிட்டார்.

கல்கி நூற்றாண்டு விழா நடந்த சமயம் ஒரு நிருபர் பாபுஜியைப் பேட்டி காண வந்தார். தம் மண வாழ்க்கை பற்றி பல தகவல்கள் தெரிவித்துவிட்டு பாபுஜி பெருமூச்சுடன் கூறி முடித்தது இது தான்: "45 வயதில் கணவரை இழந்தேன். கணவருடன் வாழ்ந்த நாட்களைவிட அவரைப் பிரிந்து வாழ்ந்த நாட்கள் அதிகம். அதற்காக ரொம்ப துக்கப்பட்டேன். ஆனால் இப்போது கல்கி நூற்றாண்டு விழாவை, தமிழ்நாட்டில் மட்டுமில்லை, இந்தியா முழுதிலும், வெளி நாடுகளிலும், இப்படி சீரும் சிறப்புமாய்க் கொண்டாடுவதைப் பார்க்கும்போது, இவ்வளவு நாள் உயிர் வாழ்ந்தோமே என்று ஆண்டவனுக்கு நன்றி கூறுகிறேன்!"

தம் சம்பந்தி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியிடம் சொல்லுவார், "நான் ரொம்ப கொடுத்து வைத்தவள். உலகப் புகழ் பெற்ற கணவர், உலகப் புகழ் பெற்ற சம்பந்தியாக்கும் எனக்கு!"




பாபுஜி இப்போது இல்லை என்று நினைத்தாலே ஒரு சகாப்தம் முடிந்து விட்டது என்ற சோகம் கவிகிறது. ஞாயிற்றுக்கிழமை பிற்பகலில் (7.1.2001), தமது தொண்ணூற்றி ஒன்றாவது வயதில், ஒரு கனிந்த பழம் நழுவி விழுவது போல அமைதியாக, மகன் ராஜேந்திரன், மருமகள் விஜயா, இவர்கள் கைகளைப் பிடித்துக் கொண்டே, பாபுஜி கணவர் இருக்கும் உலகிற்குச் சென்றுவிட்டார்.

நான் பத்திரிகைத் துறையில் பணி செய்வது பற்றி பாபுஜிக்கு ரொம்ப திருப்தி. "நீயும் உன் தாத்தாவைப் போலவே புகழடைந்திருப்பாய், சாதனைகள் புரிந்திருப்பாய். ஆனால் என்ன செய்வது? ஒரு கவலையும் இல்லாமல் உன் வீட்டைப் பார்த்துக்கொண்டு உன்னையும் நன்றாக கவனித்துக் கொள்ள என்னைப் போல ஒரு மனைவி உனக்கு இல்லையே!" என்று ஒருமுறை பாபுஜி என்னிடம் குறும்பாகச் சொன்னதை நினைத்தால், கண்ணில் தளும்பும் நீருடன் என் முகத்தில் தோன்றுவது புன்னகைக் கீற்று. அதைத் தானே பாபுஜியும் விரும்பியிருப்பாள்?

படம்: யோகா

# KALKI SHOPPING PAGE

நில்! கவனி!! வெற்றிகொள்!!!



# இன்றும் நாளை நமதே!

• முரளி

"மாஜினிக்குப் புதுமையான எண்ணங்கள் தோன்றியபோது அவருக்கு வயது பத்து. இத்தனை கவிதைகள் எழுதிமுடித்துவிட்டு, மகாகவிபாரதி தன் கடைசி மூச்சை விட்டபோது வயது முப்பது ஒன்பது. ஆங்கில மொழியைத் தன் கவிதையால் செழுமைபடுத்திவிட்டு கவிஞர் கீட்ஸ் மறித்தபோது வயது இருபத்து நாலு. பட்டுக் கோட்டை கல்யாணசுந்தரம் தன் பாட்டுத் திறத்தால், இந்த வையத்தை ஆண்டு முடித்த போது அவருக்கு முப்பத்திரண்டு வயது. ஏசுபெருமான் சிலுவை சுமந்து ஒரு பெரிய தத்துவத்தையே இந்த உலகுக்குத் தந்துவிட்டு, முடிந்து போனபோது அவருக்கு வயது முப்பத்துமூன்று. தாகூருக்குக் கவிதை எழுத, மொழியுடன் பயிற்சி ஏற்பட்டபோது அவருக்குப் பதினோரு வயது."

–வைரமுத்து உணர்ச்சி கொப்பளிக்கப் பட்டியலிட்டபோது வெளிப்பட்ட தீப் பொறிச் சொற்களில் மயிலை பாரதிய வித்யா பவன் அரங்கின் ஏ.ஸி. குளுமை அடங்கித் தணிந்து போய்விட்டது!







• வைரமுத்து

கல்கி-ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் இணைந்து வழங்கிய இளைஞர் திருவிழாவின் துவக்கம் ராஜ்குமார் பாரதி இறைவணக்கம் பாடியபோதே களைகட்டியிருந்தது. 'ஜெயமுண்டு பயமில்லை மனமே!' என்று கம்பீரமான உத்வேகத்துடன் பாடியவர், நிகழ்ச்சிக்கு அவரது கொள்ளுத் தாத்தா மகாகவி பாரதியின் ஆசிகளையும் அவரை ஆதர்சமாகக் கொண்ட அமரர் கல்கியின் ஆசிகளையும் ஒருங்கே பெற்றுத் தந்திருந்தார்.

புத்தாயிரம் ஆண்டு முழுவதும், மாதம் ஒரு நிகழ்ச்சியாக, இளைஞர்களுக்கென்று ஒரு விசேஷமான திருவிழா நடத்திட கைகோத்திருந்தன கல்கி இதழும், ஸ்ரீகிருஷ்ணா ஸ்வீட்ஸ் நிறுவனமும்.

• மேடையில்...




மேடையில் இந்தியன் வங்கியின் முன்னாள் சேர்மன் ராகவன், கவிப்பேரரசு வைரமுத்து, கல்கி ராஜேந்திரன் ஆகியோர் இருக்க, நிகழ்ச்சியின் நோக்கத்தை விளக்கிச் சொல்லி, வரவேற்புரை நிகழ்த்தினார் 'ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்' முரளி.


- பார்வையாளர்கள்...

"ஆதிகாலம் தொட்டே மனிதனால் செய்ய முடியாது என நினைக்கப்பட்ட பல காரியங்களை, மனிதன் ஒவ்வொரு கால கட்டத்தில் செய்து முடித்திருக்கிறான். உடைக்கவே முடியாத மலைகளை உடைத்து, சுரங்கப்பாதை அமைத்துள்ளோம். கடக்க முடியாத கடல்களை, பாடுபட்டு கடந்திருக்கிறோம்; பறக்க முடியாத உயரங்களில் பறந்து சிகரம் தொட்டிருக்கிறோம். இவற்றையெல்லாம் எப்படி சாதிக்க முடிந்தது?

"இந்தக் கேள்விக்கு மிக எளிய விடைதான் 'நில்! கவனி!! வெற்றிகொள்!!!' சாதிப்பதற்கான உழைப்பைத் துவக்குவதற்கு முன் நில்! நிற்பது பயணத்தின் தேக்கம் இல்லை; பாய்வதற்கான பதுங்குதல்! தறிகெட்டு ஓடும் காளையை அடக்குவதற்கு, காளையின் வாலைப் பிடித்துப் பயனில்லை. அடக்கும் சூட்சமம் எதில் இருக்கிறது என்று கவனி! மூக்கணாங் கயிறுதான் சூட்சமம் என்று புரிந்து கொண்டு, செயல்படுவோம் வெற்றி கொள்வோம்!" என்று அந்த ஞாயிறு (7.1.2001) காலை தொலைக்காட்சியைப் புறக்கணித்து வந்திருந்த கூட்டத்தை வரவேற்றார் முரளி.

மூக்கணாங்கயிறு உவமை வைரமுத்துவின் உரையிலும் இடம் பெற்றது:

"எதையும் வெற்றி கொள்ளுவதற்குச் சூட்சமம் தெரிந்திருக்க வேண்டும். மனிதன் மூக்கணாங்கயிற்றால், காளையை அடக்குகிறான்; பெரிய யானையைச் சிறிய அங்குசத்தால் அடக்கி விடுகிறான்" என்று பேசிய கவிஞரின் உரையில் ஏராளமான குட்டிக் கதைகள்:

சர்க்கஸில் ஸ்டூலின் மேல் ஒரு யானையை நிற்க வைத்தான் ஒரு ரிங் மாஸ்டர். 'இதிலிருந்து என்ன தெரிகிறது?' என்று ஒரு அமெரிக்கச் சிறுவனைக் கேட்ட போது, அவன், மனிதனால், யானையைச் சுலபமாக அடக்கி, ஒரு ஸ்டூல் மீது நிற்க வைத்துவிட முடியும் என்று தெரிகிறது' என்றான்.

"ஒரு ரஷ்யச் சிறுவனைக்கேட்டபோது, 'ஸ்டூல் யானையைத் தாங்குமளவுக்குப் பலமானது' என்றான். ஒரு ஜெர்மானியச் சிறுவனைக் கேட்டபோது, இது ஒரு அறிவு கெட்ட யானை. அதன் பலம் என்னவென்று அதற்குத் தெரியவில்லை. அதனால் தான் அடங்கி நிற்கிறது' என்றான்.

"அதுதானே உண்மை?

"நம்முடைய பலம் நமக்குத் தெரிந்திருந்தால், அடிமைத்தனம் வந்திருக்குமா? இருள் வந்திருக்குமா?

"அமெரிக்காவுக்கு நான் சென்றிருந்த போது, அவர்கள் ஒன்றைச் சொன்னபோது, கேட்டுச் சிரித்தேன். பின்னர் விமானத்தில் வரும்போது, அதை நினைத்து அழுதேன். ஒரு அமெரிக்கர், ஒரு இந்தியர் இருவரது



**"நாளை நமதே! என்பதைத் தூக்கி எறிந்துவிட்டு இன்றும் நமதே என்ற நம்பிக்கை கொள்ளுங்கள்" என்று கூறி கவிப் பேரரசு தன் ஊக்க உரையை முடித்தபோது, அரங்கில் இருந்த அனைவருக்கும் ரீ சார்ஜ் செய்யப்பட்ட பாட்டரிபோன்ற உணர்வு ஏற்பட்டது.**

முன்பும் பிரம்மா தோன்றினாராம். அவரிடம், அமெரிக்கர், "என் நாட்டிலே ஏகப்பட்ட குழப்பங்கள்; என் நாடு எப்போது உருப்படும்?'என்று கேட்க, பிரம்மா 'இன்னும் நாற்பத்தேழு ஆண்டுகள் கழித்து' என்று பதில் சொன்னாராம்!

"பிரம்மாவின் பதிலைக்கேட்டு, 'ஐயோ! அதைக்காண நான் இருக்க மாட்டேனே!' என்று அழுதாராம் அமெரிக்கர். அதே கேள்வியை பிரம்மாவிடம் இந்தியர் கேட்டபோது, பிரம்மா அழ ஆரம்பித்தாராம். 'ஏன் பிரம்மா அழுகிறீர்கள்?' என்று இந்தியர் கேட்டபோது, பிரம்மா சொன்னாராம், "அதைக்காண நானே இருக்க மாட்டேனே!'

'ஆனால் நான் ஒன்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். மேலை நாடுகள், நம்மை, நம் அடிமை மனப் பான்மையை, நேற்றுவரை எள்ளி நகையாடிக் கொண்டிருந்தார்கள் என்பது உண்மைதான்! ஆனால், கணிப்பொறி அறிவில், இந்தியா உலகிற்கே தலைமை தாங்கும் என்கிற உண்மையை உணர்ந்து, இன்று நமக்கு சல்யூட் செய்கிறார்கள் அவர்கள்.

"பில்கேட்ஸிடம் ஒருமுறை, 'உங்கள் கம்பெனியில் ஏராளமான இந்தியர்கள் வேலை பார்க்கிறார்களே! இவர்கள் அனைவரும் நாளை அறிவுத்தெளிவோடும், செல்வ வளத்தோடும் இந்தியாவுக்குத் திரும்பிப் போய்விட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்? என்று ஒருவர் கேட்டாராம்.



"பில்கேட்ஸ் சொன்னாராம், அப்படி யொரு நிலைமை ஏற்பட்டால், நான் அமெரிக்காவில் இருக்க மாட்டேன்; நானும் இந்தியாவுக்குப் போய்விடுவேன் என்று! இந்தியாமீது பில்கேட்ஸுக்கு இருக்கும் நம்பிக்கை நமது அரசியல்வாதிகளுக்கு இல்லையே! என்ன செய்வது?

தோழமையுடன் தொடர்ந்தார் கவிஞர்:

"இளைஞர்களுக்கு நான் முக்கியமான ஒன்று கூற விரும்புகிறேன். தயவு செய்து உடல் நலம் பேணுங்கள். பதினெட்டு வயதில் ஓர் இளைஞன், கணிப்பொறிக்கு முன்னால் கடும் பாடத்திட்டத்துக்கு முன்னால், தன் இரவுகளையும், பகல்களையும் இழந்து இழந்து, உடல் மெலிந்து, சுருங்கிப் போகிறான். உடம்பு சுருங்குகிறபோது, உள்ளம் சுருங்குகிறது. உள்ளம் சுருங்குகிறபோது, மூளை சுருங்கிப் போகிறது. இதனால் அவனது சக்தி அவனுக்கும், இந்த மண்ணுக்கும் பயன்படாமலேயே போய்விடுகிறது. கரிகால் சோழன் ஆறரை அடி உயரமும் முன்னூற்றைம்பது பவுண்டும் இருந்ததாக அறிஞர் ராகவய்யங்கார் குறிப்பிடுகிறார். ஆனால், இன்று நாம், மூளையை மட்டுமே பயன்படுத்துவதால், அதன் அறிவுக்கேற்ப உடல் சுருங்கிவிட்டது.

"புதிய நூற்றாண்டில் ஏராளமான மாற்றங்கள் வரும். மனிதர்கள் தங்கள் கண்ணுக்கேற்ற புருவம், நெற்றிக்கு ஏற்ற மூக்கு, கன்னத்துக்கு ஏற்ற உதடு என்று முகத்தின் எந்தப் பகுதி பிடிக்கவில்லையோ, அதை விருப்பப்படி மாற்றி அமைத்துக் கொள்ள முடியும். தோலின் நிறமிகளை மாற்றி, வெள்ளையோ, கறுப்போ, விரும்பிய தோலைப் பெற முடியும். இன்னும் எத்தனை எத்தனை மாற்றங்களும் நிச்சயம்.

"எத்தனை மாற்றங்கள் வந்தாலும்கூட, இளைஞர்களே! உங்களிடம் நான் விரும்பி, வேண்டிக் கேட்டுக் கொள்வது ஒன்று உண்டு. ஆண்டாண்டு காலமாகக் கட்டிக் காக்கப்பட்டுவரும் இந்த மண்ணுக்கே உரிய அடிப்படை மரபுகளைவிட்டு வெளியேறி விடாதீர்கள். இன்றும், மேற்கத்திய நாடுகள், நம்மைப் பார்த்து அச்சப்படுகின்றன என்றால் அதற்கு ஒரே காரணம்தான் உண்டு: எத்தனையோ மேற்கத்திய சூறாவளிகள் இந்தியாவை வந்து தாக்கிய போதிலும், நம் மண்ணின் மரபுகள்- மனித நேயம்- கைவிடப்படாமல் காப்பாற்றப்படுவதுதான்!

"இளைஞர்களே! நேரத்தை வீணாக்காதீர்கள்! ஒவ்வொரு நிமிடமும் ஒரு தங்கச்

சொட்டு! ஒவ்வொரு நிமிடத்தையும் அறிவுக்குச் செலவிடுங்கள்; உழைப்புக்குச் செலவிடுங்கள்; மற்றவர்களுக்குப் பயன்படும்படியாய்ப் பயன் படுத்துங்கள்!

"உங்கள் முயற்சியில் நீங்கள் தோல்வியடையலாம்; அதனால் மனம் தளராதீர்கள். தோல்வி என்ற படிக்கட்டுகள் மூலம் மாடியில் ஏறியவன்தான் நிம்மதியாக இருக்கிறான். அவனுக்குத் தெரியும், படிகள் எத்தனை என்று.

"சாதனைக்கும், முதுமைக்கும் சம்பந்தமில்லை. இளைஞர்களே! நீங்கள் நாற்பது வயதுக்குள் உங்கள் தளத்தை நிறுவிக் கொள்ளாவிட்டால், உங்களால் இனை விட்டுப் பரவ முடியாது. சாதித்தவர்கள் எல்லாம், பத்துப் பதினைந்து வயதிலேயே தங்கள் பணியைத் தொடங்கிவிட்டார்கள். பதினைந்து வயதில் எவனொருவன் கவிஞனாக, கலைஞனாக, ஓவியனாக, எழுத்தாளனாக விதை விதைத்துக் கொள்ளுகிறானோ, அவனால்தான் தனது முப்பத் தைந்து, நாற்பது வயதில் சிகரங்களைத் தொட முடியும்" என்று இளைஞர்களைத் தட்டிக் கொடுத்த கவிஞர், பெற்றோர்களையும் நின்று கவனிக்க வைத்தார்:

"பெற்றோர்கள், தங்கள் பிள்ளைகளின் பத்தாவது வயதில், அவர்களுக்குரிய துறை எது என தேர்ந்தெடுக்க அனுமதி கொடுத்து விட வேண்டும். என் மகன்கள் விஷயத்தில் நான் இதைத்தான் செய்தேன். 'எல்லா வாசல்களையும் உனக்காகத் திறந்து விட்டிருக்கிறேன், நீ எதையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்; ஆனால், சாதிக்க வேண்டும் என்ற உத்வேகத்துடன் அதில் நீ நுழைய வேண்டும்' என்று நான் அவர்களுக்குக் கூறினேன்.

"உங்கள் பிள்ளை, உங்களைவிட புத்திசாலி என்பதை நீங்கள் ஒப்புக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் பிள்ளைகளுக்குத் தன்னம்பிக்கை பிறக்காது.

"வாழ்க்கையில் நமக்கு மிகத்தேவையானது தன்னம்பிக்கைதான். தன்னம்பிக்கை இருக்கிறபோது ஒரு மனிதன் இரட்டிப்பாகிறான்; அவநம்பிக்கை கொள்ளுகிறபோது அவன் பாதியாகிறான். இன்றைய இளைஞர்களுக்கு நாம் ஊட்டவேண்டியது

**பதில்கள், ஒரு மர்மத் தொடர்கதையின் விறுவிறுப்புடன் அமைந்திருந்தன. நகைச்சுவை, இலக்கிய நயம், பயனுள்ள தகவல்கள் என்று ஒவ்வொரு கேள்விக்கும் ஒருவிதமான பதில்.**



தன்னம்பிக்கைதான்!

இளைஞர்களே! உலகம் என்பது உங்கள் மாநிலம் மட்டுமோ, உங்கள் நாடு மட்டுமோ அல்ல. மொத்த பூமியுமே உங்களுடையதுதான்! அறிவை நெறிப்படுத்துங்கள்; நேரத்தை வீணாக்காதீர்கள்; மூத்தவர்களை மதியுங்கள்; உங்கள் வாழ்க்கை உங்கள் கையில் என்று நம்புங்கள்.

"நாளை நமதே! என்பதைத் தூக்கி எறிந்துவிட்டு இன்றும் நமதே என்ற நம்பிக்கை கொள்ளுங்கள்" என்று கூறி கவிப் பேரரசு தன் ஊக்க உரையை முடித்தபோது, அரங்கில் இருந்த அனைவருக்கும் ரீ சார்ஜ் செய்யப்பட்ட பாட்டரி போன்ற உணர்வு ஏற்பட்டது.

ஊக்க உரை இப்படி உசுப்பி விட்டது என்றால், அடுத்து இந்தியன் வங்கியின் முன்னாள் தலைவர் டி.எஸ். ராகவன் சுயதொழில் குறித்து ஆற்றிய ஆக்க உரை, தடுமாறிக் குழம்பி நிற்கும் இளைய தலை முறைக்கு வழிகாட்டும் கலங்கரை விளக்க மாக அமைந்தது.

அதனைத் தொடர்ந்து, பார்வையாளர்கள் கேள்விகள் கேட்க, அவற்றுக்கு டி.எஸ். ராகவன் தன் பல்லாண்டு வங்கிப் பணி அனுபவத்தில் அளித்த விளக்கங்கள், ஒரு மர்மத் தொடர்கதையின் விறுவிறுப்புடன் அமைந்திருந்தன. நகைச்சுவை, இலக்கிய நயம், பயனுள்ள தகவல்கள் என்று ஒவ்வொரு கேள்விக்கும் ஒருவிதமான பதில்.

**(டி.எஸ். ராகவனின் ஆக்க உரை மற்றும் கேள்வி-பதில் பகுதி பற்றிய விரிவான ரிப்போர்ட் அடுத்த வாரம்)**

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

**ஃப்ரெண்ட்ஸ் படத்தில் அறிமுகமாகியிருக்கும் விஜயலட்சுமி, தமது ஃப்ரெண்ட்ஸ் பற்றி சொல்கிறார்.**

"திருநெல்வேலி அருகிலிருக்கும் ஆரல்வாய் மொழிதான் சொந்த ஊர். அப்பா ஒரு ஆட்டோ மொபைல் இன்ஜினியர். ஸ்பேர்பார்ட்ஸ் பிசினஸ் செய்ய பெங்களூருக்குக் குடி பெயர்ந்துவிட்டார். பிறந்தது, வளர்ந்தது, படித்தது எல்லாம் பெங்களூரில். வீட்டில் ஆட்சி



# விஜியின் ஃப்ரெண்ட்ஸ்!

மொழி தமிழ். வெளியே கன்னடம். கடமுடா என்று தபேலா வாசிப்பது போல ரிதமான மொழி. கிண்டர் கார்டனில் கன்னடத்தில் டீச்சர் கேட்கும் கேள்விகளுக்குத் தமிழில் பதில் சொல்வேன். நான் ஏதோ வேற்றுகிரக மொழி பேசுவது போல மற்ற வாண்டுகள் என்னைக் கண்டு சிரிப்பார்கள். இதனாலேயே என்னோடு பழக மற்ற பிள்ளைகள் பயப்படும். நல்ல வேளையாக கன்னடம் கட்டாய மொழி என்பதால் மூன்றாம் வகுப்பிலேயே சரணமாகக் கன்னடம் பேசத் தொடங்கினேன்.

"க்ளுனி கான்வெண்டில் பத்தாம் வகுப்பு வரை படிப்பு. அங்கே நான் ஒரு குறும்பு ஸ்பெஷலிஸ்ட். கிளாஸ் டீச்சர், சிஸ்டர்ஸ், மதர்ஸ் என்று எல்லோரையும் இமிடேட் செய்து மிமிக்ரி பேசி, நடித்துக் காட்டுவேன். படிப்பிலும் முதல் ஐந்து ரேங்கிற்குள் வந்து விடுவேன். இதனால் எனது வகுப்பில் நான்தான் சென்டர் ஆஃப் அட்ராக்ஷன். ஒரு முறை வகுப்பில் மாணவிகள் என்னை வம்பில் மாட்டிவிட்டு விட்டார்கள். 'எல்லோரையும் போல் நடிக்கிறாயே, மதர் சுப்பீரியரைப் போல் நடி பார்க்கலாம்' என்றார்கள். மதர் சுப்பீரியரைப் போல மோனோ ஆக்டிங் செய்து காட்ட, பயங்கர கை தட்டல்.

"மறுநாள் காலை அசெம்பிளியில்



ஒட்டு மொத்த பள்ளியும் திரண்டிருக்க, பிரேயர் முடிந்தது. மதர் சுப்பீரியர் மைக்கைப் பிடித்து, 'டென்த் ஸ்டாண்டர்டு 'பி' செக்ஷன் விஜயலட்சுமி உடனே ஸ்டேஜுக்கு வா' என்று கூப்பிட்டதும், ஒட்டமும் நடையுமாக அந்த மாணவி போனாள், "இப்போது என்னைப் போலவே இந்த மாணவி நடித்துக் காட்டுவாள்" என்றதும் எனக்கு பகீர். வத்தி வைத்தவர்கள் டி செக்ஷனை பி என்று சொல்லிவிட்டார்கள். இல்லை மதரின் காதில் டி, 'பி' என்று விழுந்து விட்டதா, நான் திகிபிடித்து நின்று கொண்டிருந்தேன். அந்தப் பெண்ணோ 'எனக்கு நடிக்கத் தெரியாது மதர்' என்று அழ ஆரம்பித்து விட்டாள். அதற்குள் அந்தப் 'பிறவி நடிகை' நான்தான் என்று காற்று வேகத்தில் மதரின் காதுக்குச் செய்தி செல்ல, அடுத்து நான் அழைக்கப்பட்டேன். செல்லமாக என் காதைப் பிடித்துத் திருகிய மதர் 'எங்கே நடி பார்க்கலாம்' என்று சொல்ல, அசெம்ப்ளியில் அவர் சீரியஸாக பிரேயர் செய்வதைப் போல நான் அதே மாடுலேஷனுடன் ஜெபம் செய்தேன். மதர் உணர்ச்சி வசப்பட்டு கண் கலங்கி விட்டார். அசெம்பளி முடிந்ததும், அலுவலகத்திற்கு அழைத்துப் போனவர், கட்டை விரல் அளவு பைபிளை பரிசாகக் கொடுத்து, நீ பெரிய ஆளாக வருவாய் என்று பாராட்டினார்.

"பள்ளி இடைவேளையில் 'பி' செக்ஷன் விஜயலட்சுமியைக் கேண்டீனில் கண்டுபிடித்து சாரி சொன்னேன். அந்த கணம் முதல் எங்கள் நட்பு தொடங்கியது. வீட்டிற்குத் தெரியாமல் அபர்ணா தியேட்டரில் படம் பார்ப்பது, லால்பாக்கில் பவனி வருவது என்று நெருக்கமானோம். இண்டர்மீடியட் முடித்த பிறகு பெங்களூர் ஏரோநாடிக் ஸ்கூலில் இருவரும் சேர்ந்து படித்து, ஒரே விமானத்தை அருகருகே அமர்ந்து ஓட்டுவது என்ற எங்கள் 'வுமன் பைலட்' கனவு தகர்ந்துவிட்டது. அவள் மும்பைக்குக் குடிபெயர்ந்துவிட்டாள். நான் சினிமாவுக்குக் குடிபெயர்ந்து விட்டேன்.

**நா**ன் நடிகையாகக் காரணம் எனது பரதநாட்டிய குரு பத்மினி ரவி. இவரை குரு என்று சொல்வதைவிட அருமையான தோழி என்றுதான் சொல்ல வேண்டும். தஞ்சை பாணி பரதத்தை எனக்கு இரண்டே வருடங்களில் சொல்லிக் கொடுத்தார். உனது உடல் அமைப்பிற்குப் பரதம் நளினமாக இருக்கிறது. எனவே மைசூர் பாணி பரதத்தையும் கற்றுக் கொள். பிறகு குச்சு



புடி கலபமாக கற்றுக் கொள்வாய் என்று ராஜ லட்சுமி என்ற குருவிடம் சேர்த்துவிட்டார். மத்திய அரசின் சிசிஆர்டி பிரிவில் பரதம் ஆராய்ச்சி மாணவருக்கு என்னை மனு போட வைத்து, பரதத்தின் இன்னொரு உலகிற்குக் கூட்டிச் சென்றார். பெங்களூர் கலாக்ஷேத்ராவில் எனது நடனத்தைப் பார்த்த, பிரபல சினிமா தயாரிப்பாளர் 'காட்ரா கட்டா பிரசாத்' 'சினிமாவில் நடிக்க விருப்பமா?' என்றார். பயந்து மறுத்தேன். காரணம் எனது ஒரே சகோதரி உஷா, கல்லூரியில் இரண்டாம் ஆண்டு படித்துக் கொண்டிருந்தபோது, நடித்த விளம்பரப் படத்தை பார்த்து திடீர் சினிமா வாய்ப்பு வர, அம்மா அப்பா மறுக்க, அக்கா பிடிவாதம் பிடித்து நடிகையானாள். அவள் ஃபேஷன் டிசைன் படித்து பெரிய ஆளாக வேண்டும் என்பது அம்மாவின் விருப்பம். நடிப்பிற்காகப் படிப்பை பாதியில் விட்டுவிட்டாள். பிறகு சினிமாவும் வேண்டாம் என்று கல்யாணம் செய்து கொண்டு சென்னையில் செட்டில் ஆகிவிட்டாள். இப்போது அவள் திருமதி உஷா ராஜ்பாபு.

"அவளைத் தொடர்ந்து நான் எப்படி?.. வீட்டில் சம்மதம் கிடைக்குமா? குழப்பத்தோடு இருந்த எனக்கு ரசிகர்களின் கூட்டத்தில் திக்கித் திணறியபடி நான் ஆட்டோகிராப் போடும் கனவு வந்து ஆசையூட்டியது. அப்பா, அம்மாவிடம் பயந்து கொண்டே கேட்டேன். 'உனக்குத்தான் நாட்டியம் தெரியும், நடிக்கவும் தெரியுமே தாராளமாகச் செய்' என்று உடனே பச்சைக் கொடி காட்டுவார்கள் என்று நான் நினைக்கவே இல்லை. 'பெத்தினர்டியாலடு' (நடிகன்) படத்தில் நக்மாவுக்குச் சகோதரியாக அறிமுகமானேன். அடுத்து வரிசையாக கதாநாயகி வாய்ப்புகள். 'அருணோதயம்' படத்தில் மூன்றாம் பிறை ஸ்ரீ தேவியைப் போல மனநலம் குன்றிய பெண்ணாக நடித்தது கர்நாடகம் முழுக்க எனக்கு ரசிகர்களை வாரிக் குவித்தது.

"ஆயிரக் கணக்கில் காதல் கடிதங்கள் வந்தன. அதற்குக் கவர்ச்சிகரமான என் படத்தை அனுப்பி ரசிகர்களை ஏமாற்ற விரும்பவில்லை. 'பீயிங் வித் எ பெஸ்ட் பிரண்ட்' என்று கையெழுத்திட்டு எனது புகைப்படத்தை அனுப்புகிறேன்.

"கடந்த ஐந்து ஆண்டுகளில் இருபது படங்களில் நடித்து, கன்னட சினிமாவில் நம்பர் ஒன் இடத்தைப் பிடித்துவிட்டேன். எனது திறமைக்கு வாய்ப்புத் தரும் கதையுள்ள படங்களில் மட்டுமே நடிக்கிறேன். பணத்திற்காக வெறும் டூயட் ரோல்கள் நடிப்பதில் விருப்பம் இல்லை. ஒவ்வொரு படத்தில் நடிப்பதற்கு முன்பும் சென்னை வந்து அக்காவுடன் எனது கேரக்டர் பற்றி டிஸ்கஸ் செய்வேன். அவள் தரும் டிப்ஸ் எனக்கு ஹார்லிக்ஸ் மாதிரி. அக்கா ஒரு நல்ல ஃப்ரெண்டும்கூட.

"எனக்கு ஃபிலிம் வீணடிக்கப் பிடிக்காது. ஒரே டேக்கில் ஓகே ஆகிவிடும்படி நடிப்பதுதான் பிடிக்கும். எனது நடிப்பின்மீது நம்பிக்கை வைத்து பாசிலின் சிடர் சித்திக், ஃப்ரெண்ட்ஸ் படத்தில் வாய்ப்புக் கொடுத்திருக்கிறார். அடுத்து விஷ்வா இயக்கத்தில் 'கும்மாளம்' தமிழ் படத்தில் நடிக்கிறேன். குணால், லிவிங்ஸ்டன் படங்களில் நடிக்கவும் அழைப்பு வந்திருக்கிறது.

"எனக்கு நானேதான் மேக்அப் போட்டுக் கொள்வேன். எனது கேரக்டருக்கு தகுந்தாற்போல் காஸ்ட்யூம்களை நானே முடிவு செய்கிறேன். எனது காரை நானே ஓட்டுகிறேன். காதல் பிடிக்கும். காதலர்களைப் பிடிக்கும். சென்னை மெரினா கடற்கரையிலும், பெங்களூர் லால் பார்க்கிலும் ஜோடி ஜோடியாக அமர்ந்திருக்கும் அசைவக் காதலர்களைப் பிடிக்காது.

"காதலிக்க நேரம் இல்லாததால் மொழிகளைக் காதலிக்கிறேன். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி ஆகிய மொழிகள் பேசத் தெரியும். மராத்தி, பிரெஞ்சு இரண்டையும் இப்போது கற்றுக் கொள்கிறேன். ஒரு பதினைந்து மொழிகளையாவது கற்றுக் கொள்ள ஆசை. அமெரிக்க ஆங்கிலம், இங்கிலாந்து ஆங்கிலம் இரண்டிலுமே நான் சரளம். ஆர்னால்டு ஸ்வாஸ்நேகர் அல்லது புருஸ்வில்ஸ்கூட நடிக்க எதிர்பாராமல் அதிர்ஷ்டம் அடித்தால் அதை விட முடியுமா?"

சந்திப்பு : **விஷுவல்தாசன்**



"ஒரு பிரதமர்கிட்ட விருது வாங்கப் போறோம்; அந்தப் பெரிய மனுஷன் கால்ல விழுந்து ஆசிர்வாதம் வாங்குவோமேன்னு அவர் கால்ல விழுந்தா, டொபக்குன்னு என் காலைத் தொட்டுக் கும்பிட்டுட்டாரு... எனக்குக் கையும் ஓடலை; காலும் ஓடலை, புல்லரிச்சுப் போச்சு."

– பிரதமர் வாஜ்பாய் தமது காலைத் தொட்டுக் கும்பிட்டதை இப்படி உணர்ச்சி பொங்கக் கூறினார் ஐம்பத்தைந்து வயதான சின்னப்பிள்ளை.

இந்த ஆண்டிற்கான மத்திய அரசு மனித வள மேம்பாட்டுத் துறையின் "மாதா ஜீஜாபாய் ஸ்ரீ சக்தி புரஸ்கார் விருது" ஒரு லட்சம் ரூபாயையும், மும்பை இந்தியத் தொழில் வர்த்தகக் கழகத்தின் மகளிர் பிரிவின் "ஜானகி பேபி பஜாஜ் புரஸ்கார் விருதான ஒரு லட்சம் ரூபாயையும் பெற்றிருக்கிறார் இந்தச் சின்னப்பிள்ளை.

மதுரை மாவட்டம் அழகர் கோவில் செல்லும் வழியில், 'அப்பன் திருப்பதி'யிலிருந்து சுமார் இரண்டு கி.மீ தூரத்தில் உள்ள "புல்லுச்சேரி" கிராமம்தான் சின்னப்பிள்ளையின் ஊர்.

தமக்குக் கிடைத்த இரண்டு லட்சம் ரூபாயையும் தாம் சார்ந்து பணி செய்யும் 'வைகை வட்டாரக் களஞ்சியம்' என்ற அமைப்பிற்குக் கொடுத்திருக்கிறார்.

"நானா இந்த விருது வாங்கலை... எல்லோரும் சேர்ந்து செயல்பட்டுத்தான் வாங்கியிருக்கோம். அதனாலே எல்லாருக்கும் இந்த விருது சேரும்... அவங்க சார்பாக நான் வாங்கியிருக்கேன். அவ்வளவுதான். என்னைப் போல தாழ்த்தப்பட்ட பெண்கள்... இந்த சமுதாயத்திலே இன்னும் உயராமல் இருக்காங்க... அவங்களையும் களஞ்சியம் திட்டத்திலே சேர்ந்து உயர்த்துறதுக்கு இந்தப் பணம் பயன்படட்டுமே." என்று சொல்லும் சின்னப்பிள்ளையின் வீடு... இன்னும் ஓலைக் குடிசையாகத்தான் இருக்கிறது. அதை மாற்றியமைக்கும் முயற்சிக்குக்கூட விருது தொகையிலிருந்து ஒரு பைசாகூட பயன்படுத்தப் போவதில்லை என்று தெரிவித்தார்.

"பதினோரு வருஷமாக இந்த களஞ்சியம் அமைப்பிலே உறுப்பினராக இருக்கேன்... ஆறு மணிக்குப் போனால் இரவு எட்டு மணி, பத்து மணிக்குக்கூட வீட்டுக்கு வந்திருக்கிறேன்... ஒவ்வொரு ஊரா போயி பெண்களை இந்த அமைப்பிலே சேரச் சொல்லிப் பேசுவேன்... பல நாட்கள் வீட்டிலே என் பிள்ளைகளும், என் கணவரும்கூட சத்தம் போட்டிருக்காங்க... பிழைக்கிற பிழைப்பை


• சின்னப்பிள்ளையின் வீடு

• சின்னப்பிள்ளை

# "நானா இந்த விருதை வாங்கியிருக்கேன்!"

விட்டுட்டு, இதெல்லாம் தேவையான்னு... பல நாட்கள் என் மேலே கோபத்திலே இரவு சாப்பாடு எடுத்து வைக்க வீட்டிலே ஆள் இல்லாம விளக்கை அணைச்சுட்டு எல்லோரும் படுத்துடுவாங்க... நான் பட்டினியா வெளியிலேயே படுத்திருவேன். அணு அணுவாக அழுதுருக்கேன்... அதையெல்லாம் கடந்துதான் இந்த அமைப்பின் வளர்ச்சியிலே பாடு பட்டிருக்கேன்...'' என்று சொல்லும் சமூக அக்கறையுள்ள இந்தப் பெண்மணியிடம், தமிழக முதல்வரிடம் 'பொற்கிழி' பெறப் போவது குறித்து கேட்ட போது... நம்மிடம் கேட்டார், "அப்படின்னா என்னங்க? எனக்கு என்னதுன்னு தெரியலையே.''

"கார்த்தி காயினி... அப்பன் திருப்பதி பஸ் ஸ்டாண்டிலிருந்து நம்ம பெண்கள் களஞ்சியத்துக்கு வர அரை கிலோமீட்டர் நடக்க வேண்டியிருக்கு... பஸ்ஸை இங்கே நிறுத்தச் சொன்னால் மாட்டேங்கிறாங்க... அதை நீங்க எழுதித்தாங்க; நான் கையெழுத்துப் போட்டு கலைஞரைப் பார்க்கறப்போ கொடுக்கிறேன்.. வேற நமக்கு என்ன வேணும்?'' - என்ற போது பெண்கள் முன்னேற்றத்தில் சின்னப்பிள்ளையின் அக்கறை தெரிந்தது...

சின்னப்பிள்ளையின் டெல்லி, மும்பை அனுபவத்தைக் கேட்டோம்.

"எல்லோரும் கும்பிட்டு என் கால்ல விழுந்தாங்க... கட்டிப்பிடிச்சு முத்தம் கொடுத்தாங்க... மும்பையில் எனக்கு விருது கொடுத்தவங்க மகாத்மா காந்தியோட பேத்தியாம்... என்னை அவங்க வீட்டுக்குக் கூட்டிட்டுப் போனாங்க... என்கூட வந்த சுமதி (களஞ்சிய ஒருங்கிணைப்பாளர்)தான்... அவங்க பேசுறதுக்கெல்லாம் விளக்கம் சொன்னாங்க... இவ்வளவு நல்ல மனுஷங்களையெல்லாம் அந்தப் பக்கம் இருக்காங்கங்கிறது இப்பத்தான் எனக்குத் தெரியுது... உங்க கடனை அடைச்சு... உங்களுக்கு வீடு கட்டுறதுக்குப் பணத்துக்கு ஏற்பாடு செய்றேன்னு காந்தியோட பேத்தி சொன்னாங்க...'' என்று சொன்ன சின்னப்பிள்ளை, ''அப்படி கொடுத்தாங்கன்னா வேண்டாம்னு சொல்லிருவேன்... சொந்த உழைப்பிலே உள்ள சந்தோஷம் அதிலே வருமா?'' என்று கேள்வி கேட்டார்.

"அப்பன் திருப்பதி'' பஸ் ஸ்டாண்டில் நின்றபோது சில பெரிசுகள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"களஞ்சிய அமைப்புக்காகப் புல்லுச்சேரி கண்மாய் மீன்பாசி குத்தகையைத் தனி நபரிடமிருந்து, தனி ஒரு ஆளா நின்னு சின்னப்பிள்ளை ஏலம் எடுத்து நடத்தினாங்க. அப்ப அந்தம்மா சந்திச்ச துயரம் சொல்லி மாளாது... சின்னப் பிள்ளையை மிரட்டினாங்க! மல்லிகான்னு ஒன்பதாவது படிச்ச பொண்ணு உடல் நலமில்லாமல் இறந்து போச்சு... அதைக்கூட சின்னப் பிள்ளை மேலே கொலை கேஸா மாத்த முயற்சி செஞ்சாங்க... அதை எதிர்த்து நின்னு ஜெயிச்சுச்சு... களஞ்சியம் வளர்ச்சியிலே... சின்னப்பிள்ளை எடுத்து வைத்த ஒவ்வொரு அடியும் ஒவ்வொரு விதமான 'அடியைச்' சந்திச்சிருக்கு...''

பாரதியின் கனவு விதைகளில் ஒன்று புதிய நூற்றாண்டில் முளைத்திருக்கிறது... சின்னப் பிள்ளையின் வடிவத்தில்...!

கட்டுரை, படங்கள்: **கி. சிங்காரவடிவேல்**




• பிரதமரிடம் பெற்ற விருதுடன்...

# என் அருமைப் பெண்ணுக்கு...



**ந**லமா கண்ணா

முதல் முறையாய்க்
கூட்டை விட்டு
வெகுதூரம் தனியே
பறக்கையில்
உன் பவழமல்லிச் சிறகு
வலிக்கும் தினம்
நீவி விட மறக்காதே

நட்பான அந்த அணில்
நிதம் வந்து பார்க்கிறது
நீ திரும்பி விட்டாயா என
மூன்று வாரப் பிரிவு
என்பது தெரியாது போல

ஒவ்வோர் அறையாய் வீடெங்கும்
உனைத் தேடி அலைகிறது
நம் நாய்க் குட்டி
எங்கும் படர்ந்தொலிக்கும் உன்
காலடிச் சத்தமும் சிரிப்பலையும்
அதற்கும் கேட்குமா

நம் கணினி அறைச் சன்னல்
கண்ணாடிக் கதவைத்
துடைக்க உத்தேசமில்லை இப்போது
அன்று நீ மழை பார்க்கையில்
பதிந்த பிஞ்சு விரல் தடங்கள்
நடுவே சின்ன மூக்குநுனியிட்ட பொட்டு
இன்னும் புதிதாய் அதன் மேல்

நீ எழுதத் தூண்டிய
கவிதை வரிகளின் நிழல்
இதமாய் இருக்கிறது பகலில்
உன் நினைவுடன் நான்
ஒதுங்கிக் கொள்ள

அப்பாதான் மிகவும் பாவம்
என் கண்ணீரில் தோய்ந்த
உன் ஞாபகங்கள்
இரவுதோறும் அவர்
சுமைதாங்கித் தோளில்

இதற்கு மேல் ஏனோ
என்னிடம் வார்த்தைகள் இல்லை
எழுதாத மௌனத்தையும்
புரிந்து கொள்பவள் நீ
மறக்காமல் பதில் போடு.

— காஞ்சனா தாமோதரன்



கவுடா பேட்டி

# "அ.தி.மு.க.வுக்குப் பிரசாரம் செய்வேன்!"

**முன்னாள் முதல்வர் ஜெயலலிதாவையும் மூப்பனாரையும் சந்தித்துவிட்டு சென்னை பாலாஜி கிளினிக்கில் நடந்த நிகழ்ச்சி ஒன்றிற்கு வந்தார் முன்னாள் பிரதமர் தேவ கவுடா. ஏனிந்த திடீர் சந்திப்பு? அவரைக் கேட்டோம்.**

***"மூப்பனார், ஜெயலலிதா இரண்டு பேரையுமே சந்தித்துப் பேசி இருக்கிறீர்களே! இதன் பின்னணி என்ன?"***

"தேசிய அளவில், பி.ஜே.பி. காங்கிரஸ் இரண்டு கட்சிகளையும் எதிர்த்து, மூன்றாவது அணி அமைக்கும் முயற்சி ஒருபுறம் நடைபெற்றுக் கொண்டிருந்தாலும், தமிழ்நாட்டைப் பொறுத்தவரை நிலைமை வேறு. அ.தி.மு.க தலைமையிலான கூட்டணியை ஓரணியில் திரட்டி, மதவாதக் கூட்டணியினை எதிர்ப்பது தான் சரி என்பது என் கருத்து. அதற்கான முயற்சியில்தான் நான் ஈடுபட்டிருக்கிறேன்.

***"அப்படியென்றால் வரும் தமிழக சட்டசபைத் தேர்தலில், அ.தி.மு.க கூட்டணிக்காகப் பிரசாரம் செய்வீர்களா?***

"நிச்சயமாக..."

***"முன்னாள் பிரதமர்கள் (வி.பி. சிங், குஜ்ரால், சந்திரசேகர், தேவகவுடா) அடிக்கடி கூடிப் பேசுகிறீர்கள்! கூட்டறிக்கை விடுகிறீர்கள்...***

"இந்திய நாட்டின் விவசாயம், சிறு தொழில்கள், உள்நாட்டுப் பொருளாதாரம் ஆகியவற்றைப் பாதுகாக்க அரசாங்கம் அளித்த வாக்குறுதிகள் நிறைவேற்றப்படவில்லை. இதைத் தட்டிக் கேட்க வேண்டியது எங்கள் கடமை என்று நாங்கள் கருதுகிறோம். எனவே அரசாங்கத்தின் தவறான கொள்கைகளை, அதன் பாதகமான விளைவுகளைப் பற்றி மக்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்கள் மத்தியில் ஒரு கருத்து உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறோம்.

***"ஒரு முன்னாள் பிரதமர் என்கிற முறையில், கடந்த ஐம்பது ஆண்டுகளில் இந்தியாவில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"***

"இந்தியா பல்வேறு துறைகளிலும், பிரம்மாண்டமான அளவில் முன்னேற்றங்களைக் கண்டுள்ளது. இன்னும் சில துறைகளில் திட்டமிட்ட அளவுக்கு, எதிர்பார்த்த அளவுக்கு, நாம் முன்னேறவில்லை என்பதையும் ஒப்புக் கொண்டேயாக வேண்டும். உதாரணம் சொல்ல வேண்டுமானால், சுதந்தரமடைந்த தருணத்தில் உணவுத் தட்டுப்பாடு நிலவியது; நமக்கு யார் உணவு தானியம் தருவார்கள் என்று கையேந்தி நின்ற நிலைமை. ஆனால் இன்று மக்கள் தொகை நூறு கோடியைத் தாண்டிவிட்ட போதிலும் உணவு உற்பத்தியில் தன்னிறைவு அடைந்துவிட்டோம். உணவு தானியங்களை ஏற்றுமதி செய்கிறோம். அதே சமயத்தில், கல்வி, சுகாதாரம், அடிப்படை வசதிகள் போன்றவற்றில் நாம் செய்ய வேண்டியவை ஏராளம். சில குறிப்பிட்ட மாநிலங்களில் குறைந்த பட்சம்கூட நிறைவேற்றப்படவில்லை என்பது வருத்தமளிக்கும் உண்மை. அவற்றுக்கு முன்னுரிமை தரப்பட வேண்டும்.

***"தனிக்கட்சி ஆட்சி என்பது போய் கூட்டணி ஆட்சி என்றாகிவிட்ட இன்றைய நிலைமை தற்காலிகமானது என்று கருதுகிறீர்களா?"***

"நிச்சயமாக இது தற்காலிகமானதுதான். இந்திய வாக்காளர்கள் புத்திசாலிகள். 1976ல் என்ன செய்தார்கள் என்பதை அத்தனை சீக்கிரம் மறந்துவிட முடியுமா? அவர்களின் மீது எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது! அவர்களின் முடிவு எப்போதுமே சரியாகத் தான் இருக்கும்!

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **யோகா**

"போச்சு. எல்லாமே போச்சு. நான் எது நடக்கக்கூடாதுன்னு பயந்துகிட்டு இருந்தேனோ அது நடந்துருச்சி. இனிமே எனக்கு லைஃப்ல என்ன இருக்கு?"

ராகவன் புலம்பியபடி உள்ளே நுழைந்த போது அவரது மனைவி சாரதாவும், கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் அவரது ஒரே மகள் ப்ரியாவும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

"என்னப்பா ஆச்சு? சொல்லுங்கப்பா" – படபடப்புடன் கேட்டாள் ப்ரியா.

"இப்படி உக்காருங்க. கொஞ்சம் தண்ணிய குடிச்சிட்டு நிதானமா விஷயத்தச் சொல்லுங்க. எதுவாயிருந்தாலும் சமாளிச்சிரலாம்" – படபடப்பு இல்லாமல் மென்மையாக, ஆதரவாகச் சொன்னாள் சாரதா. ராகவன் சாரதாவைப் பார்த்த பார்வையில், 'என் பெண்ணுக்கு என் மேல் இருக்கும் அன்பில் பத்தில் ஒரு பங்கு கூட உனக்குக் கிடையாதா? அவள் எப்படி துடித்துப் போய்விட்டாள் பார். நீயும் இருக்கியே?' என்ற அர்த்தம் தொனித்தது. என்றாலும் ராகவன் சாரதா சொன்னபடி உட்கார்ந்து தண்ணீர் குடித்துவிட்டு மெதுவாக விஷயத்தைச் சொன்னார்.



"எனக்கு டயபடீஸ் வந்திருக்காம். அதனால இனிமே ஸ்வீட் எதுவும் சாப்பிடக் கூடாது. காப்பில சர்க்கரை போடக் கூடாது. தினமும் ராத்திரி சப்பாத்திதான். ஏன், மாம்பழமோ, வேற எந்தப் பழமோ சாப்பிடக் கூடாதுன்னு எங்க கம்பெனி டாக்டர் கண்டிப்பாச் சொல்லிட்டார்."

சாரதாவின் தட்டில் இருந்த முழு மாம்பழத்தைப் பார்த்தபடி சொன்னார் ராகவன். சொன்னதும் தலையை அப்படியே டைனிங் டேபிளில் சாய்த்துக் கொண்டு துவண்டு போனார் அந்தக் குடும்பத் தலைவர். ராகவனுக்கு ஐம்பத்தி மூன்று வயதாகிறது. அவருடைய பலவீனமே இனிப்புப் பண்டங்கள்தான். மாம்பழம் என்றால் உயிர். ஒரு வேளைக்கு மூன்று மாம்பழங்களைச் சாப்பிடும் பழக்கம் உள்ளவர். 'எப்படி இனிப் பத்தியமாக இருக்கப் போகிறோம்' என்று அவருக்கு மலைப்பாக இருந்தது.

தன்னைப் பெற்றவர் படும் வேதனையைப் பார்த்துத் துடித்து விட்டாள் ப்ரியா. மெதுவாக அப்பாவின் தோள்களைத் தட்டி எழுப்பினாள்.

"அப்பா நீங்க கவலையேபடாதீங்க. நான் உங்களுக்குக் கம்பெனி தரேன். இனிமே நானும் ஸ்வீட் சாப்பிட மாட்டேன். என் காப்பிலயும் சர்க்கரை போடாதம்மா. நானும் இனி டெய்லி நைட் சப்பாத்திதான் சாப்பிடப் போறேன். நம்ப ரெண்டு பேரும் கைகோத்து இந்தப் பாழாப் போன டயபடீஸை ஜெயிச்சுக் காமிப்போம்பா."

ராகவன் தன் பெண் காட்டிய பாசத்தில் உருகித்தான் போனார். அவர் முகத்தில் இப்போது நம்பிக்கை ஒளி சுடர் விட ஆரம்பித்தது. மகளே குளுரைத்து விட்டாள். மனைவி அதற்கு ஒரு படி மேலே போகப் போகிறாள் என்ற நினைப்பில் சாரதாவைப் பார்த்தார் ராகவன். சாரதா எந்தவித சலனமுமின்றி மாம்பழக் கொட்டையைப் பிதுக்கி ருசித்து சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். ராகவனுக்கு உலகமே வெறுத்துப் போனது.

ப்ரியா அம்மாவைச் சாடிக் கொண்டிருந்தாள். "அம்மா இதெல்லாம் நான் உனக்குச்



# காந்தாரியின் காதல்

வரலொட்டி ரெங்கசாமி

சொல்லணும்னு இல்லை. ஆனா இன்னிக்கு நீ பண்ணது ரொம்பத் தப்பு. அப்பா பாவம். தனக்கு டயபடீஸ்னு தெரிஞ்சதுமே இடிஞ்சி போய் உக்காந்துட்டார். நான் அப்பாவுக்கு ஆதரவா இனிமே ஸ்வீட் சாப்பிட மாட்டேன்னு சொன்னதும் அவருக்கு எவ்வளவு ஆறுதலா இருந்ததுன்னு தெரியுமா? அதே மாதிரி நீயும் சொன்னா அவருக்குத் தனக்கு வந்த வியாதியே மறந்து போயிருக்கும். நீயும் அந்த மாதிரி சொல்லப் போறேன்னு ஏக்கத்தோட அவரு உன்னைப் பாத்தப்ப நீ அப்பத்தான் அந்த மாம்பழத்த ரசிச்சு சாப்பிடுக்கிட்டு இருந்தே. நீ பண்ணினது நியாயமா?"

"ப்ரியா, மேலோட்டமான அன்பு தான் உணர்ச்சிபூர்வமா வெளிப் படும். ஆழமான அன்பு அறிவுபூர்வ மாத்தான் வெளில வரும். அவருக்கு டயபடீஸ்ங்கறதுக்காக நானும் பத்தி யம் இருக்கறதுதான் உண்மையான அன்பா? இனிமே அவருக்குப் பத்தி யமா சமையல் பண்ணணும். அதுவே டபுள் வேலை. ஒவ்வொரு பதார்த்தத்தையும் அவருக்கு ஒத் துக்குமா ஒத்துக்காதான்னு பாத் துப் பாத்துப் பண்ணணும். நான் அதை அன்போட ஆசையோட பண்ணிப் போடுவேன். வேளா வேளைக்கு மருந்து மாத்திரை கொடுக்கறது, தேவைன்னா இன்சுலின் இன்ஜெக்ஷன் போடறது, இல்ல யூரின்ல எவ்வளவு சுகர் இருக்குன்னு டெஸ்ட் பண்றது கூட எப்படின்னு எனக்குத் தெரியும். எனக்கென்னவோ அந்த மாதிரி அன்பைக் காமிக்கறது தான் பிடிச்சிருக்கு ப்ரியா. அது மட்டு மில்லை. நான் சின்ன வயசுலேர்ந்தே நல்லா சாப்ட்டு பழக்கப்பட்டவ. என்னால இப்போ திடீர்னு சாப் பாட்ட கண்ட்ரோல் பண்ண முடி யும்னு தோணலை."

"நீ என்ன சொல்றம்மா? நான் பண்ணது வெறும் ஸ்டண்ட்னு சொல்றியா? இல்ல என்னால கட்டுப்பாடா இருக்க முடியாதுன்னு சொல்றியா?"

"அப்படிச் சொல்லலம்மா. நீ பின் விளைவுகளை யோசிக்காம சடார்னு 'இனிமே

நானும் ஸ்வீட் சாப்பிடப் போறதில்லை'ன்னு ஒரு சபதம் எடுத்த. நீ கொஞ்சம் யோசிச்சிப் பாத்திருந்தேன்னா அது யதார்த்தத்துக்கு ஒத்து வராததுன்னு உனக்கே தோணியிருக்கும்."

"நீ சொல்றதைப் பார்த்தா என்னால அதை நிறைவேத்த முடியாதுங்கற மாதிரில்ல இருக்கு."

"இங்க பாரும்மா. உங்கப்பா உன் வயசுல வாழ்க்கைய நல்லா அனுபவிச்சவரு. அவருக்கு டெய்லி சாப்பிட்டதும் ஸ்வீட் வேணும். வீட்ல எப்பவும் ஏதானும் நாலு வகை ஸ்வீட் இருக்கும். எனக்குத் தெரிஞ்சி அவர் கடந்த முப்பது




வருஷமா நிறைய ஸ்வீட் சாப்டாச்சி. அவர் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கட்டுமே. ஆனா நீ வாழ்க்கைல பாக்க வேண்டியது நிறைய இருக்கு. அதுக்குள்ள எதுக்கு நீ உனக்கே ஒரு விலங்கை மாட்டிக்கற?

"அது மட்டுமில்ல ப்ரியா. அப்பாவுக்கு டயபடீஸ் வந்திருக்குன்னா உனக்கும் வரதுக்கு நிறைய சான்ஸ் இருக்கு. அது பரம்பரையா வர வியாதின்னுதான் டாக்டர்கள் எல்லாருமே சொல்றாங்க. உன்னோட அம்பதாவது வயசுல அது வரலாம். அதுக்கப்புறம் நீ நினைச்சாலும் ஸ்வீட் சாப்பிட முடியாது. அப்படி இருக்கும் போது இப்பவே எதுக்கு நீ கடிவாளம் போட்டுக்கணும்?"

இப்போது ப்ரியா பலவீனமாகப் பேசினாள்.

"நான் செஞ்சது தப்புத்தான். ஆனா நீ அவரோட மனைவி இல்லையா? அவரோட சரி பாதியில்லையா? அவர் பத்தியம் இருக்கார்னா நீயும் அப்படி இருக்கறதுதானே சரி?"

"அப்படி இருக்கணுங்கறது இல்லை. நீ அனுபவிக்கும் போது நீ. நான் அனுபவிக்கும் போது நான். எல்லாருமே சேர்ந்து அனுபவிக்கணும்னா யாருமே அனுபவிக்க முடியாம போயிரும்."

"நீ சொல்றதப் பாத்தா தன் புருஷன் குருடுன்னு தெரிஞ்சதும் தன் கண்ணையே கட்டிக்கிட்டாளே மகாபாரதத்துல வர காந்தாரி - தன்னோட புருஷன் பாக்க முடியாதத தானும் பார்க்க மாட்டேன்னு - திருதுராஷ்ட்ரனோட பொண்டாட்டி, அவளோட அன்பு வெறும் வெளி வேஷங்கறியா?"

"அப்படி எல்லா விஷயத்தையும் பட்டுன்னு சொல்லிர முடியாது ப்ரியா. ஒவ்வொருத்தரோட சூழ்நிலை அவங்க மனப்பக்குவம், படிப்பறிவு எல்லாத்தையும் பார்த்துத்தான் ஒரு செயல், உண்மையான அன்பா, இல்ல வெளி வேஷமான்னு முடிவு பண்ணணும். காந்தாரிய எடுத்துப்போம். அவ பிறந்த நாள்ல இருந்து காந்தார நாட்டு இளவரசியா அரண்மனைல சொகுசா வாழ்ந்தவ. வாழ்க்கையில அதுவரைக்கும் எந்த கஷ்டத்தையும் பாக்காம ரொம்ப மென்மையா இருந்த காந்தாரியோட மனசு தன் புருஷன் குருடுன்னு தெரிஞ்சவுடனே துடிச்சிப் போயிருச்சி. அந்த உணர்ச்சித் துடிப்பில 'என் புருஷன் பார்க்காத உலகம் எனக்கும் வேண்டாம்'னு கண்ணைக் கட்டிக்கிட்டா. கூப்பிட்ட குரலுக்கு ஓடி வர ஆயிரம் பேர் வேலை பாக்கற ஹஸ்தினாபுரத்து சக்கரவர்த்தியோட அரண்மனையில வாழ்க்கைப்பட்ட காந்தாரி பண்ண காரியம் ரொம்ப தியாகமாத் தோணித்து. அதையே இன்னிக்கு ஒரு மிடில் கிளாஸ் பொம்பளை- தன்னோட புருஷனுக்குப் பார்வை போயிருச்சுங்கறதுக்காக, தானும் கண்ணக் கட்டிக்கிட்டா ஊரு உலகம் அவளை என்னன்னு சொல்லும்? பைத்தியக்காரின்னுதான் சொல்லும்.

"எனக்கு என்ன தோணுதுன்னா இந்த இதிகாசம், காவியம், கடவுளோட அவதார நோக்கம் இந்த மாதிரி பெரிய விஷயங்களை எல்லாம் விட்டுட்டு நம்ப காந்தாரிய ஒரு சாதாரண கதாபாத்திரமா பாத்தோம்னா, அவ கண்ணைக் கட்டிக்காம தன்னோட பிள்ளைகளை, முக்கியமா துரியோதனனைப் பார்த்து பார்த்து வளத்திருந்தா, அவன் சகுனியோட பிடிக்குள்ள போகாம பார்த்துக்கிட்டு இருந்தா, துரியோதனனும் தர்மன் மாதிரி நல்லவனா வளந்திருப்பானோ என்னவோ?" -

ப்ரியா அப்போதுதான் யோசிக்க ஆரம்பித்தாள். ○

# நம்பகமானது

## பல தலைமுறைகளாக







# US 64

உங்கள் எதிர்காலத்தை வளமாக்குங்கள்

**• பாதுகாப்பு • எளிதில் ரொக்கமாக்கல் • தொடர் வருமானம் • முற்றிலும் வரியற்ற டிவிடெண்ட்**

கடந்த 36 ஆண்டுகளாக, இல்லந்தோறும் எல்லா வகை முதலீட்டாளர்கள் மத்தியிலும் US64 பெயர் பெற்று விளங்குகிறது. தனியாக நடத்தப்பட்ட ஆய்வுகளில் பாதுகாப்பு மற்றும் ரொக்கமாக்கல் விஷயங்களில் இதன் சிறப்பை பாரம்பரியமாக முதலீட்டாளர்கள் கண்டுணர்ந்துள்ளனர் என்பது வெளிப்பட்டுள்ளது. எந்தவிதமான தடங்கலுமின்றி, இந்த திட்டம் நியாயமான வருமானங்களை முதலீட்டாளர்களுக்கு வருடா வருடம் வழங்கிக் கொண்டிருக்கிறது. தற்போது, திட்ட அளவிலும் சரி, முதலீட்டாளர்களுக்கும் சரி இத்திட்டம் வரியற்ற வருமானத்தை வழங்குகிறது. எனவே வரிக்கழிவும் இல்லை. வரிசெலுத்த வேண்டியதும் இல்லை. ***இப்போதே முதலீடு செய்வீர்!***

ஜனவரி
விற்பனை விலை : ரூ. 14.20



## யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா

**இந்தியாவின் மிகப் பெரிய மியூச்சுவல் ஃபண்ட்**

13, சர் விட்டல்தாஸ் தாக்கர்சி மார்க், நியூ மெரைன் லைன்ஸ், மும்பை 400 020.
இணையதளம்: www.unittrustofindia.com

**கூடுதல் விபரங்களுக்கும் மற்றும் விண்ணப்பப் படிவம்/முக்கிய மெமோரண்டம் பெற தயவு செய்து உங்களுக்கு அருகிலுள்ள யூடிஐ அலுவலகம் அல்லது முக்கிய பிரதிநிதி/முகவரை தொடர்பு கொள்க. விண்ணப்பப்படிவங்களை எங்கள் இணைய தளத்திலிருந்து இறக்கிக் கொள்ளவும் செய்யலாம்**

**அமைப்பு:** யூ டி ஐ சட்டம் 1963ன் ஷரத்துக்களின் கீழ் யூடிஐ நிறுவனம் இயங்குகிறது. **பாதிப்பு நிலைமைகள்:** மியூச்சுவல் ஃபண்ட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் எல்லா முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்படுபவையாகும். NAV ஏற்றத் தாழ்வுகள் ஷேர் மார்க்கெட்டில் நிலவும் காரணங்களுக்கேற்ப மேலேயோ கீழேயோ போகலாம். கடந்த கால சாதனை வருங்கால நிலுவைகளை உத்தரவாதம் அல்ல. யூஎஸ் 64 என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே தவிர திட்டத்தின் தரத்தையோ, வருங்கால வளர்ச்சி அல்லது லாபத்தையோ குறிப்பிடவில்லை. திட்டத்தின் குறிக்கோள்களை அடையும் உத்தரவாதத்தையும் அளிக்கவில்லை. முதலீடு செய்வதற்கு முன் முக்கிய மெமோரண்டத்தை கவனமாகப் படிக்கவும்.

**தென் மண்டல அலுவலகம்** : சென்னை தொ.பேசி: (044) 5210347. **கிளை அலுவலகங்கள்:** சென்னை தொ.பேசி: 5210356, 5230985. • கோயம்புத்தூர் தொ.பேசி: 214973. • மதுரை தொ.பேசி: 738186. • திருச்சி தொ.பேசி: 760060. **ஃபிரான்சைஸ் அலுவலகம்:** சேலம் தொ.பேசி: 416414. **சிஆர் கலெக்ஷன் மையங்கள்:** குன்னூர் தொ.பேசி: 31037. • கடலூர் தொ.பேசி: 21712. • தர்மபுரி தொ.பேசி: 61012. • திண்டுக்கல் தொ.பேசி: 432244. • ஈரோடு தொ.பேசி: 252494. • காஞ்சிபுரம் தொ.பேசி: 20076. • காரைக்குடி தொ.பேசி: 22277. • மயிலாடுதுறை தொ.பேசி: 26739. • நாகர்கோவில் தொ.பேசி: 40274. • பாண்டிச்சேரி தொ.பேசி: 339080. • ராஜபாளையம் தொ.பேசி: 21360. • தஞ்சாவூர் தொ.பேசி: 31374. • திருநெல்வேலி தொ.பேசி: 339567. • தூத்துக்குடி தொ.பேசி: 325621. **யூடிஐ பாங்க்:** அண்ணாநகர் தொ.பேசி: 6289045. • டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை தொ.பேசி: 8231085. • தி.நகர் தொ.பேசி: 8239134–35.

**எய்ட்ஸை தடுப்பீர் – அனைவரையும் நேசிப்பீர்.**

003/1-2001 C TAM B

# பொன்னியின் செல்வன்



ஐம்பத்து இரண்டாம் அத்தியாயம்

## விடுதலைக்குத் தடை

மணிமேகலைக்கு எப்படி ஆறுதல் கூறுவது என்று குந்தவைப் பிராட்டி யோசித்தாள். அவளுடைய உள்ளம் தாங்கமுடியாத துயரத்தினாலும் கவலையினாலும் குழம்பியிருந்தபடியால், யோசனை ஒன்றும் தோன்றவில்லை.

அச் சமயத்தில் அரண்மனை வாசலில் பெரியதொரு கோஷம் எழுந்தது.

"வானதி! அது என்னவென்று பார்! சக்கரவர்த்தியின் மனோ நிலையையும் உடல் நிலையையும்கூட இந்த ஜனங்கள் மறந்து விடுகிறார்கள்! இப்படி ஆரவாரம் செய்கிறார்கள்!" என்றாள்.

வானதி அரண்மனையின் முகப்பில் சென்று எட்டிப் பார்த்துவிட்டு உடனே அவசரமாகத் திரும்பி வந்தாள். மிகுந்த பரபரப்புடன், "அக்கா! அவர் வந்து கொண்டிருக்கிறார்!" என்றாள்.

"அவர் என்றால் யார்?' என்று புன்னகையுடன் கேட்டாள் குந்தவை.

"அவர்தான், அக்கா! உங்கள் தம்பி!"

உடனே குந்தவை, "சரி; அப்படியானால் நீ இந்தப் பெண்ணைச் சற்று அப்பால் அழைத்துக்கொண்டு போ!" என்று சொன்னாள்.

வானதி தயங்குவதைப் பார்த்துவிட்டு, "சீக்கிரம் போ! உன்னைப் பார்க்காமல் அவன் போய் விடமாட்டான். நான் உனக்குச் சொல்லி அனுப்புகிறேன்" என்றாள் இளைய

அமரர் கல்கி

பிராட்டி குந்தவை.

வானதி, மணிமேலையின் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு அப்பால் சென்றதும், பொன்னியின் செல்வன் அந்த இடத்துக்கு வந்தான்.

"தம்பி! இது என்ன? நீ போகுமிடமெல்லாம் ஜனங்கள் கூடிக் கூச்சல் போடுகிறார்கள் என்று கேள்விப்பட்டேன். அவர்களை அரண்மனை வாசலுக்கே அழைத்துக்கொண்டு வந்து விட்டாயே? மனம் புண்ணாகி வேதனையில் ஆழ்ந்திருக்கும் சக்கரவர்த்தியின் காதில் இந்த ஜனங்களின் கூச்சல் விழுந்தால் அவருக்கு எவ்வளவு கஷ்டமாயிருக்கும்?" என்றாள்.

"நான் என்ன செய்யட்டும், அக்கா! எனக்கு மட்டும் மனவேதனை இல்லாமலா இருக்கிறது? கரிகாலருடைய வீரத் திருமேனி எரிந்து சாம்பலாவதற்குள்ளே இந்த ஜனங்கள் 'அருள்மொழிக்குப் பட்டம்' என்று கூச்சல் போடத் தொடங்கி விட்டார்கள். இந்தக் கூச்சல் எனக்குக் கர்ண கடூரமாக இருக்கிறது. ஒவ்வொரு சமயம் ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப் போய் விடலாமா என்று எண்ணுகிறேன். அப்படிச் செய்தால் குழப்பம் இன்னும் அதிகமாகி விடுமோ என்றும் பயமாயிருக்கிறது. மதுராந்தகரும் சிற்றரசர்களும் சூழ்ச்சி செய்து என்னையும் கொன்றுவிட்டார்கள் என்று ஜனங்கள் நம்பினாலும் நம்புவார்கள். அதனால் ஏற்படக்கூடிய விபரீதங்களை நினைத்தால் என் உள்ளம் திடுக்கிட்டு நடுங்குகிறது..."

"ஆம். ஆம்! அம்மாதிரி ஒருகாலும் செய்துவிடாதே! அந்த எண்ணத்தையே விட்டு விடு! ஜனங்கள் நினைப்பது ஒரு புறம் இருக்கட்டும். சக்கரவர்த்தியின் நெஞ்சு நிச்சயமாகப் பிளந்து போய் விடும். மந்தாகினி தேவியையும், கரிகாலனையும் நினைந்து நினைந்து அவர் துயரப்பட்டுக்கொண்டிருப்பது போதும்!" என்றாள் இளைய பிராட்டி.

"ஆகையினால்தான் நான் ஓடிப் போகத் தயங்குகிறேன். எப்படியாவது ஜனங்களுக்கும் வீரர்களுக்கும் நல்ல வார்த்தை சொல்லி மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட அவர்களுடைய சம்மதத்தைப் பெறுவதற்குப் பார்க்கிறேன். நான் பேசும்போதெல்லாம் ஜனங்களும் வீரர்களும் சாவதானமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். நான் இப்பால் திரும்பியதும் உடனே பழையபடி கோஷம் போடத் தொடங்கி விடுகிறார்கள். நான் அவர்களுடைய மனத்தை மாற்றி விட்டதாக நினைத்துக் கொண்டு இப்பால் வருகிறேன். உடனே திருக்கோவலூர்ப் பாட்டனும் கொடும்பாளூர் வேளானும் போய்ப் படை வீரர்களுடைய மனத்தை மாற்றி விடுகிறார்கள்! அக்கா! அவர்களைப் பற்றி உன்னிடம் சொல்லத்தான் வந்தேன். மலையமானையும் வேளாரையும் நீ அழைத்துப் பேச வேண்டும். நான் எது சொன்னாலும் அவர்கள் காதில் வாங்கிக் கொள்வதில்லை. நீ சொன்னால் ஒருவேளை கேட்பார்கள்.

"நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்துவிட்டேன், தம்பி! அவர்கள் பிடிவாதத்தை மாற்ற முடியவில்லை. வேறு ஏதேனும் உபாயத்தைத்தான் பார்க்க வேண்டும்..."

"அக்கா! வேளாரிடம் நீ ஒரு செய்தியைக் கூறியிருக்க மாட்டாய். அதைச் சொன்னால் அவர் ஒருவேளை எனக்குப் பட்டம் கட்டுவதில் இவ்வளவு பிடிவாதமாக இருக்க மாட்டார்."

"அது என்ன, தம்பி!"

"உன் தோழி வானதி செய்திருக்கும் சபதத்தைப் பற்றிக் கூற வேண்டும். அவள் என்னோடு சிங்காதனத்தில் அமருவதில்லை என்று சத்தியம் செய்திருக்கிறாள் அல்லவா? அதைப் பற்றிச் சொன்னால், பெரிய வேளாருக்கு எனக்குப் பட்டம் கட்டுவதில் அவ்வளவு சிரத்தை இல்லாமல் போய்விடும்."

"தம்பி! அதை நான் அவரிடம் சொல்லவில்லையென்றா நினைத்தாய்? சொல்லியாகிவிட்டது. அதற்கு அவர் என்ன சொல்கிறார், தெரியுமா! 'ஒரு சிறு பெண்ணின் மூடத்தனத்துக்காக ஒரு பெரிய ராஜ்யத்தைப் பாழாக்கச் சொல்கிறீர்களா? வானதி இல்லாவிட்டால், இந்தப் பாரத தேசத்தில் நூறு

இளவரசிகள் அருள்மொழிக்கு மாலையிடக் காத்திருக்கிறார்கள். சிங்காதனம் ஏறச் சொன்னாலும் ஏறுவார்கள்; கழு மரத்தில் ஏறச் சொன்னால் கூட ஏறுவார்கள்!' என்று சேநாதிபதி கூறி விட்டு வானதியை ஒரு கோபப் பார்வை பார்த்தார். அந்தப் பெண் நடுநடுங்கிப் போய்விட்டாள்!''

அருள்மொழிவர்மன் புன்னகை புரிந்து, ''நல்ல வேளையாக அப்பொழுது மூர்ச்சையாகிக் கீழே விழுந்து விட



வில்லையே!'' என்று சொல்லிக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தான்.

''வானதியை ஒரு காரியமாக அனுப்பியிருக்கிறேன்'' என்றாள் இளையபிராட்டி.

''அக்கா! நீயும் வானதியும் என் கட்சியில் உறுதியாக இருந்தால் ஒரு மாதிரி சமாளிக்கலாம். நாம் இருவரும் சக்கரவர்த்தியிடம் செல்வோம். சக்கரவர்த்தியின் கண்டிப்பான கட்டளைக்குத்தான் இந்தக் கிழவர்கள் இருவரும் கீழ்ப்படிவார்கள்...''

''அதற்கும் ஓர் இடையூறு இருக்கிறதே, தம்பி! செம்பியன் மாதேவி குறுக்கே நிற்கிறார்களே? நாம் சொல்வதற்கு விரோதமாக அவர் பிடிவாதமாகச் சொன்னால், நம் தந்தைதான் என்ன செய்வார்! அவருடைய மனதே பேதலித்துப் போனாலும் போய் விடும். ஆகையால் இது விஷயமாகச் சக்கரவர்த்தியைத் தொந்தரவு செய்யவும் எனக்குப் பயமாயிருக்கிறது.''

''அப்படியானால் நாம் இருவரும் சேர்ந்து செம்பியன் மாதேவியைத்தான் பிரார்த்தனை செய்து கேட்டுக் கொள்ள வேண்டும். அவருடைய மனத்தை மாற்ற முயல வேண்டும். மதுராந்தகருக்குப் பட்டம் கட்டக் கூடாது என்று அவர் பிடிவாதம் பிடிப்பதற்குக் காரணம் நாம் ஊகித்ததுதான். சற்று முன்னால் முதன்மந்திரி அநிருத்தர் வீட்டில் அவரைச் சந்தித்தேன். மதுராந்தகரிடம் இன்றைக்குத்தான் அவர் உண்மையைக் கூறினார். 'நீ என் மகன் அல்ல' என்று சொன்னதும், நம் சித்தப்பாவின் முகத்தை நீ பார்த்திருக்க வேண்டும். களை சொட்டும் அவருடைய அழகிய முகம் கோர ராட்சதனின் முகம் போல் மாறிவிட்டது. நல்லவேளையாக அந்தச் சமயம் நான் போய்ச் சேர்ந்தேன்...''

''அப்படியா? அப்புறம் என்ன நடந்தது?'' என்றாள் குந்தவை.

''பாட்டியின் முன்னால் கை கூப்பி நின்று, 'அம்மா! மதுராந்தகர் தங்கள் வயிற்றில் பிறந்த மகன் அல்ல என்பதை நானும் அறிவேன். அதனால் என்ன? தாங்கள் அருமையாக வளர்த்த புதல்வர் தங்கள் புதல்வரே அல்லவா? ஆகையால் அவர்தான் மகுடம் சூட்டிக் கொள்ள வேண்டும்' என்றேன்...''

''அதற்குப் பெரிய பிராட்டி செம்பியன் மாதேவி என்ன பதில் கூறினார்?''

''அவர் பதில் கூறுவதற்கு முன்னால் திரும்பி வந்துவிட்டேன்...''

''தம்பி! மதுராந்தகர் செம்பியன் மாதேவியின் புதல்வர் இல்லாவிட்டாலும், வேறு வகையில் அவருக்கு இந்தச் சோழ சிம்மாதனத்துக்கு உரிமை உண்டு என்று நீ சொல்லவில்லையா? அவரும் நம் தந்தையின் புதல்வர், உன் தமையன் என்று கூறவில்லையா?''

''சொல்லவில்லை, அக்கா!''

''ஏன், தம்பி! அதனால் நம் தந்தைக்குக் களங்கம் உண்டாகும் என்று அஞ்சினாயா? அல்லது பின்னால் சொல்லிக் கொள்ளலாம் என்று எண்ணினாயா?''

''இல்லை, அக்கா! நீயும் நானும் இத்தனை நாளும் அதைப் பற்றிக் கொண்டிருந்த நம்பிக்கை ஆதாரமற்றது என்று அறிந்தேன். அதனால்தான் அதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை...''

''அது எப்படி, தம்பி!''

''ஆம், அக்கா! முதன்மந்திரி அநிருத்தருக்கு அந்தச் செய்தியெல்லாம் நன்றாய்த் தெரியும். நம் தந்தை ஈழத் தீவிலிருந்து திரும்பி வந்து இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு மதுராந்தகரும் நந்தினியும் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தார்களாம். ஆகையால், அவர்கள் நம் உடன் பிறந்தவர்களாக இருக்க முடியாதல்லவா?'' என்றான் அருள்மொழி.



குந்தவை சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்து விட்டு, ''அருள்மொழி! இது தெரிந்தும் நீ மதுராந்தகருக்குப் பட்டத்தைக் கொடுப்பதற்கு விரும்புகிறாயா?'' என்று கேட்டாள்.

''ஆம், அக்கா! எப்படியும் மதுராந்தகர் மந்தாகினி தேவியின் வயிற்றில் பிறந்த புதல்வர். செம்பியன்மாதேவி எடுத்து வளர்த்த புதல்வர். எனக்கோ

இராஜ்யம் ஆளுவதில் சிறிதும் ஆசை கிடையாது! உன் தோழி வானதிக்கும் சிங்காதனம் ஏறும் விருப்பம் இல்லை...''

''தம்பி! இராம கதையில் பரதர் தமக்குக் கிடைத்த இராஜ்யத்தை வேண்டாமென்று சொல்லி இராமரை அழைத்து வரப் போனார். குஹன் இதை அறிந்ததும் 'ஆயிரம் இராமர் உனக்கு இணையாக மாட்டார்' என்று கூறினானாம். 'ஆயிரம் பரதர்கள் உனக்கு இணையாக மாட்டார்கள்' என்று சோழ நாட்டு மக்கள் சொல்லப் போகிறார்கள்...''

''பிற்பாடு அவர்கள் எது வேணுமானாலும் சொல்லட்டும். இச் சமயம் என்னை விட்டால் போதும் என்றிருக்கிறது. அக்கா! கடைசியாக, நான் ஒரு யுக்தி கண்டுபிடித்து மனத்திற்குள் வைத்திருக்கிறேன். அதைப் பற்றி உன் அபிப்பிராயத்தை அறிந்து கொள்ள விரும்புகிறேன்...''

''அது என்ன யுக்தி, தம்பி!''

''குடந்தைக்கு அருகில் பழுவேட்டரையர்கள் படை திரட்டிச் சேர்த்து வருகிறார்கள் என்பது தெரியும் அல்லவா...?''

''ஆமாம்; அவர்களுடன் பல சிற்றரசர்களும் வந்து சேர்ந்துகொண்டிருக்கிறார்கள் என்றும் தெரியும். ஆனால் அது மிகவும் சிறிய படை என்று கேள்விப்படுகிறேன். நம் பாட்டனாரும் வேளாரும் இங்கே வைத்திருக்கும் படையோடு போனால் மூன்றே முக்கால் நாழிகையில் அந்தப் படையை அழித்து விடுவோம் என்று சொல்கிறார்களே?''

''அப்படி ஒன்றும் நேராமலிருப்பதற்குத்தான் யுக்தி செய்திருக்கிறேன். ஒருவருக்கும் தெரியாமல் நான் மட்டும் ஒரு குதிரை மேல் ஏறிக்கொண்டு போய் பழுவேட்டரையர்களிடம் என்னை ஒப்புக் கொடுத்து விடப் போகிறேன். அவர்கள் என்னைச் சிறைப்படுத்தி விடுவார்கள். அப்புறம் நம் பாட்டன் மலையமானும் சேநாதிபதி பெரிய வேளாரும் ஒன்றும் செய்ய முடியாது அல்லவா?''

குந்தவை மூக்கில் விரல் வைத்து அதிசயித்துவிட்டு, ''அற்புதமான யுக்திதான். தம்பி! ஆனால் அதிலும் ஒரு சிறிய அபாயம் இருக்கிறது!'' என்றாள்.

''அது என்ன, அக்கா?''

''நீ பழுவேட்டரையர்கள் திரட்டும் படையை அடைந்ததும், அந்தப் படையில் உள்ள வீரர்கள் என்ன செய்வார்கள், தெரியுமா? 'அருள்மொழிவர்மர் வாழ்க!' 'பொன்னியின் செல்வருக்கே பட்டம்!' என்று கூச்சலிடத் தொடங்குவார்கள். உன்னைச் சிறை வைப்பதற்குப் பதிலாகப் பழுவேட்டரையர்களைப் பிடித்துச் சிறை வைத்தாலும் வைத்து விடுவார்கள்!''

அருள்மொழிவர்மர் சிறிது நேரம் திகைத்துப் போய் நின்றார்.

''ஆமாம்; அந்த அபாயம் ஏற்படலாம் என்று எனக்குத் தெரியாமற் போயிற்று. நல்லவேளையாகத் தாங்கள் எச்சரித்தீர்கள். இந்தத் தஞ்சை புரிக் கோட்டைக்குள் மாறுவேடம் பூண்டு வந்தது போல் அங்கேயும் மாறுவேடம் புனைந்து போகிறேன்...''

''என்னதான் மாறுவேடம் பூண்டு போனாலும் எத்தனை நேரம் உண்மை வெளிப்படாதிருக்கும், தம்பி! ஒருவருக்குத் தெரிந்தால் போதுமே? ஒரு நாழிகைக்கெல்லாம் எல்லாருக்கும் தெரிந்து விடும். அக்கம் பக்கத்திலுள்ள ஜனங்களும் வந்து கூடி விடுவார்களே!''

அருள்மொழியின் முகம் சுருங்கிற்று.

''அக்கா! பின்னர் என்னதான் என்னைச் செய்யச் சொல்கிறீர்கள்? இந்த உலகத்தில் எதற்காக நான் பிறந்தேன்? பிறருக்குத் தொல்லை கொடுப்பதற்காகத்தானா? காவேரியில் நான் விழுந்து முழுகியபோதே இறந்து போயிருக்கக் கூடாதா!'' என்றான்.

''தம்பி! யார் கண்டார்கள்? ஜோதிடர்களும் ரேகை சாஸ்திரிகளும் கூறியதெல்லாம் உண்மைதானோ, என்னமோ! நீ வேண்டாம் என்று தள்ளினாலும் இராஜ்யலக்ஷ்மி உன்னை வந்து அடைவாள் போலிருக்கிறது. நீ பிறந்த வேளை அப்படி இருக்கிறது!''

''அக்கா! தாங்களும் நம் பாட்டன்



மலையமானோடு சேர்ந்து கொண்டீர்களா? தங்கள் மனமும் மாறிவிட்டதா?''

''பாட்டன் போதனையினால் என் மனம் சலிக்கவில்லை, தம்பி! ஆனால் அண்ணன் கரிகாலனுடைய ஓலையினால் கொஞ்சம் என் மனமும் மாறித்தான் இருக்கிறது. அவன் கண்ட கனவுகளையெல்லாம் நீ காரியத்தில் நிறைவேற்றுவாய் என்று எழுதியிருக்கிறான். அதைப் படித்ததும்...'' என்று கூறியபோது குந்தவையின் கண்களில் கண்ணீர் ததும்பிக் குரலும் தழுதழுத்தது.

பொன்னியின் செல்வன் ஆதித்த கரிகாலனுடைய ஓலையை வாங்கிப் படித்தான். அவனுடைய கண்களிலேயிருந்தும் கண்ணீர் பொழிந்தது.

ஓலையை அவன் படித்து முடித்ததும் குந்தவை கூறினாள்: ''தம்பி! நீ என்ன நினைத்துக் கொண்டாலும் சரிதான். என் மனத்தில் உள்ளதைச் சொல்லி

விடுகிறேன். மதுராந்தகனும் நந்தினியும் நம் சோழ குலத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல என்று தெரிந்துகொண்டதில் என் மனம் ஒருவாறு நிம்மதி அடைந்திருக்கிறது. சோழ குலத்தில் பிறக்காத ஒருவனைச் சோழ சிங்காதனம் ஏறச் செய்வதிலும் எனக்கு விருப்பம் இல்லை. செம்பியன்மாதேவியிடமும், மந்தாகினி தேவியிடமும் எனக்கு எவ்வளவு பக்தி இருந்தாலும், அவ்வளவு தூரம் விட்டுக் கொடுக்க என்னால் முடியவில்லை. மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டுவதை இனி ஒரு கணமும் என்னால் சகித்துக் கொள்ளவே முடியாது...''

''அக்கா! அக்கா! இது என்ன சொல்கிறீர்? செம்பியன்மாதேவி முன்னாலும், அநிருத்தர் முன்னாலும், மதுராந்தகன் முன்னாலும் 'எனக்குப் பட்டம் வேண்டாம்' என்று சொல்லி விட்டு வந்தேன். ஆயிரமாயிரம் போர் வீரர்கள் முன்னாலும் மகாஜனங்களின் முன்னாலும் அவ்விதமே சொல்லி விட்டு வந்திருக்கிறேன். இப்போது என் வார்த்தையை மீறச் சொல்கிறீர்களா?'' என்று கேட்டான் அருள்மொழிவர்மன்.

''தம்பி! உனக்கும் எனக்கும் நம் குல தெய்வமான துர்க்கா பரமேசுவரிதான் வழி காட்ட வேண்டும். உனக்கு என்ன யோசனை சொல்லுவது என்று எனக்கும் தெளிவாகத் தெரியவில்லை. ஆதித்த கரிகாலன் என் வார்த்தையைக் கேட்டிருந்தால், இந்த மாதிரி நிலைமை ஏற்பட்டே இராது! அந்த மகாவீரனுக்கு இந்தக் கதியா நேர்ந்திருக்க வேண்டும்?'' என்று குந்தவை புலம்பினாள்.

''இந்த ஓலை தங்களுக்கு எப்படிக் கிடைத்தது, அக்கா? யார் கொண்டு வந்தார்கள்? எப்போது தங்கள் கைக்கு வந்தது? ஏன் முன்னாலேயே சொல்லவில்லை?'' என்றான் அருள்மொழி.

''சற்று முன்னாலேதான் எனக்கு வந்தது. சம்புவரையரின் மகள் மணிமேகலை கொண்டு வந்து கொடுத்தாள்...''

''ஆம், ஆம்; மணிமேகலையைப் பற்றி நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். அவளிடம் இந்த ஓலை எவ்விதம் வந்தது?''

''அவளே இருக்கிறாள், தம்பி! நீயே நேரில் கேட்டுத் தெரிந்துகொள்! அவள் பேச்சை எவ்வளவு தூரம் நம்புவது என்று எனக்கே தெரியவில்லை'' என்றாள் இளையபிராட்டி குந்தவை.

அருள்மொழிவர்மன் உள்ளே வந்தவுடனேயே, மணிமேகலையை அவன் முன்னால் நிறுத்தி வந்தியத்தேவனைப் பற்றிப் பிரஸ்தாபிக்கச் சொல்லுவதென்று இளையபிராட்டி தீர்மானித்திருந்தாள். இத்தனை சம்பாஷணைகளுக்கு மத்தியிலும் அவளுடைய உள் மனம் வந்தியத்தேவர் பாதாளச் சிறையில் இருப்பது பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தது. அவரைப் பற்றித் தானே பேச்சு எடுக்கக் குந்தவை விரும்பவில்லை. மணிமேகலையை அழைப்பதற்கு ஒரு தக்க சந்தர்ப்பத்தை எதிர்நோக்கியிருந்தாள். அந்தச் சந்தர்ப்பம் இப்போது கிடைத்ததும், வானதியைக் கூவி அழைத்து, மணிமேகலையையும் அழைத்து வரும்படி கூறினாள்.

மணிமேகலை வரும்போதே கண்ணீர் ததும்பிய சோகமயமான முகத்துடன் வந்தாள். இதைப் பார்த்த பொன்னியின் செல்வன் அவள் துயரப்படுவதற்குக் காரணமிருக்கிறது என்று எண்ணினான்.

''தம்பி! இந்தப் பெண்தான் மணிமேகலை. ஓலையை இவள்தான் கொண்டு வந்தாள். இது எப்படி இவளிடம் வந்தது என்று நீயே கேட்டுக் கொள்!''

''சகோதரி! எங்கள் தமையன் கடைசியாக எழுதிய இந்த ஓலையை நீ கொண்டு வந்து பத்திரமாக ஒப்புவித்தாய். இதற்காக உன்னிடம் நாங்கள் என்றைக்கும் நன்றி செலுத்துவோம்...!'' என்று மேலே அருள்மொழிவர்மன் தொடர்வதற்குள்ளே, மணிமேகலை திடீரென்று அவன் முன்னால் விழுந்து வணங்கினாள்.

''இளவரசே! பொன்னியின் செல்வ! தாங்கள் இப்போது சொன்ன வார்த்தை சத்தியமா? என்னிடம் தாங்கள் நன்றி செலுத்துவது உண்மையானால்...''

இவ்வாறு சொல்லிவிட்டு மேலே பேச முடியாமல் மணிமேகலை விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

"அக்கா! இது என்ன? இந்தப் பெண் எதற்காக இப்படி விம்மி அழுகிறாள்? ஒருவேளை அவளுடைய வீட்டில் நம் தமையன் இறக்க நேர்ந்ததே என்று வருந்துகிறாளா?" என்றான்.

"இல்லை, தம்பி! இவள் மனத்தில் இருப்பது வேறொரு காரியம். மணிமேகலை! என்னிடம் கூறியதை இளவரசரிடம் சொல்லு!" என்று குந்தவைப்பிராட்டி அவளைத் தைரியப்படுத்தினாள்.

"ஐயா! தங்கள் தமையனைக் கொன்ற பாவி நான்தான். என்னைப் பாதாளச் சிறையில் போட்டு விட்டு அவரை விடுதலை செய்யுங்கள்!" என்று அழுது கொண்டே கூறினாள்.

அருள்மொழிவர்மன் திகைப்புடன் குந்தவையைப் பார்த்து, "அக்கா! இவள் என்ன சொல்லுகிறாள்? இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா, என்ன?" என்று கேட்டான்.

"இவளுக்கு இன்னும் பைத்தியம் பிடிக்கவில்லை, தம்பி! ஆனால், சீக்கிரத்தில் வல்லத்து இளவரசரைப் பாதாளச் சிறையிலிருந்து விடுதலை செய்யாவிட்டால் இவளுக்குப் பைத்தியம் பிடித்தாலும் பிடித்துவிடும்!" என்றாள்.

"என்ன? என்ன? யார் பாதாளச் சிறையில் இருக்கிறது?" என்று வியப்புடன் கேட்டான்.

"ஈழ நாட்டுக்கு நான் ஓலை கொடுத்து அனுப்பிய வாணர் குல வீரரை அடியோடு மறந்து விட்டாயா, தம்பி!"



நெடுங் கனவிலிருந்து அப்பொழுது தான் விழித்து எழுந்து இவ்வுலக நினைவு வந்தவனைப் போல் அருள்மொழிவர்மன் ஒரு நிமிட நேரம் தோற்றமளித்தான்.

தஞ்சைக் கோட்டைக்குள் அவன் பிரவேசித்ததிலிருந்து ஒன்றன் பின் ஒன்றாக நடந்த சம்பவங்கள் அவனுடைய கவனத்தை முழுதும் கவர்ந்திருந்தன. கரிகாலருடைய மரணச் செய்தி வந்த பிறகு, சோழ சிங்காதனத்தில் மதுராந்தகரை ஏறச் செய்யும் மார்க்கத்தைப் பற்றிச் சிந்திப்பதிலேயே அவனுடைய உள்ளம் முழுதும் ஈடுபட்டிருந்தது.

வந்தியத்தேவனைப் பற்றி உண்மையிலேயே அவன் மறந்து விட்டிருந்தான்.



இப்போது அவன் பெயரைக் கேட்டதும் ஒரு துள்ளுத் துள்ளி, "யார்? என்னுடைய அருமை நண்பர் வந்தியத்தேவரா பாதாளச் சிறையில் இருக்கிறார்? எதற்காக? யார் அவரைச் சிறையில் அடைத்தது?" என்று கேட்டான்.

மணிமேகலை கூறிய விவரங்களைக் குந்தவை அவனுக்கு எடுத்துக் கூறினாள்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு இருந்த பொன்னியின் செல்வன், "அக்கா! என்னைப் போன்ற நன்றி கெட்டவன் யாருமே இருக்க முடியாது. வாணர் குலத்து வீரரைப் பற்றி நான் விசாரிக்காமலே இருந்துவிட்டேன். அது என் குற்றந்தான்! அவரைப் பாதாளச் சிறையில் அடைக்கத் துணிந்தவர்கள் என்னை விடப் பெரிய குற்றவாளிகள். நம் தமையனிடம் அவருக்கு எவ்வளவு பக்தி உண்டு என்பதை நான் அறிவேன். கரிகாலரின் மரணத்துக்கு அவரைப் பொறுப்பாளியாக்கத் துணிந்தவர்கள் யார்? இது என்ன மூடத்தனம்? அவரைத் தப்புவிப்பதற்காக இந்தப் பெண் தன் பேரில் குற்றம் சுமத்திக் கொள்வது நமக்கெல்லாம் ஒரு பாடங் கற்பிப்பது போலிருக்கிறது. இந்தப் பெண்ணைப் பார்க்கவே எனக்கு வெட்கமாக இருக்கிறது. மற்ற காரியங்கள் அப்புறம் ஆகட்டும். இப்போதே பாதாளச் சிறைக்குச் சென்று வந்தியத்தேவரை விடுவித்துக் கொண்டு வருகிறேன். சம்புவரையர் மகளுக்கு நீ தேறுதல் கூறு!" என்று சொல்லிவிட்டு திரும்பி, விடுவிடுவென்று நடந்தான்.

அவன் வாசற்படியை அடைந்தபோது, அங்கே திடீரென்று திருக்கோவலூர் மலையமானும் கொடும்பாளூர் வேளாரும் தோன்றினார்கள்.

அவர்களுடைய தோற்றமே இளவரசரின் மனத்தில் ஒரு வித ஐயத்தை உண்டு பண்ணியது.

பெரிய வேளார் தம் கையில் கொண்டு வந்திருந்த வேலை வாசற்படியின் குறுக்கே வைத்து இளவரசரைத் தடுக்கும் பாவனையில் நின்றார். அவருக்குப் பின்னால் மலையமானும் கையில் பிடித்திருந்த கத்தியைக் கீழே ஊன்றிய வண்ணம் இளவரசர் மேலே போவதைத் தடுப்பதற்கு ஆயத்தமாக நின்றார்.

பொன்னியின் செல்வர் பெரும் வியப்புடனும் சிறிது கோபத்துடனும் "சேநாதிபதி? இது என்ன? என்னைக் கூடச் சிறைப்படுத்தப் போகிறீர்களா?" என்று கேட்டார்.

"இளவரசே! இப்போது பாதாளச் சிறைக்குப் போகாமல் தங்களைத் தடை செய்கிறோம். அவசியம் நேர்ந்தால் சிறைப்படுத்தவும் செய்வோம்!" என்றார் பூதி விக்கிரம கேசரி.

அவர் கூறியது உண்மையாகவா, வேடிக்கையாகவா என்று பொன்னியின் செல்வருக்கு விளங்கவில்லை. ஆனால்



வேடிக்கையைப் பொறுத்துக் கொள்ளும் மனோ நிலையும் அச்சமயம் அவருக்கு இல்லை. ஆகையால் முன்னைவிடக் கோபமான குரலில், "எந்த அதிகாரத்தைக் கொண்டு என்னைத் தடை செய்ய முன் வந்தீர்கள்?" என்றார்.

''தாங்கள் எந்த அதிகாரத்தைக் கொண்டு பாதாளச் சிறையில் உள்ள வனை விடுதலை செய்யப் போகிறீர்கள்?'' என்றார் பெரிய வேளார்.

"சேநாதிபதி! எனக்கு அந்த அதிகாரம் இல்லையா? நான் யார் என்பதை மறந்து விட்டீர்களா? அல்லது தங்களைத் தாங் களே மறந்து விட்டீர்களா?"

"என்னை நான் மறக்கவும் இல்லை; தாங்கள் யார் என்பதை மறக்கவுமில்லை. நான் தஞ்சைக் கோட்டைக்கு இன்று தள பதி. ஆகையால் பாதாளச் சிறைக்குக் காவலன். தாங்கள் சக்கரவர்த்தியின் திருக் குமாரர்; பொன்னியின் செல்வர் ஆயி னும் தங்கள் தமையனைக் கொன்றதாகக் குற்றம் சாட்டிப் பாதாளச் சிறையில் வைக்கப்பட்டவனை விடுதலை செய்யத் தங்களுக்கு அதிகாரம் கிடையாது. சக்கரவர்த்திக்குத்தான் அந்த அதிகாரம் உண்டு; அல்லது சக்கரவர்த்தியின் ஸ்தா னத்தில் முடி சூட்டிக் கொள்ளப் போகிற வருக்கு அந்த அதிகாரம் உண்டு. தாங் களோ சோழ சிங்காதனத்தில் ஏறப் போவ தில்லையென்று பறை சாற்றிக் கொண்டு வருகிறீர்கள். ஆகையால் சக்கரவர்த்தியின் கட்டளையின்றிப் பாதாளச் சிறையி லிருந்து யாரையும் விடுவிக்க முடியாது!'' என்றார் கொடும்பாளூர்ப் பெரிய வேளாராகிய சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி.

''குழந்தாய்! வேளார் கூறியது உண் மையான வார்த்தை. சின்னப் பழுவேட் டரையன் ஓடிப் போனபடியால் பெரிய வேளா ரைத் தஞ்சைக் கோட்டைத் தள பதியாகச் சக்கர வர்த்தி நியமித் திருக்கிறார். ஆகையால் பாதா ளச் சிறையி லிருந்து யாரையும் விடுவிக்க உனக்கு அதிகாரம் இல்லை!'' என்று மலையமான் ஆமோதித்தார்.



பொன்னியின் செல்வர் அவர் களுக்கு என்ன பதில் சொல்வது என்று தெரி யாமல் மௌன மாக நின்றார்.

மணிமேகலை யின் விம்மல் சப் தம் மட்டும் கேட் டுக்கொண்டிருந் தது.

(தொடரும்)

# லா லா சைபர் லா!

"கலா, புதுசா சைபர் லா (Cyber Law) பார்த்தியா?" உற்சாகமாகக் கேட்டான் நாதன், சட்டநாதன் – சந்தேகமின்றி வக்கீல்.

"அய்யய்யோ லாவும் சைபராயிடுச்சா? இதுவரைக்கும் சைபர் வக்கீல்தான் பாத்திருக்கேன். வெடுக்கென்ற பதில் தாக்கியது.

"கிண்டலா கலா?"

"எங்க கிண்டல்? சைபர் வக்கீலோட பன்னிரண்டு வருஷமா குடும்பம் நடத்திக்கிட்டிருக்கேன். பன்னிரண்டாண்டு கடுங்காவல் தேவலாம். அப்பவே அப்பா சொன்னார். 'கலா, நான் மாப்பிள்ளை படிச்ச 'லா'வை நம்பி உன்னைக் கட்டி வைக்கல. அவருக்கு ஊர்ல இருக்கிற பத்து ஏக்கர் புஞ்சையும், அண்ணாசாலையில உள்ள பத்து கிரவுண்ட் பங்களாவையும் நம்பித்தான் உன்னைக் கட்டி வைக்கிறேன். நிச்சயமா அது உன்னைக் கைவிடாது."

"அடடா எப்பேர்ப்பட்ட ஞானதிருஷ்டி உங்கப்பாவுக்கு...!"

"என்ன தப்பாயிடுச்சு? இன்னிவரை ஊர் நிலந்தான் சோறு போடறது. பத்து கிரவுண்டு பங்களா ப்ளாட் ஆனதால பாங்க்கில பெத்த டெபாசிட்டு! ஏதோ மானம் போகாம ஃபோர்டு காரோட வாழ்க்கை. வக்கீலா நீங்க ஒரு பைசா சம்பாதிச்சீங்களா?"

"கலா லேபர் லா, கம்பெனி லா, ஃபேமிலி லானு பலான லாவைக் கரைச்சு குடிச்சவன் கிட்ட மோதாதே!"

"லோ லோன்னு பலான லா படிக்கறீங்க, அதோட சரி!"

மெதுவாக சட்டம் – லா தம்பதி வாக்குவாதம் சூடு பிடித்தது. திடீரென அங்கே நாதனின் நண்பன் சேகர் நுழைந்தான். அவன் கையில் ஒரு கறுப்பு கோட்.

சட்டென போர் மூடை மாற்றிக்கொண்டு "ஹாய் சேகர் எங்க சம்மனில்லாம?" எனக் கேட்டான் நாதன்.

"அண்ணி சொல்லலையா? கலைவாணர் அரங்கத்தில ஷோ. நாலு நாளுக்கு முன்னாடி உன் கறுப்புக்கோட்டை வாங்கிட்டுப் போனேனே."

"தொலைஞ்சது! இன்னொரு மேஜிக் ஷோவா? என் மானத்தை வாங்கவே நீ மேஜிக் ஷோ நடத்தறயா?" புலம்பிக்கொண்டே கோட்டைப் பெற்றுக்கொண்டான். இது தான் சமயமென்று.

"உங்க வக்கீல் கோட்டுக்கு ஏதாவது ஒரு உபயோகம் இருந்திட்டுப் போகட்டுமே" – இடித்தான் கலா.

"கலா என்னை ரொம்ப இன்சல்ட் பண்றே. இன்டர்நெட் சைபர் லா இப்பதான் உதயமாகிறது. அதுலே நான் பெரிய வக்கீல்னு பேரெடுத்துக் காட்டுறேனா இல்லையா பார்!"

"நம்ம ஊர் கலாசாரம் மாறாமல் சைபர் க்ரைம், சைபர் திருட்டு, சைபர் கொள்ளை எல்லாம் நெட்டில் கொடி கட்டிப் பறக்க ஆரம்பித்த பிறகே சைபர் சட்டம் அமைக்க பிள்ளையார்சுழி போடப்பட்டது. அதிலும் பல சிக்கல்.

"இன்டர்நெட்டில் பெரிய ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ்கள் வந்துவிட்டன, வங்கிகள் வந்துவிட்டன; சினிமா டிக்கட் கிடைக்கிறது, பொக்கே கிடைக்கிறது. கார், வீடு என்று எது வேண்டுமானாலும் நெட் மூலமாக வாங்கலாம். வானமே எல்லை என்பது போல நெட் வியாபாரத்திற்கு ஒரு எல்லையே இல்லை. அமெரிக்காவில் ஒருவர் பல மில்லியன் டாலர் பெறுமான லியர் ஜெட் விமானத்தையே இன்டர்நெட் மூலம் வாங்கியுள்ளார்."

– இன்டர்நெட் வியாபாரம் பற்றி நாதன் கூற சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள் கலா. "சரிங்க, வாங்கற பொருளுக்கு நெட் மூலமா எப்படி பணம் செலுத்தறது?"

"கிரெடிட் கார்ட் இருக்கில்ல. அந்த நம்பரைக் கொடுத்தா போதும்."

"நான் வேற ஒருத்தர் கிரெடிட் கார்ட் நம்பர், மத்த விவரம் கொடுத்துட்டா?"

"கள்ளி! தட் இஸ் சைபர் க்ரைம்! பத்து ஏசி, நாலு ப்ரிஜ் வாங்கிட்டு கம்னு சேகரோட கிரடிட் கார்ட் நம்பரைக் குடுத்துட்டா அவன் தொலைஞ்சான்!

"கேட்கவே நல்லாயிருக்குங்க" என்றாள் கலா."

"இது பரவாயில்லை. நெட்டில வங்கிகளும் இருக்கு! முகமூடியில்லாமலே கொள்ளை அடிக்கலாம். கண்காணிக்கத்தான் சைபர் லா, சைபர் சட்டம்!"

''லா சரி, குற்றவாளிகளைப் பிடிக்க போலீஸ்?''

''உண்டே! சைபர் போலீஸ், சைபர் போலீஸ் ஸ்டேஷன் எல்லாம் இன்டர்நெட்டில இருக்கு.''

''அப்ப மாமூலும் சைபர் மாமூலா?'' சிரித்தான் கலா.

''உலகமே மண்டையை உடைச்சிக்கிற விஷயம் உனக்குத் தமாஷாயிருக்கு.''

''சாரி... சாரி...! சீரியஸா கேக்கறேன். நீங்க சொன்னதிலேயிருந்து பார்த்தா, கம்ப்யூட்டர் முன்னாடி உட்கார்ந்திருந்திட்டு கிரெடிட் கார்டு நம்பரையோ, இல்ல வங்கி கணக்கிலேயிருந்து பணம் கேட்கிறதோ நீங்கதான்னு அடையாளம் கண்டு, ஊர்ஜிதப்படுத்திட்டா பிரச்னையே இருக்காது.

''யெஸ், மை லார்ட், டக்னு புரியற மாதிரி எப்படி உனக்கு சப்ஜெக்ட் கத்துக் கொடுத்திருக்கேன் பார்!''

''இதான்... இதேதான்... பேரு... கொலஸ்ட்ரால்.''

''ஓகே... நீ புத்திசாலி... என்னை மாதிரியே! மேல கேளு. இந்த பாஸ்வேர்டெலாம் அடையாளங் காட்ட போதாதுன்னு கம்ப்யூட்டருக்குக் கண் வைக்கப் போறாங்க...''

''கம்ப்யூட்டருக்குக் கண்ணா? ஏற்கெனவே கண் படற அளவு வேலை செய்யறது!''

''நம்ம கம்ப்யூட்டர் ஸ்கிரீனைப் பார்க்கிறபோது இனிமே அதுவும் நம்மைப் பார்க்கும், யாருன்னு புரிஞ்சிக்கும்.''

மாதுரி



''ஃபோட்டோ ஐடி. மாதிரியா?''

''இல்லை. கைரேகை முறை போல ஒருத்தரோட விழி முழி படத்தைத் தனக்குள்ள சேமிச்சு வைச்சு சரி பார்க்கும்.''

''வெரி இன்டரஸ்டிங். திருட்டு முழியாக இருந்தா கிரடிட் நம்பரும் ஏத்துக்காது. வங்கிக் கணக்குக்குள்ளேயும் அனுமதிக்காது... ரைட்டா?''

''ரொம்ப சரி, மைலார்ட். இதே முறையில ஒருத்தரோட விரல் ரேகையையும் தனக்குள்ள சேமிச்சு வைச்சு சரி பார்க்கிற முறையும் வரப் போறது.''

''ஓ. எல்லாம் இனிமேதான் வரப் போறதா...''

''மைலார்ட் ஒரு குட் நியூஸ்! உங்ககிட்ட இத்தனை நாளா மறைச்சிட்டேன்...

''என்னங்க அது... சீக்கிரம் சொல்லுங்க...

## பார்வையற்றவர்கள் செஸ்!

பார்வையற்றவர்களாலும் செஸ் விளையாட முடியும். எப்படி?

- செஸ்போர்ட், சாதாரண போர்டைப் போல் இருந்தாலும் வித்தியாசம் தெரிவதற்காக, கறுப்பு சதுரம் வெள்ளைச் சதுரத்தைவிட 3 மில்லி மீட்டர் ஆழமாக அமைக்கப்பட்டிருக்கிறது.
- செஸ் காய்கள் கீழே விழாமல் இருக்க, ஒவ்வொரு சதுரத்திலும் ஒரு துளை போடப்பட்டு, காய்களை சரியாக வைக்க ஒரு சிறிய ஆணியும் அமைக்கப்பட்டுள்ளது. காய்கள் இந்த



ஆணியில் பொருத்தப்படும்.

- கையினால் தடவி, எந்தக் காய் என்று அறிய முடியும்; கறுப்பு நிற காய்களுக்கு மேல் ஒரு சிறிய ஆணி அடிக்கப்பட்டுள்ளது.
- Dictaphone மூலம், நகர்த்திய காயை அறிவிக்க வேண்டும்.
- ஒருவர் எடுத்துக் கொள்ளும் நேரத்தை அறிந்து கொள்ள, பேசும் கடிகாரம் உபயோகப்படுத்தப்படுகிறது. இது இல்லாத நிலையில், ஒரு நடுநிலையாளர், ஆட்டக்காரர்களுக்கு, அவர் காய் நகர்த்த எடுத்துக்கொண்ட நேரத்தைப் பற்றி அறிவிப்பார்.

இத்தகைய செஸ் போட்டி 'மும்பை'யில் நடந்தது. இதை நடத்தும் அமைப்பின் செயல்ரான சாருதத்தா ஜாதவ், முன்பு இரண்டு அல்லது மூன்று மாநிலங்களிலிருந்து மட்டும் ஆட்டக்காரர்கள் இதில் பங்கேற்றதாகவும், இப்பொழுது 16 மாநிலங்களுக்கு மேலாக இதில் அங்கத்தினர்களாக இருப்பதாகவும் கூறுகிறார் பெருமையுடன்.

தகவல்: அகமதாபாத் பாண்டு
நன்றி. 'ஸண்டே மிட் டே'

"எனக்கு ஒரு சைபர் கேஸ் கிடைச்சிருக்கு! நெட் வழி பணம் சுருட்டின கேஸ்!"

"நிஜமாவா?"

"பாதி கேஸ் நடத்தியும் முடிச்சிட்டேன்! அதுக்காக படிச்ச மேட்டர்தான் இதெல்லாம்...!"

"கொண்டாங்க கையை!" இழுத்து குலுக்கினாள். "உங்க சபதத்தில ஜெயிச்சுடுவீங்க போலிருக்கு!"

"வொய் நாட்?" நாதனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை.

அதற்குள் சட்டென ஏதோ மூளையில் உதிக்க, குலுக்கிக் கொண்டிருந்த கையை 'தொப்' பென கீழே விட்டாள் கலா.

"ஒருநாள்கூட கோர்டுக்கே போகலை, எப்படி பாதி கேஸ் நடத்தி முடிச்சீங்க? பொய்யா சொல்றீங்க?"

"நோ நெட்டில கோர்ட், இன்டர்நெட்டில வாதம் பிரதிவாதம்..."

"இதென்ன புதுசா...? அப்ப கறுப்புக் கோட்டு வேண்டாமா? நிரந்தரமா மந்திரவாதி சேகருக்குக் கொடுத்திடலாமா?"

"நெட்டுல சைபர் கோர்ட்டும் இருக்கு. சமீபத்தில் ஒரு கம்பெனி சென்னையில இருந்தபடியே அமெரிக்காவில் ஒருத்தர் மேல கேஸ் போட்டு இன்டர்நெட் சாட் மூலமா கேஸ் நடத்தி ஜெயிச்சும் இருக்காங்க!"

"அய்ய ஜோக்கா?"

"இல்ல ஃபேக்ட்!"

ஜட்ஜ்மெண்ட் நாளன்று கலாவுக்கு ஏகப்பட்ட பரபரப்பு. ஸ்வீட் செய்துவைத்து நாதனுக்காக காத்திருந்தாள். அவன் நுழைந்ததுமே, 'ஜெயிச்சுட்டீங்களா?'

"ஆபரேஷன் சக்ஸஸ். பேஷண்ட் அம்பேல்!"

"இதென்ன டாக்டர் பாஷை, ஜெயிச்சாச்சா இல்லையா?"

"பணம் சுருட்டின ஆசாமி மேல, சைபர் க்ரைம் நிரூபிச்சு மூணு வருஷம் இஹார் ஜெயில்னு தீர்ப்பும் கொடுத்தாச்சு..."

"அப்ப ஜெயிச்சிட்டீங்களே? அப்புறம்?"

"இருக்கு. சைபர் போலீஸ் பிடிச்சு, சைபர் கோர்ட்டில கேஸ் நடத்தி சைபர் ஜட்ஜ்தானே தண்டனை கொடுத்தார். அப்புறம் எப்படி என்னை சைபர் ஜெயில்ல போடாம இஹார் ஜெயில்ல போடுவீங்கனு குற்றவாளி அப்பீலுக்குப் போயிட்டான்! விட்டுட்டாங்க!" ○



# நாட்பட்ட எக்ஸிமா, சொரியாஸிஸ், வெண்சர்ம நோய், கடி, தோல்புற்றுநோய் – போன்றவைகளுக்கு தெய்வீக மூலிகை மருத்துவத்தின் அற்புதம்!



எங்களின் பல வருட அனுபவத்தின் பயனாக, உடலில் நோய் எதிர்ப்பு சக்தி குறைவால் சில வகை பொருட்களை உட்கொள்வதாலோ (அ) உபயோகப்படுத்துவதாலோ ஏற்படும் ஒவ்வாமையினால் தோலில்சிறிய கொப்புளங்கள் தோன்றுதல், அரிப்பு, கொப்புளங்களில் இருந்து நீர் வடிதல், தோல் சிவந்து இருத்தல், தடிப்புடன் காணப்படுதல் போன்ற எக்ஸிமா தோல்நோய்க்கும், செதில் செதிலாக காணப்படும் தோல், கால் பாதங்களில் வெடிப்பு தோலின் மேல் பகுதி வறட்சியாக காணப்படுதல் கொப்புளங்களை கிள்ளினால் ரத்தம் வருதல், தோல் சிவந்து காணப்படுதல், கை, கால், இடுப்பு, கழுத்து போன்ற இடங்களில் உள்ள மூட்டுகளில் வலி ஏற்படுதல், உடலின் மடிப்பு பகுதிகளில் அரிப்பு கொப்புளங்கள் தோன்றுதல் போன்ற அறிகுறிகள் கொண்ட சொரியாஸிஸ் என்கின்ற தோல் நோய்க்கும், உதடு, கை விரல்களின் நுனி, முகம், நெற்றி, முன்கை, உடலின் நடுபகுதி, இன பெருக்க உறுப்புகள் போன்ற பகுதிகளில் வெண்புள்ளிகள் தோன்றுதல், மேலும் உடல் முழுவதும், வெண்படையாக மாறும் வெண்குஷ்டத்திற்கும், தோல்புற்று நோய் மற்றும் குஷ்டத்திற்கும் எவ்வித பின் விளைவுகளும் இல்லாத தெய்வீக மூலிகைகளான வேப்பிலை, வில்வம் துளசி, அத்தி, அருகம்புல், கடுக்காய், பூவரசன், குப்பைமேனி, தும்பை அவுரி, பறங்கிப்பட்டை, நெல்லி, ஆவாரம்பூ, செம்பருத்தி போன்ற மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட மருந்துகள் மற்றும் மேல் பூச்சு மருந்துகள் மூலமும், எல்லோராலும் எளிதில் பின்பற்றக் கூடிய உணவு முறை மாற்றத்தாலும் & எளிய உடற்பயிற்சியாலும் விரைவான பலன் பெற ஆலோசனைகளும் & சிகிச்சைகளும் பெறலாம்.

மற்றும் ஆஸ்த்துமா, சர்க்கரை வியாதி, இதய நோய், சிறுநீரகக் கோளாறு, புற்றுநோய், அல்சர், ஆண்மைக் குறைவு, மூட்டுவலி, குழந்தையில்லா குறை போன்ற நோய்களுக்கும் ஆலோசனை பெற தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி

## தெய்வீக மூலிகை வைத்தியர்கள்



தலைமை முகவரி : **Dr. M.குருபரன் & Dr. M. சபாபதி, Dr. M.சிவசக்தி, S/O. Dr. C.K.மாணிக்கவாசகம்**
P.B. NO. 30, 3,திருநாத முதலி நகர் (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர், வேலூர் DT 635601 ✆ : 04179-20469, 22769
சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 600 010. ✆ : 044-6424285, 6427638.
இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் காலை 10.00-1.00 P.M. மாலை 5.00-7.00 P.M.

## ஒவ்வொரு மாதமும் வெளியூர்களில் டாக்டரை நேரில் சந்திக்க

| | | | | |
|---|---|---|---|---|
| **வேலூர்**<br>2-ந்தேதி-12.00 P.M. TO 2 P.M.<br>[illegible]<br>✆ : 0416/21859 | **காஞ்சிபுரம்**<br>2-ந்தேதி-5 P.M. TO 6 P.M.<br>[illegible]<br>✆ : 04112/22549 | **கடலூர் (S.A. DT.)**<br>4-ந்தேதி-9 A.M. TO 11 A.M.<br>[illegible]<br>✆ : 04141/30707, 30717 | **விழுப்புரம்**<br>4-ந்தேதி - 2 P.M. TO 3 P.M.<br>[illegible]<br>✆ : 04146/27961, 24960 | **திருவண்ணாமலை**<br>4-ந்தேதி-5 P.M. TO 6 P.M.<br>[illegible]<br>✆ : 04175/22536 |
| **மும்பை**<br>7 & 8-ந்தேதி-10 A.M. TO 8 P.M.<br>The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga (CR), Ph : 022/4011589 | **பெங்களூர்**<br>9-ந்தேதி-11 A.M. TO 1 P.M.<br>[illegible]<br>✆ : 080/2266374/2873013 | **ஓசூர்**<br>9-ந்தேதி - 4 P.M. TO 5 P.M.<br>[illegible]<br>✆ : 04344/41899, 41129 | **சேலம்**<br>12-ந்தேதி-11 A.M. TO 1 P.M.<br>[illegible]<br>✆ : 0427/449111/449112. | **ஈரோடு**<br>12-ந்தேதி-4 P.M. TO 6 P.M.<br>[illegible]<br>✆ : 0424/226681/82/83/84 |
| **கோயம்புத்தூர்**<br>13-ந்தேதி- 9 A.M. TO 1 P.M.<br>[illegible]<br>✆ : 0422/302319, 302320 | **மதுரை**<br>14-ந்தேதி - 9 A.M. TO 11 A.M.<br>[illegible]<br>✆ : 0452/740940 | **தஞ்சாவூர்**<br>14-ந்தேதி-5 P.M. TO 7 P.M.<br>[illegible]<br>✆ : 04362/30021/30022 | **திருச்சி**<br>15-ந்தேதி-9 A.M. TO 11 A.M.<br>[illegible]<br>✆ : 0431/481545 | **நாமக்கல்**<br>15-ந்தேதி- 2 P.M. TO 4 P.M.<br>[illegible]<br>✆ : 04286/20433, 21336 |
| **நியூடெல்லி**<br>18&19-ந்தேதி-10 A.M. TO 8 P.M.<br>South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh ✆ : 011/5717126, 5723681 | **தர்மபுரி**<br>22-ந்தேதி - 8 A.M. TO 10 A.M.<br>[illegible]<br>✆ : 04342/60026, 64472 | **திருப்பூர்**<br>22-ந்தேதி-2 P.M. TO 3 P.M.<br>[illegible]<br>✆ : 0421/240418. | **உடுமலைபேட்டை**<br>22-ந்தேதி - 6 P.M. TO 7 P.M.<br>[illegible]<br>✆ : 04252/24353 | **திண்டுக்கல்**<br>23-ந்தேதி - 9 A.M. TO 11 A.M.<br>[illegible]<br>✆ : 0451/429056, 427007 |
| **தூத்துக்குடி**<br>23-ந்தேதி - 5 P.M. TO 6 P.M.<br>[illegible]<br>✆ : 0461/327780 | **திருநெல்வேலி**<br>24-ந்தேதி- 8 A.M. TO 11 A.M.<br>[illegible]<br>✆ : 0462/331102. | **நாகர்கோவில்**<br>24-ந்தேதி- 2 P.M. TO 3 P.M.<br>[illegible]<br>✆ : 04652/36078 | **விருதுநகர்**<br>25-ந்தேதி- 8 A.M. TO 10 A.M.<br>[illegible]<br>✆ : 04562/45537 | **கரூர்**<br>25-ந்தேதி-2 P.M. TO 4 P.M.<br>[illegible]<br>✆ : 04324/63763, 62663 |

தகவல் : SUN, RAJ, VIJAY, D.D T.V. களில் எமது பேட்டியை காணத்தவறியவர்கள். டாக்டரின் மூலிகைகள் பற்றிய 27 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய "எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்" இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய "என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்" என்ற இரு புத்தகத்தையும் பதிவுத் தபாலில் பெற ரூ. 130/-மேற்கண்ட முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

'மாமியார்', 'சித்தி'ங்கற உறவு முறை ஒரு கொடுமையான கேரக்டராகத்தான் மக்களிடத்தில் பிரதிபலிக்கிறது. அதை மாற்றணும். அவங்களை ஒரு நல்ல கேரக்டரா காட்டணும்ங்கறதுக்காகத்தான் 'சித்தி'யை உருவாக்கினோம். வெற்றி பெற்றோம்'' என்கிறார்கள் 'சித்தி'க்குத் திரைக்கதை வசனம் எழுதும் கவிதா பாரதியும் ராஜ்பிரபுவும்.

* கவிதா பாரதி, ராஜ்பிரபு

பாரதிராஜாவின் கூடாரத்திலிருந்து வந்திருக்கும் இவர்களிருவரும் ஒரு ஒப்பந்தத்தோடுதான் சீரியலுக்குள் காலடி எடுத்து வைத்தார்களாம்.

"பாரதிராஜா சார்ட்ட ரெண்டு பேரும் அசிஸ்டென்டா வேலை பார்த்தோம். யாருக்கு முதல்ல தனியா படம் இயக்க வாய்ப்பு கிடைக்குதோ அந்தப் படத்துல ஒருத்தர் கதை வசனம் எழுதணும்னு முடிவு பண்ணினோம். அப்புறம் கொஞ்ச நாள்லயே அவர்ட்டயிருந்து வெளிய வந்தோம். 'சித்தி'க்குச் சான்ஸ் கிடைச்சது. பண்ணினோம்'' என்று சொல்லும் கவிதாபாரதி ஈரோடு மாவட்டம் சென்னிமலையைச் சேர்ந்தவர். ராஜ்பிரபுவுக்குத் தேவகோட்டை.

ஒரு காட்சிக்கு வசனம் தேவையென்றால் இருவரும் எப்படி எழுதுகிறார்கள்?

"காதல், ரொமான்ஸ் விஷயங்களை கவிதா நல்லா எழுதுவாரு. குடும்பம், சென்டிமென்ட், பிரச்னை தொடர்பான விஷயங்களை நான், எழுதுவேன். அதாவது ஏரியாக்களைப் பிரிச்சுக்குவோம். சில சமயம் ஒரே சீனுக்கு இரண்டு பேருமே எழுதுவோம். எது நல்லாயிருக்கோ அதை எடுத்துக்குவோம். முக்கியமா எங்க வசனத்துல புதிய விஷயங்களைச் சொல்ல முயன்றிருக்கிறோம்'' என்கிறார் ராஜ்பிரபு.

"கதை வசனம் எழுதுகிறேன் என்று சொல்லிவிட்டு ஒரு குடும்பத்துக்குள் எவ்வளவு பிரச்னைகளை உருவாக்குகிறீர்கள்?'' என்றால் சிரிக்கிறார்கள் இருவரும்.

''பிரச்னை இல்லாத வாழ்க்கை இல்லை; குடும்பங்களுக்குள்ளும் உறவுகளுக்குள்ளும்

பிரச்னை இருந்துட்டேதான் இருக்கும். எந்த ஒரு பிரச்னையையும் வலிந்து உருவாக்கலை. பார்த்துப் பழகி பிரிந்து போன அல்லது மறந்து போன கேரக்டர்களைத் தோண்டி எடுத்து அதற்கு உயிர் கொடுக்கிறோம். அதுமட்டுமில்லாம பிரச்னை இல்லாத சீரியல்களைப் பெண்கள் ரசிப்பதில்லை. மனசுல வச்சிருக்கிற, காயப் பட்டிருக்கிற சில விஷயங்களைத் தொடரில் பார்க்கும் போது அவங்க அதில் முழுவதுமாக ஈடுபட்டுடறாங்க. இதுதான் தொடர்களின் வெற்றிக்குக் காரணம்" என்று குட்டி லெக்சர் அடித்தவர்கள், "ஆரம்பத்தில் 'பாரதி' என்ற பெயரைத்தான் வச்சிருந்தோம். ராதிகாதான் 'சித்தி' பெயரைத் தேர்ந்தெடுத்து, இந்தப் பெயர் நல்லா 'ரீச்' ஆகும்னு சொன்னாங்க. அது மாதிரியே ஆகி விட்டது. சித்திக்கு முன்பு வரை ராதிகாவை 'ரயில் நடிகை'னுதான் சொல்வாங்க. ஆனா இப்ப 'சித்தி ராதிகா'ங்கற பெயர் மாற்றம் வந்திருக்கு. அந்தளவுக்கு ஒரு பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியிருக்கிறது இத் தொடர்" என்கிறார்கள்.

இப்போது இவர்களின் கையில், ராஜீவ் மேனன் தயாரிப்பில் உருவாகும் செம்பருத்தி, நீலவானம், மெட்ராஸ் டாக்கீஸின் 'பஞ்சவர்ணம்' ஆகிய தொடர்கள் இருக்கிறதாம்.

"பகல் நேரத்தில வர்ற தொடர்களைப் பெண்கள் தான் பார்ப்பாங்கங்கிற நிலை இருக்கு. எங்களோட அடுத்தத் தொடர் அதை மாற்றும். எல்லாரையும் டீ.வி. முன்னால கட்டிப் போடப் போறோம். சித்தியில ஒரு கலகக் குரல் வந்துட்டே இருக்கும். அதே மாதிரி அடுத்தத் தொடர்ல புதுமையான ஒரு குரல் தொடர் முழுக்கக் கேட்டுட்டு இருக்கிற மாதிரி பண்ணப் போறோம்" என்று சஸ்பென்ஸ் வைக்கும் இவர்கள், பாரதிராஜாவின் தாய் கருத்தம்மா பாராட்டியதைச் சிலாகித்துச் சொல்கிறார்கள்.

**"கதை வசனம் எழுதுகிறேன் என்று சொல்லிவிட்டு ஒரு குடும்பத்துக்குள் எவ்வளவு பிரச்னைகளை உருவாக்குகிறீர்கள்?"**

# "கரையேறிட்டீங்கடா!"

"டைரக்டர் (பாரதி ராஜா) ஊருக்குப் போயிருந்தப்போ ராத்திரி ஒன்பதரை மணிக்கு அவங்க அம்மாவிலிருந்து எல்லாரும் இவரை 'அம்போ'ன்னு விட்டுட்டு 'சித்தி' பார்க்க டீ.வி. முன்னால உட்கார்ந்துட்டாங்களாம். அவராலயே நம்ப முடியாம, அப்படி அதுல என்ன இருக்குன்னு கேட்டப்போ, 'ரொம்ப நல்லாயிருக்கு'ன்னு சொல்லியிருக்காங்க. "அதை எழுதறவங்க என்னோட அசிஸ்டெண்டுதான்; இங்கயெல்லாம் வந்திருக்காங்க'ன்னு சொன்னதும், டைரக்டரை எல்லாரும் மொய்ச்சிருக்காங்க. இங்க வந்ததும் எங்க ரெண்டு பேரையும் கூப்பிட்டு விஷயத்தைச் சொல்லிடு, "நீங்க கரையேறிட்டீங்கடா'ன்னு சொன்னார் டைரக்டர். நாங்க புல்லரிச்சுப் போய்ட்டோம். எங்களை எங்களுக்கு அடையாளம் காட்டியது பாரதிராஜா. உலகத்துக்கு எங்களை அடையாளம் காட்டியது ராதிகா!"

"இருவரும் இறுதி வரை சேர்ந்துதான் எழுதப் போகிறீர்களா?" என்றதும் மறுக்கிறார்கள்.

"டீ.வி. தொடர் என்பது பரந்து விரிந்த தளம். அதுல கூட்டுப் படைப்புத் தேவை. சினிமாவுக்கும் தேவைன்னாலும் மெசேஜ் சொல்றது ஒரே பாணியில் இருக்கணும். சினிமாவைப் பொறுத்த வரை யாருக்கு முதல்ல படம் இயக்க வாய்ப்பு கிடைக்குதோ, அவங்க படத்துல மற்றவர் கதை வசனம் எழுதுவோம்." என்கிறார்கள்.

**- செ. ஏக்நாத்**

பா.ஜ.கவின் கூட்டணிக் கட்சியான தி.மு.கவும், அந்த அணியிலுள்ள மற்ற கட்சிகளும், வகுப்புவாதத்திற்குப் பலமான அரணாகச் சென்றபோது "நான் பிரதமராக இருப்பது சில காலமே; ஆனால் நான் உயிருள்ள வரையில் ஸ்வயம் சேவக் சங்கத்தின் ஊழியனே" என்று வாஜ்பாய் சொன்னதை நினைவுபடுத்துகிறேன். பாபர் மசூதி இடிப்பு வன்முறையில் ஈடுபட்ட அத்வானி, முரளி மனோகர் ஜோஷி, உமா பாரதி இன்று அமைச்சர்களாக இருக்கிறார்கள். லட்சுமணபுரியில் உள்ள சிறப்பு நீதிமன்றத்தில் இவர்கள் மீது குற்றம் சாட்டி வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதை நடத்த வேண்டியவர்கள் அத்வானி பொறுப்பிலுள்ள மத்திய புலனாய்வுத் துறையினர்தான். உள்துறையின் பொறுப்பை வைத்திருக்கும் அமைச்சர் மீது, அவரது இலாகாவினரே எப்படி வழக்கை நடத்துவார்கள்? எனவே அந்த வழக்கு முடியும் வரை அத்வானியும் மற்றவர்களும் பதவியிலிருந்து விலகியிருக்க வேண்டும். குற்றம் சாட்டப்பட்டவர்கள் பல உபாயங்களைக் கையாண்டு அந்த வழக்கை இழுத்தடிக்கின்றனர். மக்கள் மத்தியில் இவர்களின் இந்த சூழ்ச்சிவேலை, ஆழமான சந்தேகங்களைக் கிளப்பிவிட்டுள்ளது. எனவே சட்டத்திற்கு முன் அனைவரும் சமம் என்ற அடிப்படையில், அமைச்சர்கள் மூவரும், ராஜினாமா செய்து வழக்கைத் துரிதமாக நடத்த பிரதமர் ஏற்பாடு செய்ய வேண்டும்.



# "தி.மு.கவைத் தோற்கடிப்போம்!"

உச்சநீதிமன்றத்தின் இறுதித் தீர்ப்பு வரும் வரை அயோத்தி பிரச்னையில் எந்தப் பணியும் துவக்கப்படக் கூடாது என்பது அவசியமாகும். ஆனால் வி.ஹெச்.பி., பஜ்ரங்தளம் போன்றவை கோவில் கட்டுமானப் பணிகளைப் பல இடங்களில் வைத்து செய்து வருகின்றன. 'உச்சநீதிமன்ற தீர்ப்பை ஏற்றுக் கொள்வேன்' என்று சொல்லும் பிரதமரின் கண் எதிரேயே, பா.ஜ.கவின் தோழமை அமைப்புகள் கோவில் கட்டுமானப் பணிகளில் ஈடுபட்டு வருகின்றன. ஆனால் அதைத் தடை செய்வேன்' என்று சொல்லும் தைரியம் பிரதமருக்கு இல்லை.

நடக்கும் நிகழ்ச்சிகளைப் பார்த்தால் பா.ஜ.கவும், அதன் துணை அமைப்புகளும் நன்றாக நாடகமாடுவதாகத்தான் தெரிகிறது. இது தவிர குஜராத் மாநிலத்தில் நாள்தோறும் கிறிஸ்தவ தேவாலயங்கள் மீதும், கிறிஸ்தவர்கள் மீதும் தாக்குதல் தொடுக்கப்பட்டு வருகிறது.

பா.ஜ.கவின் சிறுபான்மை விரோத ஆட்சிக்கு, ஆதரவு அளித்து வரும் தி.மு.க., பெரியார் பாரம்பரியத்தை விட்டு முற்றிலும் விலகிவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும். பா.ஜ.க. அரசும், கட்சியும், தேச ஒற்றுமையைக் குலைக்கும் விதத்தில் வகுப்புவாத விஷத்தைத் தூவி விடுவதைப்

பற்றி தி.மு.க. கொஞ்சமும் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. தி.மு.கவின் ஆதரவைக் கொண்டுதான் தமிழகத்தில் 'ஹிந்துத்வா' பிரசாரம் தீவிரமாக நடக்கிறது. "எங்களுக்கு அறுபது சட்டமன்றத் தொகுதிகள் வேண்டும்' என்று கோரும் அளவுக்குப் பா.ஜ.கவுக்குத் துணிச்சல் வந்திருக்கிறது என்றால் அது யாரால்?

மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைப் பொறுத்தவரை வேறு எந்த ஆபத்தைவிட வகுப்புவாதத்தைப் பெரும் சீர்குலைவு சக்தியாக நினைக்கிறது. வகுப்புவாதம் பேசும் சக்திகளையும், அதற்கு முட்டுக் கொடுக்கும் சக்திகளையும் வேரடி மண்ணோடு அகற்ற மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் போராடும். எனவேதான் வர இருக்கின்ற சட்டமன்றத் தேர்தலில் பா.ஜ.கவுக்கு அரணாக நின்று



## எஸ். சங்கரய்யா

### செயலாளர் – தமிழ்நாடு மாநிலக் குழு. இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்ஸிஸ்ட்)

கொண்டிருக்கும் தி.மு.கவைத் தோற்கடிக்க வேண்டுமென்பது அவசியமாகும்.

பா.ஜ.கவின் மதவாதக் கொள்கையால் மட்டுமல்ல, அதனுடைய தவறான பொருளாதார கொள்கை காரணமாக நாடே சீரழிந்து வருகிறது. தங்கு தடையற்ற விவசாயப் பொருட்களின் இறக்குமதி காரணமாக நமது நாட்டு விவசாயி மிகவும் பாதிக்கப்பட்டு இருக்கிறான். அவனுக்கு நியாய விலை கிடைக்கவில்லை. தேயிலை, பருத்தி, ரப்பர் ஆகியவற்றை உற்பத்தி செய்யும் விவசாயிகள் மிகுந்த பாதிப்புக்கு ஆளாகி இருக்கிறார்கள். இது தவிர மேற்கத்திய நாடுகளிலிருந்து ஏராளமான தொழிற் பொருட்கள் இறக்குமதி செய்யப்படுகின்றன. இதன் காரணமாக நமது நாட்டு நடுத்தர சிறு தொழில்கள் நசுங்கிப் போய்விட்டன.

இது தவிர, நாம் மிகுந்த சிரமப்பட்டு உருவாக்கிய பொதுத்துறை நிறுவனங்கள், பன்னாட்டு முதலாளிகளுக்கும், நமது நாட்டு முதலாளிகளுக்கும் தாரை வார்த்துக் கொடுக்கப்பட்டு வருகின்றன. இப்படி மக்கள் விரோத கொள்கைகளை அமுல்படுத்தி வரும் பா.ஜ.க.–தி.மு.க. கூட்டணிக்கு எதிராக, தமிழகத்தில் உள்ள மதச் சார்பற்ற சக்திகள் போராட வேண்டியுள்ளது. மதச்சார்பற்ற அணி அமைப்பதில் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் தீவிரமாக ஈடுபட்டுள்ளது. மதச்சார்பற்ற அணியில் உள்ள கட்சிகள் ஆங்காங்கே மத்திய–மாநில அரசுகளின் தவறான கொள்கைகளை எதிர்த்து மக்களைத் திரட்டி மாநாடுகள் நடத்தி வருகின்றன. இதற்கு மக்கள் அமோக ஆதரவு கொடுக்கிறார்கள். மதச் சார்பற்ற அணி அமைக்கும் பொருட்டு, எங்கள் செயலாளர் சுர்ஜித், ஜெயலலிதா மற்றும் மூப்பனாரைச் சந்தித்துப் பேசியுள்ளார். சட்டப்பேரவை தேர்தலில் வகுப்புவாத பா.ஜ.க., தி.மு.க. கூட்டை முறியடிப்பதற்காக ஒரு முழுமையான அணி உருவாகும். ஒரு கட்சியின் பழைய நிலைப்பாட்டை பற்றிப் பேசுவது சரியல்ல; இன்றைய சூழலில் கட்சிகள் எடுத்துள்ள நிலைகளை வைத்துத்தான் கூட்டணி பற்றி முடிவு செய்ய வேண்டும்.

வரும் தேர்தலில் வகுப்புவாதத்தைக் கிளப்பும் பா.ஜ.க.–தி.மு.கவின் முகமூடியை அகற்றும் விதத்தில் எங்கள் பிரசாரம் அமையும். அதுதவிர மத்திய அரசின் பிற்போக்குக் கொள்கைகளை மக்களிடம் எடுத்துச் சொல்வோம். விவசாயிகள், கைத்தறி, விசைத்தறி நெசவாளர்கள் ஆகியோர் பிரச்னைகள் தீர்க்க குரல்கொடுப்போம். ஜாதிய ஒடுக்கு முறைகளை ஒழிப்போம். உள்ளாட்சி மன்றங்களுக்குப் போதிய நிதிவசதி, அதிகாரம் பெற போராடுவோம். சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினருக்காகவும் போராடும் நாங்கள், வருகிற தேர்தலில் பா.ஜ.க.–தி.மு.கவைத் தோற்கடித்து மதச்சார்பற்ற சக்திகள் வெற்றி பெறச்செய்வதையே முக்கியப் பணியாக, முதன்மைப் பணியாகக் கருதுகிறோம்.○

படம்: ராஜன்



மெல்லிய புல்லாங்குழல் ஓசை அந்த இடத்தை நிறைத்திருந்தது. அது ஒரு ரெஸ்டாரெண்ட். பிஸினஸ் பேசுவதற்கு வசதியான அமைப்பு கொண்ட இடம். தள்ளித் தள்ளிப் போடப்பட்ட டேபிள்கள், உறுத்தாத லைட்டிங், மனதைச் சாந்தப்படுத்தும் இசை. என் எதிரே இருந்தவரைப் பார்த்தேன். ஸ்பூனால் ஸ்வீட்டை விண்டுகொண்டிருந்தார்.

# அடுத்த வாரத்துக்குள்...

கிருஷ்ணா

சேல்ஸ் ப்ரமோட்டர். விற்பனையை ஊக்குவிப்பவர்.

எனது வலதுபுறம் அமர்ந்திருந்த விற்பனைப் பிரதிநிதி மாதவனைப் பார்த்தேன். என் கீழே வேலை செய்யும் துடிப்பான இளைஞன்.

விற்பனை மேலாளரான எனக்கு, தென்மண்டலம் முழுதும் ஒதுக்கப்பட்டிருந்தது.

புதுவிதமான கைக்கடிகாரங்களைத் தயாரித்து விற்கிறது எங்கள் கம்பெனி.

"மேலை நாடுகளில் கடிகார விற்பனைக்குன்னு தனி கடைகளே கிடையாது. நகைக்கடைகளின் ஒரு அங்கமாகத்தான் கடிகார விற்பனைப் பிரிவு இருக்கும்" என்றார் எதிரேயிருந்த நபர்.

விற்பனை ஊக்குவிப்பாளர் சொன்ன செய்தியை ஆமோதித்தேன். பிசினஸ் படிந்துவிட்டது. இனி அவர் என்ன சொன்னாலும் சரிதான். கருத்து உண்மையும்கூட.

திடீரென மாதவன் குறுக்கிட்டான்.

"சார், இவர் வேறு ஒன்றிலும் பெரிய ஆள் சார்" என்றான்.

"அப்படியா?" என்று சந்தோஷத்தைக் காட்டினேன்.

"ஒருத்தர் முகத்தைப் பார்த்தே ஜோசியம் சொல்வார்" என்றான் மாதவன். மாதவனின் குடும்ப நண்பராம் அவர்.

"நிஜமாகவா?" என்றேன்.

ஆனால் என் குரலிலிருந்து வியப்பு, மனத்தில் இல்லை. இந்த ஜாதகம், ஜோசியமெல்லாம் கண் கட்டு வித்தை என்பது என் எண்ணம்.

"என் பாஸ் முகத்தைப் பார்த்து ஏதாவது சொல்லுங்களேன்" என்றான் மாதவன்.

அவரும் என் முகத்தை உடனே கூர்ந்து பார்த்தார்.

"இன்னும் ஒரு வாரத்துக்குள்ளே..."

அவர் சொல்ல ஆரம்பித்து, கடைசி வார்த்தையை முடிக்கும்போது, பக்கத்து டேபிளில் இருந்து வந்த இரைச்சலில் அவர் வார்த்தைகள் அமுங்கிப் போனது. பிறந்தநாள் பார்ட்டி!

பக்கத்து டேபிளில் ஒரு இளைஞனுக்கு, ஒரு இளைஞி கேக் ஊட்டிக்கொண்டிருந்தான். சுற்றி வர மேலும் சில இளமைகள்.

கடந்து வந்த வயதை நினைத்து ஏக்கம் பிறந்தது எனக்கு.

அதற்குள் பேரர் பில்லுடன் வர விடை பெற்றோம்.

அடுத்த மூன்று நாட்களும் டெல்லியிலிருந்து 'பிக் பாஸ்' வர, ஒரு நாளைக்கு முப்பத்தாறு மணி நேரம் உழைப்பது போன்ற பிரமையில் கழிந்தது.

பிக் பாஸ் புறப்பட்டுச் சென்ற அடுத்த நாளே, எனது வழக்கமான டூர் ஆரம்பித்து விட்டது.

வீட்டில் துணிமணிகளைப் பெட்டியில் திணிக்கும் போதுதான் அம்மா கேட்டாள்.

"ஏன்டாப்பா, வர்ற புதன்கிழமை நம்ம நடராஜன் பேத்திக்குக் கல்யாணம். நான் ஊருக்குப் போகணும். என்னை நம்மூர்லே கொண்டு விடறியா, போற வழிதானே?"

'நம்மூர்' என்பது எங்கள் கிராமம். பெயர் கண்டனூர். நான் ஜனித்த ஊர். பள்ளி இறுதி வகுப்பு வரை படித்த ஊர். விட்டு வந்து இருபது வருடம் ஓடிவிட்டது. அம்மா மட்டும் கல்யாணம், அது, இது என்று அடிக்கடி போய் வருவாள். எங்களுக்கென்று சொந்த வீடு உண்டு. தூரத்துச் சொந்தக்காரர் சுப்பு வாடகையில்லாமல் வசிக்கிறார் அதில்.

"கூட்டிட்டுப் போங்களேன். கிழத்தோட பிடுங்கல் இல்லாம இருப்பேன் நானும்..."

என் மனைவி வந்து காதைக் கடித்தாள்.

என் மனைவிக்கு என் அம்மா கிழம். என் அம்மாவுக்கோ இவள் தாடகை. இதெல்லாம் அவர்களுக்குள் நடக்கும் ஒலிம்பிக்ஸ்.

அம்மாவுடன் காரில் கிளம்பினேன். ஆறு மணி நேரப் பயணத்தில் கண்டனூர் 'ஹலோ' என்றது.

"சுப்பு குடும்பத்தோட திடீர்னு கிளம்பிப் போயிட்டான் ஊருக்கு. பெரிய காரியம். ஆனால் எல்லா சாமானும் வீட்டுலே இருக்காம்" என்று பக்கத்து வீட்டுக்காரர் சாவியைக் கொடுத்தார். கூடவே காபியும்.

வீட்டைத் திறந்துகொண்டு உள்ளே போனோம். காரில் வந்தது அலுப்பாயிருந்தது. ஹாலில் மரத்தாலான ஈசிச்சேர் கம்பீரமாய்க் கிடந்தது. அதன் கைப்பிடியிலிருந்து இரு பக்கமும் இறக்கை போல் புறப்பட்டு முன்னே வந்து சேரும். நாம் முதுகை ஈசிச்சேரில் சார்த்திக்கொண்டு, காலைத் தூக்கி இந்த இறக்கைகளின் மீது வைத்துக்கொண்டு கண்ணை மூடினால், உள்ளே வீணை மீட்டி தூங்கச் செய்யும் சுகம் கிடைக்கும்.

"உங்கப்பா இதிலே படுத்துண்டு இருக்கறச்சேதான்டா உயிர் பிரிஞ்சுது."

அம்மா எப்போது இதைப் பார்த்தாலும் சொல்லி விடுவாள். இப்போதும் சொன்னாள்.

"இருட்டிடுத்து. ராத்திரி தங்கிட்டு காலையிலே போ, என்ன?"

அம்மாவின் அசரீரிக்குச் சரியென்றேன்.

ஹால் முழுவதும் கண்களைச் சுழற்றினேன். அதோ அந்த ஜன்னலோரம்தான் எப்போதும் அமர்ந்து படிப்பேன். பக்கத்திலுள்ள சுவர் அலமாரியில்தான் என் பள்ளிப் புத்தகங்கள் இருக்கும். அதோ அந்த இடதுபுற அறையில்தான் படுத்துக்கொள்வேன். அம்மாவின் புடைவையை விரல் நுனியில் சுற்றியபடி படுத்தால்தான் தூக்கம் வரும். அப்போது அம்மா, இப்போது மனைவி. பெண்ணைச் சார்ந்துதான் ஆண் வாழ்கிறான்.

மழை பெய்யும்போது கூடத்தில் நடுவில் உள்ள முற்றத்தில், நாலு மூலை, பக்கமும் அருவியாய் நீர் கொட்டும். அம்மாவுக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு அதில் குளித்த ஞாபகங்கள் எழுந்தன.

> "தலைவர் புதுசு புதுசா தப்பு பண்றாரே... ஏன்?"
>
> "கடந்த கால தவறுகளை மீண்டும் பண்ணக் கூடாதுன்னு செயற்குழுவிலே சொல்லிட்டாங்களாம்!"
>
> — தஞ்சை தாமு

கூடத்தின் சுவரில் அதோ கிருஷ்ணர் படம். தஞ்சாவூர் ஓவியத்தில் ருக்மிணி, சத்யபாமா சமேதராய்ச் சிரிக்கிறார். எனது ராசிக் கடவுள். பரீட்சைக்குப் போகும் போதெல்லாம், இந்தப் படத்தை வணங்கிவிட்டுப் போனால் நிறைய மார்க்குகள் வரும். தூசி படர்ந்து கிடக்கும் படத்தை நாளை கிளம்புவதற்குள் துடைக்க வேண்டும்.

"என்னடா, கிருஷ்ணர் படத்தையே பார்க்கறே?" என்றபடி அம்மா அருகில் வந்தாள்.

சிரித்தேன்.

"பழைய ஞாபகம்" என்றேன். அம்மாவுடன் கூடவே வந்த சமையல் மணம் பசியைக் கிளப்பியது.

இப்போது அம்மாவின் பார்வை, கூடத்தின் இண்டு, இடுக்குகளில் லயித்தது.

எனக்கு இருபது வருட ஆளுமை இந்த வீட்டில் என்றால், அம்மாவுக்கு நாற்பது வருடமாயிற்றே! அம்மா மீள நீண்ட நேரமானது.

அடுத்தநாள் பரபரப்பான செய்தியோடு விடிந்தது.

"தமிழ்நாடு முழுக்கக் கலவரமாம். நேற்று நடுராத்திரில அந்தத் தலைவர் கட்டுக் கொல்லப்பட்டார். இரண்டு மூணு நாளைக்குத் திமிலோகப்படும். யாரும், எங்கும் போக முடியாது."

பக்கத்து வீட்டுக்காரர் ஒலிபரப்பினார்.

"நீ எங்கேயும் போக வேண்டாம்" என்றாள் அம்மா கவலையுடன். எனக்கும் வேறு வழியில்லை.

பரபரப்பான பட்டண வாழ்க்கைக்கு மாறாய் நிதானமாய்ப் பொழுது விடிந்தது.

பல் தேய்த்து, காபி சாப்பிட்டு விட்டு, கொல்லைப்பக்கம் சென்றேன். சீதாப் பழ மரம், நெல்லி மரம், மாமரம் என்று ஜிலுஜிலுவென்று இருந்தது. துவைக்கும் கல்லில் அமர்ந்தேன். அணில் ஒன்று என் காலருகில் ஓடியது.

நெல்லி மரத்தின் புண்ணியத்தில் இந்தக் கிணற்று நீர் கற்கண்டாய் இனிக்கும். ராட்டினம் கடகடக்க கயிறு, வாளி கொண்டு தண்ணீர் இறைத்தேன்.



முகத்தை அலம்பினேன். முகத்தில் பட்ட நீரின் குளிர்ச்சி, உள்ளங்கால் வரை ஓடியது. வாய் கொப்பளித்தேன். அதே ருசி.

கடகடவென நீர் இறைத்து தலையில் விட்டுக் கொண்டேன். பயணத்தின் சூடும், அலுப்பும் ஓடிய இடம் தெரியவில்லை. பழக்கம் விட்டுப் போனதால் கயிறு பட்டு கைதான் எரிந்தது.

"கோயிலுக்குப் போகப் போறியா?" என்று அம்மா கேட்டதும் போனாலென்ன என்று தோன்றியது. கிளம்பிவிட்டேன்.

சிவன் கோவில் ஒன்றும், செல்லாயி அம்மன் கோவில் ஒன்றும் ஊரில் உண்டு.

கோயிலில் குருக்கள் என்னை யாரென்று விசாரித்தார்.

"நான்தான் மாமா. உங்க கையாலே பொங்கலும், சுண்டலும் வாங்கிச் சாப்பிட்ட அதே சின்னப் பையன்தான்" என்றேன்.

குருக்கள் மாமா வெண்பொங்கல் செய்தால், நளன் தோற்றான். அப்படி ஒரு தனி ருசி. நெய் வழியும் சூடான பொங்கலை, நாக்குக் கொதிக்க வாயில் இடும்போது, வழுக்கியபடி உள்ளே ஓடும். உணவுக்குழல் முதல், இரைப்பை வரை சுடும். மிளகின் காரம் வேறு நாக்கில் ஊறும்.

"சுஜாதா சௌக்யமா? எப்படி இருக்கா?" என்றேன்.

குருக்களின் ஒரே பெண். என்னை விட இரண்டு வயசு சிறியவள். அப்போது எங்கள் ஊரின் ஐஸ்வர்யாராய்.

"நன்னாயிருக்கா. இப்போ ஊரிலேதான் இருக்கா. மாப்பிள்ளை நன்னா சம்பாதிக்கறார். நன்னா வைச்சுண்டு இருக்கார்."

குருக்களுக்குப் பெருமையில் முகம் ஜொலித்தது.

கோவிலைச் சுற்றி விட்டு வெளியே வரும்போது சுஜாதாவே எதிரில் வந்தாள். கொஞ்சம் வயதான ஐஸ்வர்யாராய்!

"ஹலோ சுஜா" என்று வழி மறித்தேன்.

"ஹேய், நீயா?"

அவள் முகத்தில் குதூகல மலர்ச்சி.

"தொங்கு மீசை, முன் வழுக்கை... ம், ஆளே மாறிட்டே" என்றாள்.

"நீ மட்டும் என்னவாம்? கொத்தவரங்காய் உடம்பு, டபுள் பீன்ஸாயிடுத்து" என்றேன்.

பக பகவென சிரித்தாள்.

"என்ன?" என்றேன்.

"இல்லை, நீ என் பின்னாடியே வந்து, வழியுவியே! அந்த ஞாபகம் வந்தது. வார்த்தையே வராம எப்படி உளறினே? அது எப்படி நான் எங்கே போனாலும், எனக்கு முன்னாடி அந்த இடத்துல ஆஜராயிடுவே?"

"அது ரகசியம். உன் தம்பிக்கு எத்தனை முறுக்கு, ரவை உருண்டையெல்லாம் லஞ்சம் கொடுத்திருப்பேன் தெரியுமா? நீயும்தான் அன்னிக்கு வேர்த்து, விறுவிறுத்துப் போய், என்னைப் பார்க்கவே பயந்து, காலாலே கோலம் போட்டு, தாவணி நுனியைத் திருகி... ஹா, ஹா, ஹா"

கொஞ்ச நேரம் எங்கள் சிறுவயது, விடலைப் பருவ சேட்டைகளைக் கிண்டலடித்து விட்டு அவளிடம் விடை பெற்றேன்.

மனசு முழுக்க புதையல் தோண்டி தங்கம் கிடைத்த சுவாரஸ்ய மகிழ்ச்சி.

வீட்டின் சந்து முனையில்தான் பாலுவைச் சந்தித்தேன். என் பள்ளிக்கூடத் தோழன். நகமும், சதையுமாய் உலா வருவோம். எனக்கு நீச்சல் கற்றுக் கொடுத்த குரு அவன்.

"ஏய், பாலு" என்றேன்.

## நான் ரெடி; நீங்க ரெடியா?

இயற்கை உணவுக்கு ஆதரவாக ஒங்கிக் குரல் கொடுத்துக் கொண்டிருக்கும் முன்னாள் எம்.எல்.ஏ சைதை துரைசாமி அதேசமயத்தில் மது அரக்கனின் கொடுமையை எதிர்த்தும் புதுமையான முறையில் பிரசாரம் செய்கிறார். மொடாக்குடியர்கள் குடியை ஒரு வருடம் தொடாமலிருந்தால் அந்த மனம் திருந்திய மைந்தனுக்கு ஒரு சவரன் பரிசு கொடுக்கிறார். இத் தத் திட்டத்தில் கலந்துகொண்டு பரிசு பெற 'குடி' மன்னர்கள் துரைசாமியிடம் பெயரைப் பதிவு செய்ய வேண்டுமாம். அப்போது அவர்களது ரத்தம் சோதனை செய்யப்பட்டு அதில் உள்ள ஆல்கஹால் அளவு குறித்து வைத்துக் கொள்ளப்படும். ஒரு வருடம் கழித்து மீண்டும் ரத்தம் சோதனை செய்யப்பட்டு அதில் ஆல்கஹால் இல்லாத பட்சத்தில் திருந்திய 'குடி' மகன்கள் ஒரு சவரன் தங்கம் பரிசாகப் பெறுவார்களாம். இது போன்று மனம் திருந்திய நான்கு பேர்களுக்குச் சமீபத்தில் சவரன் பரிசு கொடுத்திருக்கிறார் துரைசாமி. "1984-85ல் இந்தத் திட்டத்தை அறிவித்தேன். இது நாள் வரை ஏழு பேர்கள் தான் திட்டத்தில் கலந்து கொண்டார்கள். அதிலும் நான்கு பேர்கள்தான் குடியை நிறுத்தி பரிசு பெற்றனர்"



– கௌசி

படம்: சௌரா

சிரித்தான் மரியாதையாய்.

"நான்தான்டா! தெரியுதா?"

தலையசைத்தான்.

"என்ன பண்றே?"

"வாடகை சைக்கிள் கடை வைச்சிருக்கேன்" என்றான்.

கடைசி வரை பழைய நட்பின் உரிமையைக் காட்டாமல் அந்நியத்தன்மையோடு அவன் விலகிப் போனது வருத்தமாயிருந்தது.

யோசித்தபடி நடந்தேன். என்ன காரணம்? சமூக அந்தஸ்துதானோ? சுஜாதா நல்ல நிலையில் உள்ளதால் சரி நிலையில் பேசுகிறானோ? பாலுவிடம் காணப்படும் அந்நியம் என் ஜீன்ஸ் பேண்ட், லீரோ சட்டை போன்ற பணக்காரத் தன்மையினால்தானோ?

சக மனித நெருக்கம், பழக்கம் எல்லாம் சமூகக் காரணிகளால்தானே தீர்மானிக்கப் படுகிறது இக் காலத்தில்.

சட்டென எனக்கு அம்மா ஞாபகம் வந்தது. கிட்டத்தட்ட பதினைந்து வருடமாய் அம்மாவுக்கும், எனக்கும் இடையே உள்ள நெருக்கம் மனதளவில் விலகிக் கிடப்பது புரிந்தது.

ஏன்? எனது வேலைப்பளு, திருமணம், எனக்கென்று ஏற்பட்டுவிட்ட தினசரி வாழ்க்கை வட்டம் இவைதான் காரணமோ?

யோசித்தபடி வீட்டுக்குள் நுழைந்தேன். அம்மாவைத் தேடி சமையலறை சென்றேன்.

"உனக்குப் பிடிச்ச புடலங்காய் பொரிச்ச கூட்டு, தேங்காய்த் துவையல், தயிர்ப் பச்சடி. பசிக்குதா?" என்று கேட்டவளை உற்றுப் பார்த்தேன்.

"உன் சமையலைச் சாப்பிட்டு நாளாச்சும்மா" என்றேன்.

"உனக்கு எங்கே நேரம்?" என்றாள்.

புடலைக்கூட்டை எடுத்து வாயில் போட்டுக்கொண்டேன். பச்சடியை ருசி பார்த்தேன்.

சாப்பிட்டு முடித்து அம்மாவும், நானும் கூடத்திற்கு வந்தோம்.

காலை நீட்டிக்கொண்டு அம்மா அமர்ந்தாள். நான் அருகில் அமர்ந்தபடி அவள் கால்களைப் பிடித்துவிட ஆரம்பித்தேன்.

"எதுக்குடா" என்று தடுக்கப் பார்த்தாள்.

"பரவாயில்லேம்மா! உனக்கு ஞாபகம் இருக்கா. ஒரு தரம் நாம ரெண்டு பேரும் சர்க்கஸ் பார்க்கப் போனோமே."

அம்மாவும், நானும் பழங்கதைகளைப் புரட்டியதில் நேரம் ஓடியதே தெரியவில்லை.

அடுத்தநாளே அரசின் கறுகறுப்பால், சகஜ வாழ்க்கை திரும்ப, நானும் என் தொழிலைக் கவனிக்கப் புறப்பட்டேன்.

இரண்டு நாளில் ஆபீஸ் திரும்பியபிறகு, மாதவன் கேட்டான்.

"சார் அந்த சேல்ஸ் பிரமோட்டர் உங்க முகத்தைப் பார்த்து ஜோசியம் சொன்னாரே..."

"என்ன சொன்னார்?" என்றேன்.

"ஒரு வாரத்துக்குள்ளே இழந்தது கிடைக்கும்னாரே, ஏதும் கிடைச்சதா?" என்றான்.

மறுத்து தலையசைக்கப் போன நான், திகைத்துப் போய் நடந்ததை நினைத்துப் பார்த்தேன்.

கிராமத்துச் சூழல், அமைதி, ஆனந்தம், உற்சாகம், முக்கியமாய்க் கொஞ்ச வருடங்களாய் அம்மாவுக்கும், எனக்கும் நடுவிலிருந்த புகை மண்டலம் அகன்ற பரவசம்... ஆம், இழந்தது கிடைத்தது. கிடைக்கத்தான் செய்தது!

புன்னகையுடன் மாதவனை நோக்கினேன். ○

## பாயத் துடிக்கும் பா.ம.க.



தமிழகத்தில், வரும் சட்டமன்றத் தேர்தலை மிகவும் ஆவலுடன் எதிர்பார்க்கும் கட்சிகளில் பா.ம.கவும் ஒன்று. "நாங்கள் எந்த அணியில் இருக்கிறோமோ அந்த அணிக்கு வெற்றி நிச்சயம்" என்று உறுதியாகச் சொல்கிறார்கள் அந்தக் கட்சிப் பிரமுகர்கள். இப்படி ஒரு அசாத்தியத் தன்னம்பிக்கை இருப்பதால் டாக்டர் ராமதாஸ் அதிரடியாகச் சில காய்களை நகர்த்திக் கொண்டிருக்கிறார்.



தமிழகம் மற்றும் பாண்டிச்சேரியைப் பொறுத்த மட்டில் தேசிய ஜனநாயகக் கூட்டணியின் தலைமைக் கட்சி தி.மு.க.தான். தலைவர் கலைஞர்தான். ஆனால் தி.மு.கவைக் கடுப்படிக்கும் விதமாக



# முதல்வர் போடும் மூக்கணாங்கயிறு!

'2001ல் பாண்டிச்சேரியில் பா.ம.க. தலைமையில் ஆட்சி' என்றும் தொகுதிகள் பிரிக்காத நிலையில் ஆண்டிமடம் தொகுதிக்கு வேட்பாளரும் அறிவித்து சலசலப்பை உண்டாக்கியிருக்கிறார். கும்மிடிப்பூண்டியில் பேசும்போது 'என்.டி.ஏவில் நாங்கள் இருக்கிறோம்' என்றும் குற்றாலத்தில் பேசும்போது 'பா.ம.க. தனித்து ஒரு நிலை எடுக்கும்' என்றும் முன்னுக்குப் பின் முரணாகப் பேசி வந்தார். டாக்டரின் இந்தப் பேச்சுக்களைக் கண்டு பா.ம.க. தொண்டர்கள் மிகவும் குழம்பித்தான் போனார்கள்.

இந்த நிலையில் டாக்டர் அன்புமணி பல்வேறு மாவட்டங்களில் சுற்றுப் பயணம் செய்து ஆங்காங்கே பா.ம.க. கொடி ஏற்றிவிட்டு வேட்பாளர்களை அடையாளம் காணத் துவங்கியிருக்கிறார். டாக்டரின் கோபத்துக்கு முக்கியக் காரணம், தமிழக என்.டி.ஏ. தலைவரான கலைஞர், கூட்டணியிலிருந்து வாழப்பாடி ராமமூர்த்தியை நீக்காமல் இருப்பதுதான் என்று சொல்லப்பட்டாலும் வேறு காரணங்களும் இருப்பதாகச் சொல்கிறார்கள்.

குறிப்பாக திருவள்ளூர், கடலூர், விழுப்புரம் மாவட்டங்களில் விடுதலைச் சிறுத்தைகள் - பா.ம.கவினர் மோதலில் காவல் துறை ஒருதலைப் பட்சமாகச் செயல்பட்டு, பா.ம.கவினர் மீது தேசிய

பாதுகாப்பு சட்டத்தின்கீழ் வழக்குப் பதிவு செய்து, தொண்டர்களைக் கைது செய்திருக்கிறதாம். கூட்டணிக் கட்சியாக இருந்தும் தங்களை ஆளும் கட்சி நசுக்க நினைக்கிறதே என்று டாக்டருக்குக் கோபம்.

"அது மட்டும் கோபத்துக்குக் காரணம் அல்ல; ஒரு தனியார் மருத்துவக் கல்லூரிக்கு டாக்டர் அனுமதி கேட்டார். ஆனால் கொள்கை அளவில் தனியார் மருத்துவக் கல்லூரிக்கு அனுமதி கொடுப்பதில்லை என்று முடிவு செய்திருப்பதால் உதவ முடியவில்லை" என்கிறார் ஒரு சீனியர் தி.மு.க. பிரமுகர்.

இந்த நிலையில் சட்டமன்றத் தேர்தலில் யாருடன் கூட்டு என்று குழம்புகிற நிலையில் இருக்கிறார்கள் தொண்டர்கள். "கூட்டணித் தலைவர் என்ற முறையில் கலைஞருடன் டீல் செய்வது சுலபம்; அந்தம்மாவை நம்பிச் சென்றால் பலவிதமான சங்கடங்களை அனுபவிக்க வேண்டி வரும். டாக்டருக்கு முடிவு எடுக்கும் உரிமை உண்டு. ஆனால் தேர்தல் அறிவிப்பு வரை சஸ்பென்ஸை நீடித்துக் கொண்டு போனால் அடிமட்டத் தொண்டர்கள், கூட்டணி கட்சிகளுடன் இணைந்து வேலை செய்வதில் சுமுகத் தன்மை இருக்காது. டாக்டரும், கலைஞரும் ஒருமுறை சந்தித்துப் பேசினால் பனிப் பாறைகள் உடைக்கப்படும் என்று நாங்கள் நினைத்தோம். அது இப்போது நடந்திருப்பது குறித்து சந்தோஷம்" என்று நம்மிடம் சொன்னார் பா.ம.கவின் தலைமை செயற்குழு உறுப்பினர் ஒருவர்.




முதல்வர்-டாக்டர் சந்திப்புக்குத் தூண்டுதலாக இருந்தவர் அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகமாம். "எவ்வளவுதான் பிரச்னைகள் இருந்தாலும், கலைஞர் நேரிடையாகக் கூப்பிட்டுப் பேசினால் டாக்டர் உருகி விடுவார்" என்கிறார்கள் பா.ம.க. தொண்டர்கள்.

டாக்டரும் கலைஞரும் சந்தித்தாலும் உறுத்தும் பிரச்னைகளுக்குத் தீர்வு வந்த பாடில்லை. புத்தாண்டு வாழ்த்துக்கள் மற்றும் உடல்நிலை விசாரிப்புக்குப் பிறகு பேச்சுக்கள் துவங்கின. 1996 தேர்தலில் த.மா.காவுக்குக் கொடுத்ததைவிட எங்களுக்கு ஒரு இடமாவது அதிகமாகக் கொடுக்க வேண்டும் என்பது பா.ம.கவின் முக்கியக் கோரிக்கை. அதற்கான வாக்குறுதியைக் கலைஞரிடம் பெற முடியவில்லை. ''இரண்டு தரப்பிலும் குழு அமைத்து பேச்சுவார்த்தைகள் நடத்தி தொகுதிகளில் உள்ள செல்வாக்கை அடையாளம் கண்டு பின்னால் முடிவு செய்யலாம்" என்று சொல்லிவிட்டாராம் கலைஞர். அதே போல் தமிழக ராஜீவ் காங்கிரஸை நீக்கும் விஷயத்திலும் எந்த உத்தரவாதமும் கலைஞர் தரவில்லை. ஆனால் அதே சமயம் முரசொலி மாறன், "வாழப்பாடியாருக்காக, பா.ம.கவை விட்டுவிட வேண்டியதில்லை. அவசியமானால் வாழப்பாடியைக் கழற்றிவிட வேண்டியதுதான்" என்று கலைஞரிடம் சொல்லியிருக்கிறாராம். வாழப்பாடியைப் பொறுத்தவரை தி.மு.க. தொண்டர்களுக்கு ஏற்கெனவே ஒரு கசப்புணர்வு உண்டு. காரணம் ராஜீவ் கொலையின் போது அபாண்டமாகப் பழி போட்டதுதான்.

"டாக்டரும் வாழப்பாடியும், எங்கள் சமுதாய நன்மையை அடிப்படையாகக் கொண்டு பிரியக் கூடாது. இருவரும் இணைந்து வேலை செய்ய வேண்டும். நீரடித்து நீர் விலகாது. டாக்டர் ஓ.கே. சொன்னால் வாழப்பாடியிடம் தூது செல்லத் தயாராக இருக்கிறோம்'' என்றும் சொல்கிறார்கள் சில சீனியர் பா.ம.க. பிரமுகர்கள்.

ஆனால் தன்னைப் பற்றிய அவதூறான குற்றச்சாட்டுக்களைச் சொல்லி வாழப்பாடியார் புத்தகம் போட்டதைத்தான் டாக்டரால் மறக்க முடியவில்லை. இடையில் மற்றொரு யுக்தியையும் பா.ம.க. கையாள நினைத்தது. தமிழகத்திலும், பாண்டியிலும் அ.தி.மு.கவுடன் கூட்டணி அமைத்துக் கொண்டு, தில்லியில் வாஜ்பாய்க்கு ஆதரவு தெரிவித்துவிட்டு அமைச்சரவையில் தொடர்ந்து செயல்படுவது என்ற திட்டம் தான் அது. "இதுபோன்றெல்லாம் யோசனை கூட செய்ய வேண்டாம். கூட்டணியிலிருந்து தாவினால் உங்கள் அமைச்சர்கள் ராஜினாமா செய்ய வேண்டியதுதான்" என்று பா.ஜ.க. மேலிடத்திலிருந்து கண்டிப்பான தகவல் வந்ததால் அந்தத் திட்டம் கிடப்பில் போடப்பட்டது.

என்.டி.ஏ. கூட்டணியில் பா.ம.க. தொடர்ந்து செயல்பட வேண்டுமானால் பாண்டிச்சேரி மாநிலத்தைப் பற்றிய பிரச்னைக்கும் தீர்வு கண்டாக வேண்டும். 'நாங்கள்தான் அங்கு செல்வாக்கு உள்ள கட்சி; எங்கள் தலைமையில்தான் ஆட்சி அமையும். முதல்வர் பெயரைக் கூட அறிவிக்க இருக்கிறேன்' என்று டாக்டர் சொல்லி வருகிறார். "பாண்டியைப் பொறுத்த மட்டில், எங்கள் கட்சி பெரும்பான்மை இடங்களைக் கேட்டுப் போட்டியிடும். இதில் சமரசத்துக்கே இடமில்லை" என்கிறார் ஒரு பா.ம.க. பிரமுகர். இந்த சவாலை தி.மு.க. எப்படிக் கையாளப் போகிறது என்று தெரியவில்லை. தமிழகத்திற்கும் பாண்டிக்கும் தனிதனித் நிலைகள் எடுக்க முடியாது.

''1989லேயே பா.ம.கவுக்கு மூன்று பாராளுமன்றத் தொகுதிகளும் முப்பது சட்டமன்றத் தொகுதிகளும் கொடுக்க நாங்கள் முன்வந்தோம். ஆனால் பேச்சு வார்த்தை முறிந்து போனது. அதன்பின் அரசியலில் எவ்வளவோ மாறுதல்கள் வளர்ச்சிகள், சரிவுகள். இருந்தாலும் பா.ம.கவுக்கு முப்பதுக்கு குறையாமல் தர தலைவர் தயாராக இருக்கிறார்' என்கிறார் ஒரு அறிவாலயப் பிரமுகர். தொகுதி பங்கீட்டுப் பேச்சுக் குழுவில் தி.மு.க. தரப்பில் உள்ள குழுவில் அமைச்சர் பொன்முடி இடம் பெறக் கூடாது என்பதும் பா.ம.கவின் கோரிக்கைகளில் ஒன்று!

— சஞ்சயன்




ப்ரீதி, அப்பாவின் கண்ணெதிரே அந்தக் கடிதத்தை ஒரு தடவை வீசிக் காட்டினாள். அவர், மூக்குக் கண்ணாடியைத் துடைத்து மாட்டிக் கொண்டு, கடிதத்தைக் கையில் வாங்கிப் பார்ப்பதற்குள், 'சட்'டெனப் பிடுங்கி, அவர் எட்டிப் பிடிக்காத விதமாய்க் கரத்தை உயர்த்தியபடி தண்ணீர்ப் பந்து போலக் குதித்தாள்.

"என்னதும்மா இது... பிரமோஷனா...?"

"அ... ஆ... தெரியாத மாதிரி கேட்டா நான், சினிமாவுல வர்ற 'அம்னீஷியா பேஷண்ட்'டுக்கு 'ஃபிளாஷ்பேக்'குலே கதையச் சொல்ற மாதிரி சொல்லிட்டிருப்பேனாக்கும். ஆனாலும் நீங்க கில்லாடிதாம்பா... 'காதலிப்பது எப்படி'யின்னோ, 'தி ஸீக்ரட் ஆஃப் ரொமான்ஸ்'னோ புத்தகமே எழுதலாம். அப்படி ஏதாவது ஐடியா இருந்தாச் சொல்லுங்கோ, அந்த நாளைய

ஜெமினி கணேசன்லே இருந்து இந்த நாளைய அஜீத் வரைக்கும் எல்லார்கிட்டேயிருந்தும் மதிப்புரை வாங்கித் தர்றேன்..."

கேதாரி, மூக்குக் கண்ணாடி நழுவுவது கூடத் தெரியாதவராய், மகளை, விழிகளை உயர்த்திப் பார்த்தார்.

மழைக் காலத் தும்பி போல உற்சாகமாய்ப் பறந்து கொண்டிருந்தாள்

முதல்லே இந்த நாலு முழம் வேஷ்டியையும், டி. ஷர்ட்டையும் மாத்திட்டு, ட்ரிம்மா டிரஸ் பண்ணிட்டு வாங்க..."

"எங்கே...?"

அவர், மேலும் திகைப்படைந்தவராய்க் கேட்க, ப்ரீதியோ விழிகளைச் சிமிட்டிச் சிரிக்கிறாள்.

"ஸ்நோஃபீல்டுக்குப் போறோம். இன்னிக்கு உங்களுக்குப் பிடிச்ச 'பெர்ஷியன் டிலைட்..."

மகள் சொல்லச் சொல்ல... பின்னங்கழுத்தில் எதுவோ ஏறி உட்கார்ந்து அழுத்துவது போல...

"என் கண்ணில்லே... சமர்த்து சர்க்கரைக் குட்டி, முதல்லே நீ அந்த லெட்டரைக் காட்டு. அப்புறம் டிரஸ்ஸை மாத்திட்டு, நீ எந்த ஃபீல்டுக்குக் கூப்பிட்டாலும் வர்றேன்..."

ப்ரீதி, அப்பாவின் பதற்றத்தை ஒரு முறை

# இனிமேல் ஆரம்பம்

அவள்.

தும்பி பறந்தால் - வருகிற மழையும் நின்று விடுமாமே...

யாரோ சொல்லக் கேள்வி...

இது நாள் வரையில் ரத்தக் கொதிப்போ - இதயக் கோளாறோ இல்லாத மனிதருக்கு - இப்பொழுது உலகத்திலுள்ள சகல விதமான வியாதிகளும் வந்து விட்டது போன்ற உணர்வு...

"அட... என்னம்மா. எதுலதான் விளையாடறதுன்னே இல்லையா... லெட்டரை இப்படிக் கொடு..."

"ஆசை தோசை அப்பள வடை...

கண் கொட்டாமல் பார்த்து விட்டு, அந்தக் கடிதத்தைத் தூக்கி, அவரது மடியில் போட்டாள்.

"ஆனாலும் அல்பம்பா நீங்க. பொண்ணுக்கு வந்த காதல் கடுதாசியப் பார்க்கறதுக்கு இப்படி ஆலாய்ப் பறக்க வேண்டாம்..."

கேதாரி, அந்தக் கடிதத்தை அவசரமாய் எடுத்து அதை விடவும் அவசரமாய் விழிகளை வரிகளின்மீது ஓட விடுகிறார்.

ஒன்றும் புதுசில்லை...

"நேத்து காட்டினியே அந்த லெட்டர் தானே..."

அவர் இப்படிக் கேட்டதும், இரு கைகளையும் இடுப்பில் வைத்தபடி ஒரு முறை முறைத்தாள் ப்ரீதி...

"என்ன இத்தனை அலட்சியமாகக் கேட்

அனுராதா ரமணன்

டுட்டீங்க. நேத்து நீங்க பார்த்தது ஒரு லெட்டரோட ஃபார்மேட். அது யாருக்கு, என்னங்கற ஒரு விவரமும் இல்லே. ரிசர்வ் பேங்க் கவர்னர் கையெழுத்தில்லாத ரூபா நோட்டு மாதிரி... செல்லாத காசா இருந்தது. இது அப்படியில்லே... கீழே பார்த்தீங்களா அஜய்... பேர் இருக்கு.. மேலே பார்த்தீங்களா... என்னோட ஈமெயில் அட்ரஸ் இருக்கு..."

"...."

"அது சரி. இன்னமும் ஏன் நரிகிட்ட வடையைப் பறிகொடுத்த காக்கா மாதிரி 'திருதிரு'ன்னு முழிக்கிறீங்க..."

"சேச்சே... அதெல்லாம் ஒண்ணுமில்லே. இது சந்தோஷ முழி. அவ்வளவுதான்..." என் முழியப் பத்தின ஆராய்ச்சி இருக்கட்டும். காலம்பற ஆபீசுக்குப் போனதுல இருந்து சொல்லு... என்ன நடந்தது..."

ப்ரீதி, உற்சாகமாய் விசிலடித்தாள். டைனிங்டேபிளை ஒட்டிய நாற்காலியை, தந்தையின் எதிரில் இழுத்துப் போட்டுக் கொண்டு, ஸ்கூட்டியில் உட்கார்வதுபோல நாற்காலியின் முதுகுப்புறத்தில் நெஞ்சைப் பதித்து, பக்கத்துக்கு ஒன்றாக இரு கால்களை யும் போட்டுக் கொண்டு சுவாரஸ்யமாய் சொல்லத் தொடங்கினாள்.

"இங்கேயிருந்து போனேனா... நீங்க சொன்ன மாதிரியே மெயில் பாக்ஸைத் திறந்து பார்த்தேன். 'ச்சூ மந்திரக்காளி' மாதிரி - இந்த லெட்டர் அதுல இருந்தது..."

"ம்.. அப்புறம்?"

"அப்புறமென்ன. மிஸ்டர் அஜய் வர்றதுக் குள்ளே - என்னோட காபினுக்கும் ஆபீஸ் ரிசப்ஷன் ஹாலுக்குமா குறைஞ்சது அம்பது தடவையாவது நடந்திருப்பேன். அப்பா..."




"சொல்லுடா..."

"இன்னிக்கு ராத்திரி என் ரெண்டு காலுக் கும் நீங்க யூகலிப்ட்ஸ் ஆயில் தடவி, பிடிச்சுவிடணும்..."

"...."

"என்ன நீங்க. அடிக்கடி சைலண்ட்டா யிடறீங்க..."

"கேட்டுண்டுதானே இருக்கேன். சொல்லுடா."

"ச்சீ... போடா."

அவள், செல்லமாய்க் கோபித்து முகத்தை முறுக்கிக் கொண்டு, சிறிது நேரம் உட்கார்ந் தாள். கேதாரிதான் அவளது முறுக்கலை, வலிய வரவழைத்துக் கொண்ட குதூகலத் துடன் கேள்விகேட்டு சரி செய்ய வேண்டியிருந்தது.

"அப்புறம் சொல்லு. மிஸ்டர் அஜய் வந்தார். நீ என்ன பண்ணினே?"

"அவரை மாதிரி புத்திசாலித்தனம் கட்டுப் போட்டாக்கூட யாருக்கும் வரா துப்பா.. ஏற்கெனவே அவருக்குன்னு இருக்கற 'பாஸ் வேர்டை' யூஸ் பண்ணாம, ஏன், அவரோட கம்ப்யூட்டரைகூட யூஸ் பண் ணாம வேற எங்கேயோ இருந்து மெயிலை அனுப்பியிருக்காரு... பாருங்க... அஜய் அட் யாகூ! நான்தான் மக்கு... மட சாம்பிராணி ஆபீஸ்ல, என்னோட ஈ-மெயிலிலிருந்தே பதில் அனுப்பியிருக்கேன்.

இப்படிச் சொல்லி முகமெல்லாம் சிரிப் பாய் அவள் நிற்க, கேதாரி கையிலிருந்த கடிதத்தையே பார்த்தபடி உட்கார்ந்திருக் கிறார்... ப்ரீதி அவரை வெடுக்கென கிள்ளினாள். அவர் மகளை நிமிர்ந்து பார்க்க, அவள் இரண்டு கைகளையும் கொட்டி சிரித்தாள்.

"என்னப்பா, இது கனவா, நனவாங்கற சந்தேகத்துல இருக்கீங்க இல்லையா... அதான், உங்களுக்குச் சிரமமில்லாம நானே உங்களைக் கிள்ளினேன். கிளம்புங்க.. கிளம்புங்க..."

ப்ரீதி உற்சாகத்தின் விளிம்பில் இருந்த தால், அப்பாவின் வழக்கமான கலகலப்பில் ஒரு மாத்திரை குறைந்திருப்பதை அறிந்து கொள்ளும் நிலையிலில்லை.

ஐஸ்க்ரீம் பார்லரில் அவர் எப்பொழுதும் விரும்பிச் சாப்பிடும் பெர்ஷியன் டிலைட்டைக் கூட எந்தவிதமான உணர்ச்சியையும் வெளிக் காட்டாமல் சாப்பிடுகிறார். சாதாரண நாளா யிருந்தால் அந்த ஒரு ஐஸ்க்ரீமுக்கு எத்தனை வக்கணை சொல்லியிருப்பார் இவர்?

"அப்பா, ஐஸ்க்ரீம்ல ஏதோ பேருக்கு நாலைஞ்சு நட்ஸைப் போட்டுக் கொடுத்துடா தீங்க... பாதாம், முந்திரி எல்லாமே கொஞ்சம் தாராளமா போடுங்க. அதுக்கு வேணுமானா பில்லுலே அஞ்சோ, பத்தோ சேர்த்துப் போடுங்கோ; எனக்கு நோ கொலஸ்ட்ரால், நோ சுகர். நோ பிளட் பிரஷர்..."

- இப்படிக் கூறி, குழந்தை மாதிரி குதிக்கும் அப்பாவை, ப்ரீதிதானே ரகசியமாக அதட்டி, அடக்கி வைப்பாள்.

"ஷ்... அப்பா, எல்லாரும் பாக்கறாங்க... இந்த வயசுக்கு நீங்க இப்படி ஐஸ்க்ரீமுக்கு அலைய வேண்டாம்."

"அடபோம்மா... பின்னே, இங்கே வர்றவங்க எல்லாம் ஐஸ்க்ரீம் சாப்பிட வராம கச்சேரி கேக்கவா வர்றாங்க... அதுக்கு, எதிர்த்தாப்புல இருக்கற மியூசிக் அகாடமிக்கு இல்ல போகணும்..."

- இப்படி கூறியபடி ஐஸ்க்ரீமை வழித்து விழுங்குபவர் இன்றைக்குச் சாப்பிட்டதாய்ப் பெயர் பண்ணினார்.

"என்னப்பா, உடம்பு ஏதேனும் சரியில்லையா... 'டல்' அடிக்கறீங்க..."

கேதாரி, மையமாகத் தலையாட்டினார்.

"இலேசா வயிறு அப்செட். சரி. இப்போ அஜய் எங்கேம்மா?"

"அதையேன் கேக்கறீங்க... திடீர்னு பெங்களூர் போயிருக்காரு... ரெண்டு நாள்ல வந்துடராறாம்... - இன்விடேஷன் கார்டு செலக்ட் பண்ணறதுலயிருந்து எல்லாமே நீதான்னு சொல்லிட்டாரு..."

கேதாரிக்குக் குழப்பமாக இருந்தது. மகளுக்குத் தெரியாமல் இரண்டு மூன்று முறை ப்ரீதி கொடுத்த 'பிரிண்ட் அவுட்டை'ப் பார்க்கிறார் அவர். கவலைப்படவே தெரியாத மனிதரின் கழுத்து வரையில் இப்பொழுது கவலைதான்... கலக்கம்தான்.

ஏனெனில் இது அஜய் கொடுத்ததில்லை என்பது அவருக்குத் தெரியும்.

ஆமாம்... இது நிச்சயமாய் அஜய் கொடுத்ததில்லை... அப்படியானால் யார் கொடுத்தது?

இதோ பெர்ஷியன் டிலைட் ஜில்ஜில்லு வென வயிற்றுக்குள் உட்கார்ந்திருந்தாலும், நெருப்பில் நிற்பது போல் தவிக்கிறாரே... இந்த கேதாரியேதான் தன் கையால் மகளின் விலாசத்திற்கு இக்கடிதத்தை அனுப்பினார்.

அன்று காலையில், 'கண்டிப்பாய் அஜய்யின் காதல் கடிதம் உனக்குத்தான். போய் உன் மெயில் பாக்ஸைத் திறந்து பார்' என்று சொல்லி மகளை விரட்டியவர்,




அவள் கிளம்பிச் சென்றபின், சிறிது நேரம் திகைத்து நின்றார்.

'ஐய்யோ... குழந்தை மனசுல இத்தனை ஆசை வெச்சிருக்கே... அந்தப் பிள்ளையாண்டான் அந்த லவ்லெட்டரை இன்னிக்கு மெயில் பண்ணியிருக்கணும். அதுவும் இவளுடைய அட்ரஸுக்குப் பண்ணியிருக்கணும். ஒரு வேளை அவன் இதை நாளைக்கு அனுப்பலாம்னு இருந்தா..'

'சேச்சே... அந்த ஒரு நாள் கூட கொழந்தை ஏமாறக் கூடாது...'

'ஒரு நாளுக்கே இப்படி பயப்படறியே...? அந்த லெட்டர் அவளுக்கில்லாம வேற யாருக்காவது இருந்தா...?'

அதை நினைத்துப் பார்க்கவே பயந்தார் கேதாரி... ஆனால் இப்பொழுது அவர் பயந்தபடியே நடந்துவிட்டது.

மகள் கொண்டுவந்த கடிதம் அவரால் தங்கள் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த 'பிரவுசிங்' சென்ட்டரிலிருந்து அவளுடைய ஈமெயில் அட்ரசுக்கு அவர் கையால் அனுப்பப் பட்டது.

'அப்படியானால் அஜய்யின் ஒரிஜினல் கடிதம் எங்கே. வேறு யாருக்காவது போய்ச் சேர்ந்திருக்கிறதா, இல்லை, மெதுவாக அனுப்பிக் கொள்ளலாம் என்றிருக்கிறானா...?"

அந்த கண்ணம்மா யார்? ப்ரீதிதானா? இல்லை வேறு யாரோ ஒருத்தியா... குழம்பினார் கேதாரி.

(தொடரும்)

# ரிமோட்



# சவிதாவுக்கும் பாதிப் பணம்

**Zero Hour :**

'வாலி' படத்தில் சிம்ரன் நடிப்பு ரொம்ப நன்றாயிருந்தது என்று ஒரு பத்திரிகையில் பாராட்டி அவருக்குக் குரல் கொடுத்த சவிதாவுக்குத்தான் பாதிப் பணம் கொடுக்க வேண்டும் என்று எழுதியிருந்தார்கள்?

- நையாண்டி தர்பாரில் யூகி சேது.

'ஆனா கொடுக்கலியே!'

- டப்பிங் கலைஞர் சவிதா

புண்ணியம் சம்பாதிக்கப் பலவழிகள் உண்டு. அதில் ஒன்றைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள் சன் டி.வி.க்காரர்கள். திருவண்ணாமலை தீபமா, சபரிமலை மகர ஜோதியா, திருச்செந்தூர் சூரசம்ஹாரமா எல்லாவற்றுக்கும் காமெராவைத் தூக்கிக் கொண்டு முதலில் போய் நின்று நேரடி ஒளிபரப்பு வழங்குவதே அந்த வழி. Be good and you will be lonesome என்று மார்க் ட்வெயின் பரிகாசம் பண்ணினார். ஆனால் இந்த நல்ல காரியங்களுக்கு ஆதரவு கூடிக் கொண்டுதான் இருக்கிறது.

லேட்டஸ்ட் நல்ல காரியம் : ஸ்ரீரங்கம் வைகுண்ட ஏகாதசி. (விடிகாலை நாலு மணிக்காக வெடவெடக்கும் குளிரில் மூன்று மணிக்கே எழுந்து ஆயத்தம் தொடங்கியிருப்பார்கள்.) பொதுவாக திருவிழா வர்ணனையாளர்கள் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பார்கள். 'எங்கு பார்த்தாலும் பக்தர்கள் கூட்டம்! ஜன வெள்ளம் அலைமோதுகிறது!' என்று போரடிப்பார்கள். சொர்க்கவாசல்காரர் வித்தியாசமானவர். வகைவகையாய்ப் பாசுரங்களைச் சொல்லி விதவிதமாய் அர்த்தங்கள் விளக்கிக் கொண்டிருந்தார். நன்றி. கேமராக்காரர்தான் பாவம். மூடிய கதவையும் வந்து கொண்டிருக்கும் ஜனங்களையும் மாற்றி மாற்றிக் காட்டிக் கொண்டிருந்தார். கொஞ்சம் வாசல் பக்கம் போய், ராஜகோபுர அழகுகளையும் காவேரி வனப்பையும் காட்டியிருக்கலாம். 'இச்சுவை தவிர யான் வெளியே போய் எச்சுவை பெறினும் வேண்டேன்' என்று இருந்துவிட்டார் போலும்.



**இ**து எந்தப் படத்தில் வருது? சொல்லுங்க... உங்க குழந்தைக்கு என்ன வயசு? பத்து மாசமா? பெயர் என்னங்க? ஆதர்சனியா?



நல்ல புதுமையா இருக்குதுங்க... மகளிர் தினம் எந்தத் தேதி? என்னங்க, இதுகூடத் தெரியலேங்கறீங்க... இது யாரோட குரல்? கெஸ் பண்ணுங்க... கரெக்ட்... உங்களுக்கு மூணு சான்ஸ் கொடுத்தாச்சுங்க... டயம் ஆகுது... சீக்கிரம்...

இப்படியே நேயர்களுடன் பேசி, பேசும் நேரம் பூரா புருவம் உயர்த்தி, உதடு பிதுக்கி, கண் சுழற்றி, சிரிப்புக் கொட்டி, கைகள் கட்டி, வார்த்தைகள் வீசி, மின்னலெனப் பாவங்கள் மாற்றி 'ஜெயா'வில் 'காசு மேலே...' டெலிபோன் போட்டிகள் நடத்துகிறார் ஷர்மிலி. ('வீ'யா, 'வி'யா?)

ஒவ்வோர் அசைவிலும் அதிசயிக்க வைக்கும் சுறுசுறுப்பு, கொப்பளிக்கும் இளமை. பாடல் காட்சி? அந்த அரை மணியில் இரண்டுகூட இருக்காது. Disappointed? Certainly not. யாருக்கு வேண்டும் பாட்டும் படமும்? கனியிருப்பக் காய் கவர்ந்தற்று.

**ச**மீப வாரங்களில் அதிகம் பேரைக் கவர்ந்திருக்கும் தொடர்களில் ஒன்று 'கிருஷ்ணதாசி'. பழைய பஞ்சாங்கமான தாசிக் கதைதான். என்றாலும், தொப்பைக்கு மேல் தூக்கிக் கட்டிய வேட்டியுடன் தாத்தா ஜெமினி கணேசன் டானிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார். கிருஷ்ணன் கோவில் தாசியாக உருட்டும் விழிகளுடன் நளினி (அம்மாடி! என்னமாய் வெயிட் போட்டிருக்கிறார்!) வருவதைப் பார்த்தவுடன், 'வர்றா! பிரம்ம ராட்சசி வர்றா! பிரம்ம ராட்சசி வந்துட்டா!' என்று ஜெமினியார் ரகசியமாகப் பல்லை நறநறக்கும் அழகே அழகு.

எல்லாம் சரிதான் - சென்ற வாரம் வந்த அநாகரிகத்தைத் தவிர.

'அவனோடு ஏன் பேசுகிறாய், இவனோடு என்ன சிநேகம்' என்று பேத்தியின் கணவனை ஜெமினி கேட்க, அவர் 'அந்த நாளில் நீங்கள் ஆடாத ஆட்டமா! அடிக்காத கூத்தா? புஷ்பவல்லி என்ன, சாவித்திரி என்ன என்று எவ்வளவு பாட்டிகள்!' என்கிறார். ஹிஹி என்று ஜெமினி நழுவுகிறார்.

கற்பனைத் தொடரின் நடுவே அசல் வாழ்க்கையைக் கலப்பது என்ன நியாயம்? They jest at scars who never felt a wound என்பது மூதுரை.

**டீ**.வி.யில் வரும் சமையல் குறிப்பை அவசர அவசரமாய் எழுதி வைத்துக் கொள்ளும் பெண்கள் நூறு பேர் என்றால், அதைச் செய்து பார்ப்பவர்கள் தொண்ணூற்றொன்பதே முக்கால்தான் இருப்பார்கள். மீதிக் கால் பேரும் பாதி செய்து கொண்டிருக்கும்போது பக்கத்து வீட்டு அம்மாள் கூப்பிட்டால் வாணலியைக் காயப் போட்டுவிட்டுப் பேசப் போய்விடுவார்கள். Gossip is tastier.

ஆகவே, புளியோதரை செய்யப் புது வழியொன்றை மல்லிகா பத்ரிநாத் ஜெயா டீ.வி.யில் சொன்னபோது அதற்கும் மேற்கண்ட கதிதான் என்று நினைக்கத் தோன்றியது. 'முன்னெல்லாம் புளிக் காய்ச்சல் செய்வதற்கு நாள் பூரா அடுப்பங்கரையில் அல்லாடணும். நான் சொல்லப்போவது அவசரப் புளியோதரை. பத்தே நிமிடத்தில் செய்யலாம் என்று அவர் முன்னுரையில் tempt பண்ணியபோதுகூட யாரும் மசிய மாட்டார்கள் என்று எண்ணினால்

செய்து பார்த்த ஓர் அம்மையார், 'உண்மை! பத்தே நிமிடம்! பிரமாதம்!' என்று நாக்கைச் சப்புக் கொட்டுகிறார். என்ன கேட்கிறீர்கள்? அவசரப் புளியோதரை செய்வது எப்படி என்றா? மல்லிகா பத்ரி நாத்தையே கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

**வினோத்**

# ஏசி பஸ்சுல ஓசி சவாரி!



* களிமண்ணு சிலை?

கூவிக்கிறதையே மறந்துபூட்ட நம்ம சிட்டி பஸ்சுங்கோ மத்தியிலே உஜாலாவுக்கு மாறின பஸ்சு கணக்கா ஒண்ணு வந்துகீது கண்டுகினியா செல்வம்ன்னு, சக்கரம் கேட்டுகினே வண்டியில குந்திகிச்சு. அட ஆமாப்பா! தகிரியமா நாப்பது லட்சம் ரூபா குடுத்து ஏசி பஸ்சு வாங்கி வுட்டு கிறாங்களே அதத்தான சொல்லிகினேன்னு வண்டிய ஸ்டார்ட்டு பண்ணிகினேன். இன்னாப்பாயிது குபேரார்பதி ஆளு கணக்கா பட்டுனு பதிலு சொல்லிபூட்டியே! அந்த பஸ்ஸைப் பாத்துட்டு வந்துருவோம் வண்டிய வுடுன்னு சொன்னதும் பாரி முனைக்குச் சவாரிய வுட்டேன்.

ஐகோர்ட்டு வாசல்ல போய் காத்து கெடந்தோம். கொஞ்ச நேரத்துல அந்த வண்டி வந்துச்சு... மெய்யாலுமே ஆச்சரியத்துல ஆன்னு வாயப் பொளந்துட்டேன். பாரினு கணக்காக் கீது வண்டி... இன்னாடா வண்டியில சத்தமே வர்லியேன்னு பாத்தா, எஞ்ஜினு வண்டிக்குப் பின்னாலே இருக்குது. பாரி முனையிலேர்ந்து தாம்பரத்துக்கு மூணு தபா டிரிப்பு. மைலாப்பூரு, அடையாறு, கிண்டி இந்த மூணு எடத்துல தான் வண்டி நிக்குமாம். டிக்கெட்டு வெலை பத்து, பதினைஞ்சு, இருவது, இருவத்தஞ்சி. இன்னாப்பாயிது இருவத்தஞ்சு ரூவா கொடுத்து ஏசி பஸ்சுல போற அளவுக்குச் சிட்டி மக்களுக்குத் துட்டு வந்துகிதான்னு எனக்குச் சந்தேகம். பாத்தா கொஞ்ச நேரத்துல பஸ்சுல இருந்த நாப்பது சீட்டும் ஃபுல்லு! சக்கரத்தோட ஒண்டிகினே பஸ்ல ஏறுனேன். டிரைவரு, கண்டக்டரு, போக இன்னொரு ஆளுக்கும் பஸ்சுல வேலை கொடுத்துக்கிறாங்க. அவுரு டிரைவிங்கு இன்ஸ்டக்டராம். மக்களை ஏத்துறது, எறக்கிவுடுறது, டிரைவருக்கு ஒத்தாசையா யிருக்குறதுக்குன்னு அவரும் ரொம்ப பிசியாத்தான் இருக்காரு. பஸ்சுல கதவு ஆட்டோமேட்டிக்கா தொறந்து மூடுது. இறங்கப்போற எடம் வந்தா கண்டக்டரு விசிலு அடிக்க மாட்டாரு. அங்க அங்க செவப்பு கலரு பட்டன் இருக்கு. அத பாசஞ்சரு அமுக்குனா ஸ்டாப்பிங் பாயின்டுன்னு டிரைவரு முன்னாடி பல்பு எரியுது. உடனே வண்டிய நிறுத்துறாரு. நம்ம சக்கரம் பேட்டி எடுக்குறேன்னு சொல்லிப்புட்டு ஒரு பொம்பள பாசஞ்சருகிட்டே போயி இருவத்தஞ்சு ரூவா குடுத்து போறீங்களே கட்டுபடியாவுமான்னு கேட்டிச்சு. ஆட்டோவோட கம்பேரு பண்றப்போ இது சூப்பருன்னு சொல்லிச்சு அந்தம்மா! ஐகோர்ட்ல ஜோலி பாக்ற அந்த அம்மா ஏசி பஸ்சுக்கு ரெகுலர் கஷ்டமரு ஆயிப்பூட்டுதாம். அப்பாலே ரவி குமாருன்னு ஒரு வக்கீலு தாம்பரத்துக்குப் போயிகினு இருக்கேன்னாரு. அவுரு நம்ம மிடில்கிளாசுக்குக் கட்டுப்படியாகதுன்னாரு. நாலு மணிக்குக் கடைசி தபா வண்டி கிளம்புச்சு. சக்கரம் தயவுல மைலாப்பூரு வரைக்கும்



ஏசி பஸ்கல ஓசி சவாரி பண்ணிபுட்டு, திரும்பவும் ஒரு கண்றாவி பஸ் புடிச்சி வந்து, நம்ம ரதத்தை இட்டுகினு வந்துட்டோம். சக்கரம் மொவத்துல கொஞ்சூண்டு சோகம். இன்னாப்பா சேதின்னேன். படியில தொங்கிகினு போக முடியாத பஸ்சு ஒரு பஸ்சான்னு சொன்னதும் எனக்குப் பத்திகிட்டு வந்துது.



# ந•க•ர்•வ•ல•ம்

அப்பாலே இதுவும் ஒரு போக்குவரத்து அயிட்டம்தான். திருவள்ளுவரு மாவட்ட போக்குவரத்துக் காவல் துறையச் சேர்ந்தவுங்க சாலை பாதுகாப்பு வாரம் கொண்டாடுறாங்க. வா இன்னா சேதின்னு கண்டுகினு வருவோம்ன்னு சக்கரம் இட்டுகினு போச்சு. அங்கேபோனா நம்ம கவிஞரு வைரமுத்து செறப்பு விருந்தினரு. இன்னாப்பா இவுரு இப்போ எல்லா விழாவுலேயும் கலந்துகிறாருன்னு, சக்கரம் சொன்னதும் வைரமுத்து பேசினாரு. "விபத்துல ஒரு ஆளு செத்துப் பூட்டா அவரு தலைவிதி சரியில்லேன்னு சொல்றோம். அது தப்பு. அவருக்குச் சாலை விதி தெரியலே, அதான் இப்படி சாலை விபத்துகளைத் தடுக்குறதுக்குன்னே இவங்க நம்ம சூப்பரு ஸ்டாரு ரஜினிய வெச்சி இந்த வீடியோ கேசட்டு தயாரிச்சிருக்காங்க. நடிகன் சொன்னா எப்படி குழந்தைக்குப் போலியோ சொட்டு மருந்து போடுறோமோ அதுமாதிரிதான் இதுவும்"ன்னாரு. அப்புறம் பெரிய திரையில படத்தைப் போட்டாங்க. பாட்சா படத்துல வர்ற ஆட்டோ ரஜினி வந்து பாட ஆரம்பிச்சாரு. "சிக்னல் பாரு சிக்னல் பாரு. பச்சை விளக்கு எரிஞ்ச பொறவு அப்புறமா போகப் பாரு. ஆபத்தை நீ தடுக்கப்பாருன்னு" ஆட்டோகாரன் பாட்டை பாடுனதும் சூப்பராத்தான் இருந்துச்சி. ரஜினிக்கு அப்புறம் நம்ம எம்ஜிஆரு வந்தாரு. "மறக்காதே பாப்பா மறக்காதே சால விதிய மறந்துபுடாதே. சிக்னல் இருக்கு சென்றுபுடா"தேன்னு பாடுனாரு! ரொம்ப நல்ல முயற்சின்னு சக்கரம் சொன்னிச்சு. இந்தப் படத்தை நெறைய பிரிண்டு போட்டு தமிழ்நாடு முழுக்க காட்டப் போறோம்ன்னு திருவள்ளுவரு போக்குவரத்து போலீசுகாரங்க சொன்னதும். வெறைப்பா ஒரு வணக்கம் வெச்சுபுட்டு லலித்து கலா அக்காடமிக்கு வண்டிய வுட்டோம்.

செருமன் ஆளுங்க தயாரிச்ச கைவெணைப் பொருளுங்களை கண்காட்சி வெச்சிருந்தாங்க. துணி ஓவியம், சில்வரு, ஸ்டீலு பாத்திரங்க. கண்ணாடி மோல்டுல அழுவுற, சிரிக்கிற மொகம், சைனா களிமண்ணுல சில்லு ஓடு வெச்சி செஞ்ச சிலை, அப்பால நகை, நட்டுன்னு இன்னா ஸ்டைலா செஞ்சுகிறாங்க. செருமன் கைவெணைப் பொருளே இம்மாங் கலர் புல்லா இருந்தா, கலைத் தன்மையோட செய்யற பொருளுங்க எப்புடி இருக்கும்னு சக்கரம் வாயப் பொளந்து பார்த்துகினு இருந்துது. நமக்கு அந்த ஷோவுல புடிச்ச விவகாரம் ஸ்டீலு கத்திங்க. வெதம் வெதமான பளன்னு எம்புட்டு இருந்துது. கபால்ன்னு எடுத்து கையை வெட்டி கலாம்னு தோணுது. அப்புடி ஏடா கூடாமா எதுவும் நடந்துடக் கூடாதுன்னு சக்கரம் என்னை இட்டுகினு வந்துட்டது.




**மீண்டும் சந்திக்கும் வரை மீட்டருக்கு மேல் கேட்காத செல்வம்.**

**படங்கள் : ராஜன்**

ஜெனிபரின் விழிகள் வங்கக் கடலாக விரிந்து அதில் அதிர்ச்சி அலைகள் அடித்தன. ப்ரீப்கேஸில் ஒருக்களித்துப் படுத்திருந்த பிஸ்டலைக் கையில் எடுத்தாள்.

''இதுதான் அப்பாய்ன்ட்மெண்ட் ஆர்டரா?''

"ஆமா..."

''வருண்...! நீ என்ன சொல்றே... இன்டர்வ்யூக்குப் போயிட்டு வந்ததிலிருந்து நீ தெளிவாவே இல்லை. உன்னோட பேச்சில் குழப்பம் தெரியுது. இன்டர்வ்யூ என்னாச்சு காயா பழமான்னு கேட்டா 'பூ'ன்னு பதில் சொல்றே... அப்பாயின்ட்மென்ட் ஆர்டரைக் கேட்டா பிஸ்டலைக் காட்றே... உனக்கு என்னடா ஆச்சு வருண் கண்ணா...?'' பொய்க் கோபம் கலந்த புன்னகையோடு தன் இடதுகையின் இரண்டு விரல்களால் வருணின் முன்னுச்சி கிராப்பைப் பிடித்து இலேசாய் உலுக்கினாள்.

வருண் பதிலுக்கு ஜெனிபரின் கீழ் உதட்டைச் கண்டினான். ''மிஸ் அவசரக் குடுக்கை... பிஸ்டலைத் தலைகீழாத் திருப்பி அதோட வாயைப் பாரு...''

பார்த்தாள்.

பிஸ்டலின் இருட்டான வாய்க்குள் ஒரு வெள்ளைத்தாள் சுருட்டி வைக்கப்பட்டிருந்தது.

"என்ன இது...?"

''அதுதான் அப்பாய்ன்ட்மென்ட் ஆர்டர். எடுத்துப் படி...''

நெற்றியில் ஜனித்த குழப்ப வரிகளோடு பிஸ்டலின் வாய்க்குள் விரலை விட்டு அந்த வெள்ளைத்தாளை உருவினாள். பிரித்தாள். எலக்ட்ரானிக் டைப்ரைட்டிங் மெஷின் அந்த வெள்ளைத்தாளை ஆங்கிலத்தில் உழுதிருந்தது.

ஜெனிபர் படித்துவிட்டு சற்றே பதற்றமாய் வருணை ஏறிட்டாள்.

"வருண்...! என்ன இது...?"

"என்ன...?"

''நீ லாயல் க்ரூப்ஸ் கம்பெனியில் அக்கவுன்ட் செக்ஷன் கிளரிக்கல் பிரிவுக்குத்தானே அப்ளை பண்ணினே...?''

"ஆமா..."

"இண்டர்வ்யூ கார்டும் அந்த போஸ்ட்டுக்காகத்தானே வந்தது?''

"ஆமா..."

''பட்... இந்த அப்பாயின்ட்மென்ட் ஆர்டர்ல உனக்கு செக்யூரிட்டி வாட்ச்சர் போஸ்ட்

2

-ஜெ டிஸ்னி

# ஆடுபனி

கொடுத்து இருக் காங்களே...?"

வருண் சிரித் துக்கொண்டே தன் இடது கையின் ஆட்காட்டி விரலை நெற்றியில் வைத்து ஒரு கோடு போட் டுக் கொண்டே சொன்னான்.

"தட் ஈஸ் மை ஃபேட்... ஜெனி! விதி இந்த இடத் துல வாய்விட்டுச் சிரிக்கப் போக எனக்கு இந்த செக் யூரிட்டி வாட்ச்சர் போஸ்ட்..."

"எப்படி...?"

"என்னோட எக்ஸ்ட்ரா கர்ரிகுலர் ஆக்டிவிடீஸ் சம்பந் தப்பட்ட சர்ட்டிபி கேட்ஸ்களை புரட்டிப் பார்த்துக்கிட்டே வந்த கம்பெனியோட எம்.டி. நான், ஆல் இண்டியா லெவலில் துப்பாக்கிச் சுடும் போட்டியில் இரண்டாவது இடம் பெற்றிருந்த சர்ட்டி பிகேட்டைப் பார்த்ததும் திகைச்சுப் போயிட்டார். இப்படி ஒரு அபாரத் திறமையை வைச்சுக்கிட்டு நீ அக்கவுண்ட் செக்ஷனுக்குப் போய் பாலன்ஸ் ஷீட் ப்ரிப்பேர் பண்றதுல எனக்கு உடன்பாடு கிடையாது. எங்க கம்பெனியின் ஊட்டி கிளைக்கு ஒரு செக்யூரிட்டி வாட்ச் சர் உடனடியாய்த் தேவை. உன்னை மாதிரி யான ஒரு திறமைசாலியைத்தான் நாங்க தேடிக்கிட்டு இருந்தோம். நீ எஸ்ன்னு சொன்னா உடனே அப்பாய்ன்ட்மென்ட் ஆர்டர் ரெடியாயிடும்... என்ன சொல் றேன்னு கேட்டார். நான் தயங்கினேன். உடனே அவர் அதை வாட்ச்மேன் போஸ்ட் மாதிரி நினைச்சுடாதே... ஒரு செக்யூர்ட்டி ஆபீஸருக்கு உண்டான எல்லா சலுகைகளும் கிடைக்கும். சாலரி ஃபர்ஸ்ட் டு இயர்ஸுக்கு ஃபோர் டிஜிட். தென் ஃபைவ் டிஜிட். ஊட்டியில் தனியா க்வார்ட்டர்ஸ்..."

ஜெனிபர் முதல் தடவையாய் முகம் மலர்ந்தாள். "பரவாயில்லையே..."

"எனக்கும் 'அதே பரவாயில் லையே'ன்னு மனசுக்குப் பட்ட தால 'எஸ்'ன்னு சொல்லிட்டேன். எம்.டி இன்டர் காம்ல தகவல்

ராஜேஷ்குமார்

கொடுத்த பத்தாவது நிமிஷம் இந்த லைசென்ஸ்ட் பிஸ்டலும் அப்பாயின்ட்மென்ட் ஆர்டரும் டேபிளுக்கு வந்தாச்சு."

"அப்பஃன்னா உங்களுக்கு வேலை ஊட்டி பிராஞ்ச் ஆபீஸில்...?"

"ஆமா..."

"இதே ஊர்ல வேலை பார்க்க முடியாதா?"

"கேட்டேன்... ரெண்டு வருஷத்துக்கு அப்புறம்தான் இங்கே மாற்றல் கிடைக்குமாம்... யூ டோண்ட் வொர்ரி ஜெனி! வாரத்துக்கு ஒரு தடவை உன்னைப் பார்க்க பறந்து வந்துட மாட்டேனா!"

"நீ இப்படித்தான் சொல்லுவேன்னு எனக்குத் தெரியும். இதோ பார் வருண்... வாரா வாரம் வந்து பார்த்தாத்தான் நம்ம காதல் வளரும்ங்கிற ஸ்டேஜ் இப்போ கிடையாது. ரொம்ப நாளைக்கப்புறம் உனக்கு ஒரு நல்ல வேலை கிடைச்சிருக்கு. லாயல் க்ரூப்ஸ் கம்பெனி ஒரு ரெப்யூட்டட் கம்பெனி. சின்ஸியரா வேலை பார்த்தா ப்ரமோஷன் கிடைச்சு மேலே மேலே போய்க்கிட்டேயிருக்கலாம்..."

"சரி பதினஞ்சு நாளைக்கு ஒரு தடவை வரட்டுமா?"

"வேண்டாம். மாசத்துக்கு ஒரு தடவை வந்தாப் போதும்" ஜெனிபர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே பேரர் வந்து பக்கத்தில் நின்றார்.

"ஸார்... நீங்க மிஸ்டர் வருண்?"

"எஸ்..."

"உங்களுக்கு ஃபோன்..."

வருண் திகைப்பாய் எழுந்தான்.

"எனக்கா...?"

"ஆமா ஸார்... நீங்க போட்டிருக்கிற ட்ரஸ்ஸை மென்ஷன் பண்ணி கூப்பிடச் சொன்னாங்க..."

"ஜெனி! ஒரு நிமிஷம். ஃபோன்ல யார்ன்னு பார்த்துட்டு வந்துடறேன்."

ரெஸ்டாரெண்டின் மூலையில் இருந்த கேஷ் கௌண்டர்க்குப் போக, ரிஸீவர் மல்லாந்து தெரிந்தது. எடுத்து காதுக்குக் கொடுத்தான்.

"ஹலோ..."

மறுமுனையில் ஒரு பெண் குரல் ஒலித்தது.

"கங்க்ராட்ஸ் வருண்..."

"யார் நீங்க...?"

"மொதல்ல கங்க்ராட்ஸைப் பிடிங்க."

"எதுக்குக் கங்க்ராட்ஸ்...?"

"உங்களுக்கு வேலை கிடைச்சிடுச்சே... அதுவும் லாயல் க்ரூப்ஸ் கம்பெனியில்..."

வருண் இலேசாய் எரிச்சலுக்கு உட்பட்டான். "இதோ பார்... நீ யார்ன்னு தெரியாம உன்னோட கங்க்ராட்ஸை நான் வாங்கிக்க முடியாது..."

அவள் சிரித்தாள்.

"உன்னோட ஃப்ளாஷ்பேக்கைக் கிளற வேண்டாமேன்னு பார்த்தேன்..."

"என்னது! ஃப்ளாஷ்பேக்கா...?"

"ம்... ஒரே ஒரு வரியில் சொல்லட்டுமா... ஒரு பாரா அளவுக்குச் சொல்லட்டுமா?"

"ஏய்... நீ..." கோபமாய்ப் பேச முற்பட்ட வருணை, குரலைக் குறுக்கிட்டு அமர்த்தினாள் அவள்.

"டென்ஷனாகாதே வருண்... நீ பம்பாய் ஜெயிலில் ரெண்டு வருஷம் உள்ளே இருந்ததை நான் யார்கிட்டேயும் சொல்லப் போறதில்லை."

வருணின் இருதயம் ஒரு கலவரப் பகுதியாக மாற உடம்பு வியர்த்து நாக்கு காகிதமாய் வறண்டது.

"சட்டசபைத் தேர்தலில் நம் கட்சியோட கூட்டணி வச்சுக்கிறது பற்றிப் பேச L.P.P. தலைவர் ஒருத்தர் வந்திருக்காரு. உள்ளே விடவா?"

"லெட்டர்பேடு பார்ட்டித் தலைவரா? அனுப்பித் தொலை."

- உ. ராஜாஜி

யமுனா மறுபடியும் தன் கையில் இருந்த போட்டோவைப் பார்த்தாள்.

போட்டோவின் முன்னாலும் பின்னாலும் ரத்தக் கறைகள் திற்றல் திற்றலாய்த் தெரிய அந்தக் கறைகளுக்கு நடுவே இருப்பது தன் முகம்தானா...?

யமுனா உற்றுப் பார்த்தாள்.

அவளேதான்.

காமிராவை நேருக்கு நேர் பார்த்து உதடு பிரியாமல் சிரித்திருந்தாள்.

இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனின் குரல் மறுபடியும் காதுகளை உரசியது.

"இந்த போட்டோவில் இருக்கிறது நீங்கதானே?"

"ஆ...ஆமா..."

"இந்த போட்டோ எப்போ எடுத்ததுன்னு தெரியுமா?"

"கொ... கொஞ்சம் பழைய போட்டோ மாதிரி தெரியுது. எப்போ எடுத்ததுன்னு ஞாபகம் வரலை..."

"சரி... இதை யாருக்குக் கொடுத்தீங்க...?"

"அதுவும் ஞாபகத்துக்கு வரலை... இந்த போட்டோவை உங்களுக்கு யார் கொடுத்தது...?"

"உங்களோட இந்தக் கேள்விக்கு நான் பதில் சொல்றதுக்கு முந்தி அந்த ஒரு போட்டோவையும் பார்த்துடுங்க."

சொன்ன பால்பாண்டியன் தன் சட்டையின் பாக்கெட்டினுள்ளிருந்து பாஸ்போர்ட் போட்டோ ஒன்றை எடுத்து யமுனாவின்



முகத்துக்கு நேரே காட்டினார்.

யமுனா அந்தப் போட்டோவைப் பார்த்தாள்.

இளைஞன். கொஞ்சம் பெண்மைத்தனமான முகம். கெட்டியான மீசை. கண்களில் குறும்பு. உதட்டில் வெடிக்கக் காத்திருக்கும் சிரிப்பு.

யமுனா கேட்டாள்.

"யார் இவரு...?"

"இவர் யார்ன்னு உங்களுக்குத் தெரியாதா?"

"தெரியாது..."

"போலீஸ்காரன்கிட்ட பொய் பேசக் கூடாது"

"நான் எதுக்காகப் பொய் சொல்லணும்? தெரிஞ்சா தெரியும்ன்னு சொல்லிட்டுப் போறேன்."

"அப்படீன்னா இந்த போட்டோவில் இருக்கிற நபர் யார்ன்னு உங்களுக்குத் தெரியாது...?"

"தெரியாது..."

பால்பாண்டியன் ஒரு சின்னப் புன்னகையோடு தோள்களைக் குலுக்கிக் கொண்டார்.

"இட்ஸ் ஓகே...! இந்தப் போட்டோவில் இருக்கிற நபர் யார்ன்னு நானே சொல்றேன். இந்த இளைஞனோட பேர் லீலா கிருஷ்ணன். பி.எ. பட்டதாரி. மதுராந்தகத்தில் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துத் தங்கியிருந்தான். எல்லாத்துக்கும் மேலா..."

பால்பாண்டியன் பேசப் பேச தன் இடது கையை உயர்த்தி அவரை அமர்த்தினாள்.

"ஸாரி...! நீங்க சொல்ற அந்த லீலா கிருஷ்ணன் யார்ன்னு எனக்குத் தெரியாது. தயவு பண்ணி மேற்கொண்டு எதுவும் பேசாமே இங்கிருந்து போயிடுங்க. நான் வாழ்க்கைப்பட்டிருக்கிற இந்த வீடு ஒரு கோயில் மாதிரி. என்னோட கணவர் உங்களைப் பார்க்கிறதுக்கு முன்னாடி போய்ட்டா பரவாயில்லை... ப்ளீஸ்..."

"லீலா கிருஷ்ணனை உங்களுக்குத் தெரியும்ன்னு சொல்லுங்க. நான் போயிடறேன்..."

"எனக்குத் தெரியாது. தெரியாது. தெரியாது..."

பால் பாண்டியன் புன்னகை செய்தார்.

"நீங்க இப்படி அடம்பிடிச்சா நான் என் கைவசம் இருக்கிற மூணாவது போட்டோவை உங்களுக்குக் காட்ட வேண்டியிருக்கும்..."

யமுனா திகைத்தாள்.

"மூணாவது போட்டோவா...?"

"ம்... பாருங்க..." கையில் வைத்திருந்த ப்ரவுன் கவரைப் பிரித்து போஸ்ட்கார்ட் சைஸ் போட்டோ ஒன்றை எடுத்து யமுனாவின் கையில் கொடுத்தார்.

யமுனா வாங்கிப் பார்த்தாள். இருதயத்தில் விரிசல் விட்ட மாதிரியான உணர்ச்சி.

ஒரு பஸ் ஸ்டாப்பின் பின்னணியில் யமுனாவும் லீலாகிருஷ்ணனும் தெரிந்தார்கள். புன்னகை முகங்கள். இருவருடைய பார்வைகளும் நேருக்கு நேர் மோதியிருந்தன. பால் பாண்டியன் கேலியான குரலில் கேட்டார்.

"இப்ப என்ன சொல்லப் போறீங்க...?"

யமுனாவின் குரல் பதற்றமாய் வெளிப்பட்டது. "ஸார்...! இப்பவும் சொல்றேன்... இந்த லீலா கிருஷ்ணன் யார்ன்னு எனக்குத் தெரியாது."

"அப்படீன்னா இந்த போட்டோ...?"

"ஏதோ ட்ரிக் ஷாட்..."

"ஸாரி மிஸஸ் யமுனா... உங்ககிட்ட என்கொயரிக்கு வர்றதுக்கு முந்தி இந்த போட்டோக்களையெல்லாம் போலீஸ்

போட்டோகிராபர்கிட்டே காட்டி வெரிஃபை பண்ணிட்டுத்தான் வந்திருக்கேன். போட்டோக்கள் எல்லாமே நிஜம். இதில் எந்த தில்லுமுல்லும் இல்லை."

யமுனாவின் பார்வை இப்போது வீட்டுக்குள் அவசர அவசரமாய்ப் பாய்ந்து விட்டு பால் பாண்டியனின் மேல் பயமாய் நின்றது.

"ஸார்... சத்தியமாக இந்த லீலா கிருஷ்ணன் யார்ன்னு எனக்குத் தெரியாது. நீங்க அந்த லீலா கிருஷ்ணனையே கேட்டா உண்மை தெரியும்."

"அந்த லீலாகிருஷ்ணன்கிட்ட கேட்க முடியாதே?"

"ஏன்...?"

"அவன் இப்போ உயிரோடு இல்லை. நேத்து ராத்திரி தற்கொலை பண்ணிக்கிட்டான். பாடி இப்போ போஸ்ட்மார்ட்டத்துக்காக மார்ச்சுவரியில் இருக்கு..."

யமுனா உறைந்து போய் நின்ற விநாடி-பின்பக்கம் குரல் கேட்டது.

"அண்ணி...!"

திரும்பினாள்.

போர்டிகோ படிகளில் ஹரிதா. "அண்ணன் உங்களைக் கூப்பிட்டார்...."

"இ... இதோ...! வ... வர்றேன்... நீ... போ..."

ஹரிதா பால் பாண்டியனை ஒரு சந்தேகப் பார்வை பார்த்துக் கொண்டே உள்ளே போனாள்.

### நாவடக்கம்...!

"ஆண்களுடனும் டென்னிஸ் பந்தயங்களில் மோதிப் பார்க்க ஆசை" என்று செரினா வில்லியம்ஸ் கூறியதற்குக் கடும் எதிர்ப்பைத் தெரிவித்திருக்கிறார் ஒரு முன்னாள் டென்னிஸ் சாம்பியன். "கொஞ்சமாவது நாவடக்கம் வேண்டாமா? மரியாதை தெரியாத பெண்ணாக இருக்கிறாளே" என்று தன் மேலான கருத்தைக் கூறியிருப்பவர், போட்டிகளின்போது திட்டுக்களை உதிர்த்ததற்காகப் பலமுறை அபராதம் விதிக்கப்பட்ட ஜான் மெக்கென்ரோ.

- குல்லு



யமுனா வியர்த்த முகத்தோடு குரலைத் தாழ்த்திக் கொண்டாள்.

"ஸார்... கடவுள் சத்தியமா இந்த லீலா கிருஷ்ணன் யார்னே எனக்குத் தெரியாது. இந்த போட்டோக்கள் எல்லாம் எப்படி எடுத்தாங்கன்னும் எனக்குத் தெரியாது. இந்த வீட்ல நான் சந்தோஷமா வாழ்ந்துக்கிட்டிருக்கேன். குழப்பம் பண்ணி என்னோட வாழ்க்கையைக் கெடுத்துடாதீங்க..."

"உங்க வாழ்க்கையில் நான் குழப்பம் ஏற்படுத்தணும்னு நினைச்சிருந்தா காக்கி யூனிஃபார்ம்ல வந்து உங்க வீட்டு ஹால் சோபாவில் எல்லாரையும் வெச்சுக்கிட்டு என்கொய்ரி பண்ணியிருப்பேன். இப்படி வாசல்ல நின்னு பேசிட்டிருக்க மாட்டேன். எனக்கு வேண்டியது உண்மை. அவ்வளவுதான். தற்கொலை பண்ணிக்கிட்ட லீலா கிருஷ்ணன் வீட்டைச் சோதனை பண்ணிப் பார்த்த போது அவனோட டைரியில் இந்த போட்டோக்கள் இருந்தது. ரெண்டு வருஷத்துக்கு முந்தி இந்த 'ஏரியா பீட்'டுக்கு நான் இன்ஸ்பெக்டராயிருந்தேன். அப்ப அடிக்கடி உங்களைப் பார்த்திருக்கேன். ஒரு நல்ல குடும்பத்துக்கு மருமகளா வாழ்க்கைப்பட்டிருக்கிற உங்களுக்கும் லீலா கிருஷ்ணனுக்கும் என்ன தொடர்புன்னு தெரிஞ்சுக்கத்தான் மஃப்டியில் வந்து பேசிக்கிட்டு இருக்கேன்..."

யமுனாவின் கண்களில் இப்போது நீர்.

"ஸார்... நீங்க சொல்ற அந்த லீலா கிருஷ்ணன் யார்னே தெரியாது."

"நீங்க இப்படிச் சொல்றீங்க. ஆனா அவன் தற்கொலை பண்ணிக்கிறதுக்கு முந்தி எழுதின கவிதையும் கடிதமும் வேறு விதமா இருக்கே...?"

"கவிதையும் கடிதமுமா...?"

"ம்... மொதல்ல இந்தக் கவிதையைப் படிங்க" பால் பாண்டியனின் சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதம் வெளிப்பட்டு யமுனாவின் கைக்குப் போயிற்று.

நான்கு வரிக் கவிதை அது.

யமுனா படித்தாள்.

*யமுனா நதியும்*<br>
*தாஜ்மஹாலும்*<br>
*பிரியலாம்.*<br>
*யமுனா! நீ என்னைப்*<br>
*பிரியலாமா...?*

*- உன் லீல்.*

(தொடரும்)

மூலிகை மணி டாக்டர் க. வேங்கடேசன்
டாக்டர் க.வே. அபிராமி



# காயம்... பெருங்காயம்!



பூண்டின் துர்வாசனையைத் தவிர்த்து அதைச் சாப்பிடுவது சாத்தியமில்லையா? என்று பலரும் கேட்கிறார்கள். அவர்களுக்கு நான் சுட்டிக்காட்ட விரும்புவது இதுதான். பூண்டின் மருத்துவக் குணங்களில் பிரதானமானது அதனுடைய வாசனைதான். வாசனை போய்விட்டால், அதன் பிறகு, தன் மருத்துவ குணங்களின் வீரியத்தை அது இழந்துவிடுகிறது.

அப்படியென்றால் மாற்று வழி? ஓரளவுக்கு இருக்கிறது என்றுதான் சொல்லுவேன். பூண்டு ரசம் வைக்கிறபோது, ரசம், நன்கு கொதித்துக் கொண்டிருக்கிற சமயத்தில், பூண்டு பற்களைப் போட்டு, பாத்திரத்தை நன்றாகமூடி, இறக்கி வைத்துவிட்டால் போதும். பாலில் பூண்டு போட்டுச் சாப்பிட வேண்டியிருந்தால், பாலை நன்றாகக் காய்ச்சியதும், அதில் இரண்டு அல்லது மூன்று பூண்டு பற்களைப் போட்டு, மூடி வைத்துவிட்டால் போதும். பாலுடன் சிறிது, தேன் கலந்து சாப்பிட்டாலும், பூண்டின் வாசனை மட்டுப்படும். அல்லது, மோரில் போட்டு, பத்து நிமிடம் மூடி வைத்துவிட்டு பிறகு சாப்பிடலாம்.

பூண்டைப் பயன்படுத்துகிறபோது, இன்னொன்றை மறந்துவிடக்கூடாது. பூண்டுப் பற்களை நசுக்கிப் போட்டால் பால் அல்லது ரசத்தின் சூட்டில், நசுங்கிய பூண்டின் சாரம் சுலபமாக இறங்கிவிடும். முழுப் பயனும் கிடைக்கும். மூட்டுவலி இருப்பவர்கள், இரண்டு சிட்டிகை மஞ்சள் பொடி, நசுக்கின மூன்று பல் பூண்டு இவற்றை இரண்டு ஸ்பூன் நல்லெண்ணெயில் வதக்கினால் கிடைக்கும் பேஸ்ட்டை வலிக்கிற மூட்டில் பத்து போட்டால் நிவாரணம் கிடைக்கும்.

பூண்டின் எந்த அம்சம், மருத்துவ குணங்களைப் பெற்றிருக்கிறது? என்று ஆராய்ச்சி செய்த மருத்துவர்கள், கண்டு பிடித்த முக்கிய செய்தி : பூண்டின்



வீரியம், அதன் வாசனையில்தான். அதுதான் கிருமிநாசினியாய்ச் செயல்படுகிறது. பூச்சிக் கடி என்றால், கடிவாயில் பூண்டைத் தேய்ப்பது பண்டைய வழக்கம் என்பது மட்டுமில்லை. கையில் உரித்த பூண்டை எடுத்துக் கொண்டு சென்றால், தேள், பாம்பு உட்பட எதுவும் அண்டாது என்று மக்கள் நம்பிக் கொண்டிருந்த காலமும் உண்டு.

அசைவ உணவு சமைக்கிறபோது, மசாலாப் பொருட்களுடன் கணிசமாகப் பூண்டும் சேர்க்கப்படுவதால், சைவ உணவுக்காரர்கள் பூண்டு என்றாலே ஒரு வித வெறுப்பு கொண்டிருக்கிறார்கள். இது தேவையில்லாதது. பூண்டினால் கிடைக்கும் பலன்களுக்காக சைவ உணவுக்காரர்களும் அதை ஒதுக்கக் கூடாது என்பது என் அட்வைஸ்.

பூண்டுக்கு, பாலுணர்வினைத் தூண்டும் குணம் உண்டு என்பதால்தான், சில குறிப்பிட்ட பிரிவினர் குறிப்பாகப் பிரம்மச்சரியம் கடைபிடிப்பவர்கள் பூண்டை ஒதுக்கிவிடுகிறார்கள். அதை நான் குறை சொல்லவில்லை. இந்த காரணத்துக்காக, புதுமணத் தம்பதிகளுக்கு நான் பூண்டைச் சிபாரிசு செய்கிறேன். ஆனாலும் பூண்டின் பல்வேறு மருத்துவக் குணங்களில் இதுவும் ஒன்று. இதை விட மிக முக்கியமான பலன்கள் கிடைக்கவும் பூண்டு உதவுவதால், இதை முற்றிலுமாய்த் தவிர்ப்பது உசிதமில்லை.

அடுத்த அஞ்சறைப் பெட்டி ஐட்டம் பெருங்காயம். இதை வெகு சகஜமாக வீட்டில் பயன்படுத்தினாலும், பெருங்காயம் என்பது என்ன என்பது பலருக்குத் தெரியாது. பெருங்காயம் என்பது ஒரு மரத்தின் பிசின். இதனுடன் கோதுமை மாவு போன்று இன்னும் ஒரு சில பொருட்களைச் சேர்த்து, தயாரிக்கப்படுவதுதான் பெருங்காயம். இன்று வாடிக்கையாளர்களின் சௌகரியம் கருதி திடமான பிசின் போல மட்டுமின்றி பவுடர் வடிவிலும் விற்பனை செய்யப்படுகிறது. இந்தோனேஷியா, சைனா போன்ற நாடுகளில்தான் பெருங்காயம் பெருமளவில் தயாரிக்கப்படுகிறது. அதை இறக்குமதி செய்துதான், வீட்டு உபயோகப் பெருங்காயத்தை நம் ஊர் கம்பெனிகள் தயாரிக்கிறார்கள்.

நம் கிச்சனில் பெருங்காயம் சேர்க்காத சமையல் ஐட்டமே இல்லை என்றே சொல்லிவிடலாம். அந்த அளவுக்கு எல்லாவற்றிலும் கெட்டிப் பெருங்காயத்தைப் பொறித்துப் போடுவதோ, பவுடர் பெருங்காயத்தைத் தூவி விடுவதோ நம் பழக்கம்.

வாய்வுத் தொல்லைக்கு மட்டுமில்லை, எந்தவிதமான வயிற்றுத் தொல்லைக்கும் பெருங்காயம் நல்லதொரு நிவாரணி. வயிற்று வலி என்றால் உடனே வாழைப் பழத்துண்டு ஒன்றை எடுத்து அதை இரண்டாக நறுக்கி, அவற்றுக்கு இடையில், பெருங்காயம் சிறிது வைத்து அப்படியே விழுங்கச் சொல்லுவார்கள். அது உடனடி ரிலீப் தரும்.

மற்றவைகளைப்போல, பெருங்காயத்தை அப்படியே ஒரு துண்டு, வாயில் போட்டுக் கொள்ளாமல் வாழைப் பழத்துக்குள் வைத்துச் சாப்பிடுவதற்கு என்ன காரணம்? பெருங்காயத்தை அப்படியே சாப்பிட்டோமானால், அது உள்ளே போகாமல், பற்களில் ஒட்டிக் கொண்டு விடும். அப்படி ஒட்டிக் கொண்ட பெருங்காயத்தை எளிதில் அகற்ற முடியாது. ஒட்டிக் கொண்ட பல்லின் பகுதியை அரித்து, ஓட்டை ஏற்படுத்திவிடும் குணம் பெருங்காயத்துக்கு உண்டு! தலைவலி போய் திருகுவலி வந்த கதையாய், வயிற்று வலிக்கு நிவாரணம் தேடப் போய், பல் அரிப்பு வந்து விடப் போகிறது ஜாக்கிரதை!

தாளிக்கும் சமயத்தில் பெருங்காயத்தைச் சேர்ப்பதுதான் சரியான முறை. பவுடர் பெருங்காயம் என்றால், சமைக்கிறபோது, நேரடியாகவே தூவிவிடலாம்.

குழந்தை பெற்றெடுத்த தாய்மார்களின் கருப்பையைச் சுத்தம் செய்யவும், மறுபடி மாதவிலக்குச் சரியானபடி தொடரவும் பெருங்காயம் மிகவும் உபயோகப்படுகிறது.

துவரம் பருப்பு வில்லனை, பெருங்காய ஹீரோ எப்படி வீழ்த்தி, வெற்றிவாகை சூடுகிறார் என்று அடுத்தவாரம் பார்க்கலாம்.

**"கல்யாண மண்டபத்துல செருப்புகளைத் திருடினாச் செருப்படிதான் கிடைக்கும்னு சொல்லாமல் சொல்றதுக்காக ஒரு ஜோடி செருப்பைக் கட்டித் தொங்கவிட்டிருந்தாங்க!"**

**"பரவாயில்லையே. நல்லபலன் கெடைச்சிருக்குமே!"**

**"கெடைச்சது. தொங்கவிட்ட ஒரு ஜோடியைக் காணோம்!"**

**- வத்திராயிருப்பு தெ. சுந்தரமகாலிங்கம்.**



✉ தடகள வீரர் நடராஜன் கூறிய கருத்துக்கள் அனைத்துமே ஏற்றுக் கொள்ளக் கூடியதுதான். அவருக்கு வந்த சோதனையும் வேதனையும் நியாயமானவை என்றுதான் சொல்ல வேண்டும். நிஜமாகவே அவருக்கு நல்ல பதிலாக வந்தால் நாமும் சந்தோஷப் படலாம்.

தென்கடப்பந்தாங்கல், டி.எஸ். சேகர்.

✉ 'அவமானச் சின்னமாய் ஒரு கிராமம்' கட்டுரைப் படித்தேன். 'தாழ்த்தப்பட்ட மக்கள் நுழையக் கூடாத இடம் ஆலயம்' என்று அழகாபுரம் வன்னியர்களுக்குச் சொன்ன புண்ணியவான் யாரோ? 'ஆண்டவன் முன் அனைவரும் சமம்' என்ற நல்ல பண்போடு செயல்படுவது அனைவருக்கும் நல்லது.

மதுரை, என். பாலகிருஷ்ணன்.

# குறையொன்றுமில்லை கோவிந்தா!

✉ 'அம்மாடி!' இனி எம்.ஜி.ஆர் தொண்டர்களுக்கு அமாவாசை இரவில் (கும்மிருட்டில்) நடக்கக்கூட டார்ச்லைட் தேவையில்லை! அதான் வழி காட்ட எஸ்.டி.எஸ். தாத்தா புறப்பட்டு விட்டாரே! குறையொன்றுமில்லை கோவிந்தா!

ஆதமங்கலம், கே. சண்முகம்.

✉ இதழை வாங்கியவுடன் எங்கள் கண்கள் ரிமோட்டாய் தேடுவது வினோத்தின் 'ரிமோட்' பகுதியைத்தான். SUCCESS COMES IN CANS, NOT IN CAN'TS என்ற வரிகளை என் புது வருட டைரியின் முதல் பக்கத்தில் குறித்து வைத்துக்கொண்டேன்.

பெரியகுளம், ஆர். வேணுகோபால்

✉ ஏழையாக இருந்தாலும் நாணயமாகவும் சொன்ன சொல் தவறாமல் நடக்க வேண்டும் என்பதையும் வெளிச்சம் போட்டுக் காட்டிய 'சொல்' சிறுகதை அருமை.

ஈரோடு, கன்னி. சுப்பிரமணியன்.



✉ 'அலை உறங்கும் கடலி'லும் சண்ட மாருதத்தை நிகழ்த்திவிட்டார் பா. ராகவன். கருத்துக் குவியலான முத்துக்கள் போன்ற தெறித்த நடை. பல இடங்களில் வார்த்தை அலைச் சிதறல்கள்; சில்லிட்டது போன்ற ஒரு சிலிர்ப்பு.

கோவை-25, காசிவிஸ்வநாதன்

★ பா. ராகவனின் எழுத்து அலையில் ஒவ்வொரு சொட்டும் இதம். வாரா வாரம் பால் போன்ற வார்த்தை பிரயோகங்கள் படிக்கப் படிக்க குளிர்ச்சியாய் இருந்தது. கடற்கரை காற்றின் வருடலோடு கதை சொல்லி காதலர்களுக்குத் தன்னம்பிக்கையூட்டிய கதையாசிரியருக்கு நன்றி.

சேர்வகாரன்வலசு, செ. ஈஸ்வரன்.



✉ 'கிரிமினல்கள் ஜாக்கிரதை' தொடரை ஒவ்வொரு வாரமும் ஆவலுடன் படிப்பேன். சாதனை என்றால் இது அல்லவா! என்று சபாஷ் போட வைத்தத் தொடரை இன்னும் சற்று தொடர்ந்திருக்கலாம் என்று தோன்றியது.

பெங்களூர் – 40, என்.கே. ஈசுவரி.

✉ 'கிரிமினல்கள் ஜாக்கிரதை' தொடரில் பல வியப்பூட்டும் செய்திகளைப் படித்தோம். தடய அறிவியல் நிபுணர் எங்களை திகில் நிறைந்த உலகிற்குள் அழைத்துச் சென்றிருந்தார். வெல்டன். கடைசியாக, ராஜீவைக் கொல்ல வந்த பெண் எப்படியெல்லாம் தன்னை மனித வெடிகுண்டாக மாற்றிக் கொண்டாள் என்பது பற்றியும், முருகனின் சாமர்த்தியமான குறுக்கு விசாரணை பற்றியும் சுவாரஸ்யமாக விளக்கப்பட்டிருந்தது சிறப்பு.

மொரட்டுப்பாளையம், சு.நா. இராஜேஸ்வரன்.

# ஸ்ரீராம பக்த ஹனுமான்



ஹனுமானைப் போலொரு தூதனைப் பெற்ற ஸ்ரீராமனை எச்சரிக்கையுடன்தான் எதிர்கொள்ள இயலும் என்று இலங்கை முழுவதுமே விழிப்புறுகிறது. மண்டோதரி ராவணனை எச்சரிக்கிறாள்:

"ஒரு குரங்கு என்று நாம் நினைத்த வீரன் வந்து நம் சேனைகளையும் நகரத்தையும் அழித்துவிட்டுப் போய் விட்டான். அப்படியானால் அவனுடைய யஜமானன் இன்னும் எவ்வளவு பராக்கிரமசாலியாக இருப்பான் என்று சொல்லவும் வேண்டுமோ! இந்த விபரீத யுத்தம் வேண்டாம். உடனடியாக சீதையை ஸ்ரீராமனிடம் ஒப்படைத்து விடுங்கள்."

எந்த எச்சரிக்கையையும் கேட்கிறவனல்ல ராவணன். யுத்தத்தில் இறங்குகிறான். ஆஞ்சநேயனிடம் அடியும் வாங்கிக் கொள்கிறான். ஹனுமானை மெச்சுகிறான். அதுவரையில் அவன் அமைச்சர்களும் அவனுடைய சேனா வீரர்களும் மனைவி மண்டோதரியும் ஹனுமானைச் சிலாகித்தார்கள். அவன் கையால் அடி வாங்கிக் கொண்ட பின் ராவணனே சிலாகிக்கிறான்!

# கல்யாணபுரம் ஆராவமுதன்

# 25



"மலையின் மீது யுகாந்திரத்தில் இடி விழுவது போல் நான் குத்திய குத்தை, உன் ஒருவனால்தான் தாங்க முடிந்திருக்கிறது! அதை வாங்கிக் கொண்ட வேறு யாருக்கும் உயிர் போயிருக்கும். ஆனால், நீ நிலை மாறாதிருக்கிறாய். அது மட்டுமல்ல... என் மார்பில் நீ குத்த, நானல்லவா நிலை தடுமாறிப் போனேன்! இந்த சாதனை இன்றும் என்றும் வேறு யாரும் நிகழ்த்த முடியாதது. தெரிந்து கொள்!"

ஆஞ்சனேயனிடம் அல்லல்பட்டவனே இவ்வாறு பேச வேண்டுமென்றால் அந்த வீரனுடைய பராக்கிரமம் எத்தகையது என்று பார்த்துக் கொள்ளுங்கள்.

ஆஞ்சனேயனோடு போரிட்ட ராவணன் பின்னர் லக்ஷ்மணனோடு சண்டை போடுகிறான். சக்தி என்ற ஆயுதத்தால் அவன் லக்ஷ்மணனை அடிக்க, இளவல் மூர்ச்சையாகி விடுகிறான்.

விழுந்து கிடக்கும் லக்ஷ்மணனைத் தூக்கிக் கொண்டு போய் விட்டால் ராமனை ஜெயித்து விடலாம் என்பது ராவணனின் கணக்கு. இருபது கைகளையும் லக்ஷ்மணனின் உடலுக்குக் கீழே கொடுத்துத் தூக்குவதற்கு முற்படுகிறான் ராவணன். ஆனால், லக்ஷ்மணனை அவனால் அசைக்கக் கூட முடியவில்லை!

'விந்த்ய, ஹிமாசல, மேரு மலைகளை அனாயாசமாகத் தூக்கக்கூடியவன் ராவணன். அவனால் லக்ஷ்மணனின் உடலை அசைக்கக்கூட முடியவில்லை!' என்கிறார் வால்மீகி.

அந்த நேரத்தில் பக்கத்திலிருந்த ஹனுமான், அலுங்காமல் கொன்

ணாமல், ஒரு பூ மாலையை எடுப்பது போல் மிக எளிதாக லக்ஷ்மணனைத் தூக்கி விட்டானாம்!

ராவணனால் முடியாதது ஆஞ்சனேயனால் மட்டும் எப்படி முடிந்ததாம்...?

ஹனுமானுக்கு இருந்த ராமபக்தியே காரணம் என்கிறார் வால்மீகி.

நம்மாழ்வார் சொல்கிறார்:

பத்துடை அடியவர்க்கு எளியவன்
பிறர்களுக்கரிய வித்தகன்

பக்தியுள்ளவர்களுக்கு இறைவன் மிக எளியனாகவும் அகந்தை உள்ளவர்களுக்குக் கிடைத்தற்கரியனாகவும் இருக்கிறானாம்!

லக்ஷ்மணன் வீழ்ந்த பின் ராமனுக்கும் ராவணனுக்கும் கடுமையான போர்!

ஹனுமான் என்ன செய்தான்... ஸ்ரீ ராமனிடம் போய் "ராமா! எனது தோளில் நீ ஏறி அமர்ந்து, ராவணன் மேல் பாணங்களைப் பொழிவாயாக..." என்று சொல்லி ராமனைத் தோளில் தூக்கிக் கொண்டு விட்டான்.

அந்த 'வாகனத்தில்' அமர்ந்தபடி ஸ்ரீ ராமன் சண்டை போட்டான் பாருங்கள்!.... ஒரு க்ஷணத்தில் ராவணனை நிராயுதபாணியாக்கி விட்டான். 'இன்று போய் நாளை போருக்கு வா!' என்று அனுப்பி விட்டான்.

அனைத்தும் இழந்து தலைகுனிவுடன் ராவணன் தலைநகர் திரும்ப, அந்தக் காட்சியைக் கம்பர் வர்ணிக்கிறார் பாருங்கள்:

ஓதமொத்தனன் மாருதி, அதன் அகத்து
உறையும்
நாதன் ஒத்தனன் என்னிலோ
துயில்கிலனம்மயன்
வேதமொத்தனன் மாருதி, வேதத்தின்
சிரத்தின்
போதமொத்தனன் இராமன் வேறு
இதனில்லை பொருவே...?

ஹனுமான் பாற்கடலுக்கு நிகராக இருந்தானாம். அதிலே பள்ளிகொள்ளும் பரந்தாமனைப் போல் காணப்பட்டானாம் ஸ்ரீராம பிரான். ஆனால் இங்கு ஸ்ரீ ராமன் உறங்கவில்லையே. விழித்திருக்கிறானே என்றால், வேதங்களின் சிரஸிலே இருக்கிற உபநிஷத் போல் அவன்! வேதம் ஹனுமான்; அதன் உச்சம் உபநிஷத் - இந்த உபநிஷத்களிலே விளங்கக்கூடிய, விளக்கப்படக்கூடிய பரம் பொருளே அவன்.

வேத வடிவினனாகவே ஹனுமான் உயர்த்திச் சொல்லப்படுகிறான்!

கும்பகர்ணன், அதிகாயன், தேவாந்தகன், திரிசிரன் என்று வரிசையாய்ப் பலரை அனுப்பி இழக்கிறான் ராவணன். தன் ஆசை மகன் இந்திரஜித்தை அனுப்பி வைக்கிறான்.

இந்திரஜித்தோ, யுத்த களத்திலேயே ஹோமம் செய்து, பிரும்மாஸ்திரத்தைப் பெற்று ராக்ஷஸ மாயையினால் தன்னை மறைத்துக் கொண்டு போர்தொடுக்கிறான். எல்லோருமே - ராம - லக்ஷ்மணர்கள் உள்பட - தாக்குண்டு மயங்கி விழுகிறார்கள். இந்திரஜித் அவர்கள் இறந்தே விட்டதாக மகிழ்ந்து அரண்மனை திரும்புகிறான்.

விபீஷணன் மட்டும் எப்படியோ மயங்காமல் தப்பியிருக்கிறான். வீழ்ந்து கிடக்கும் நபர்களிடையே தேடுகையில், அவன் ஜாம்பவானைக் காண்கிறான். ஜாம்பவான் மெள்ள சுதாரித்துக் கொண்டு அவனை அருகே அழைத்துக் கேட்கும் முதல் கேள்வி என்ன தெரியுமா...?

"ஹனுமான் உயிரோடு இருக்கிறானா?" என்பதுதான்!

விபீஷணன் அவருக்குப் பதில் சொல்லாமல், எதிர்கேள்வி கேட்கிறான்!

"பெரியவரே! நீங்கள் ராம - லக்ஷ்மணர்களைப் பற்றியோ, சுக்ரீவன், அங்கதன் பற்றியோ கேட்காமல் ஹனுமானைப் பற்றி மட்டுமே ஏன் கேட்கிறீர்கள்...?"

இதற்கு ஜாம்பவான் சொன்ன பதில் வெகு அழகானது:

"விபீஷணா! ஹனுமான் ஒருவன் மட்டும் பிழைத்திருந்தால் போதும். மற்ற வானர வீரர்கள் மாண்டு போயிருந்தாலும் ராம - லக்ஷ்மணர்களுக்கு ஆபத்து ஏற்பட்டிருந்தாலும் அவன் ஒருவனுடைய முயற்சியினால் அவர்களைக் காப்பாற்றி விட முடியும். ஆனால் ஹனுமான் இல்லாமல் நாம் அனைவரும் பிழைத்திருந்தும் பயனில்லை" என்கிறார் ஜாம்பவான்.

அந்த ஹனுமானுக்கே அவருடைய பெருமையை, வலிமையை நினைவுபடுத்தியவர் ஜாம்பவான்தானே! அவர் இவ்வாறு

## அருள்வாக்கு

ஒவ்வோர் அவயவத்தாலும் ஏற்படக்கூடிய தோஷத்தைப் போக்கிக் கொள்ள அந்த அவயவத்தாலேயே செய்யக் கூடிய புண்ய கர்மாக்கள் இருக்கின்றன. குப்பைத் தொட்டியான மனஸை சுத்தம் பண்ண அந்த மனஸாலேயே த்யானம் செய்ய முடிகிறது. கண்டதைப் பேசுகிற நாக்கை சுத்தப்படுத்திக் கொள்ள அந்த நாக்காலேயே பகவன் நாமாவைச் சொல்ல முடிகிறது. குயுக்தி எல்லாம் பண்ணும் மூளையைச் சுத்த

மாக்கிக் கொள்ள அந்த மூளை யாலேயே தத்வ ஆராய்ச்சி பண்ண முடிகிறது. இப்படியே, இந்த சரீரத்தால்- கையாலும், காலாலும், உடம்பாலும்- எத்தனையோ தப்பு தண்டா பண்ணுகிறோமல்லவா? அதை இந்த சரீரத்தாலேயேதான் சுத்தப்படுத்திக் கொள்ள வேண்டும். சரீரப் பிரயாசையாலேயே பண்ணிக் கொள்ளும் இந்த சுத்திதான் பொதுக் கார்யங்களான பூர்த்த தர்மங்கள்-



ஸோஷல் ஸர்வீஸ்-அத்தனையும். சரீரப் பிரயாசையாலேயே இது சித்த சுத்தியையும் தரக்கூடியது. ஏனென்றால் சரீரத்தால் செய்கிற இந்தக் கார்யங்களுக்கு மூலமாகப் பரோபகாரம் என்ற எண்ணம் நம் சித்தத்தில் இருப்பதுதான்.

— ஜகத்குரு காஞ்சிகாமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

பேசியதில் அதிசயமில்லைதான்.

இவ்வாறு விபீஷணனும் ஜாம்பவானும் பேசிக் கொண்டேயிருந்தபோது நமது ஸ்ரீ ராம பக்த ஹனுமான் மெதுவாக ஜாம்பவானின் முன்வந்து நின்றார்!

உடனே அவரை நோக்கிச் சொன்னார் ஜாம்பவான் :

"வாயுகுமாரா! நீ உடனே இமயமலைச் சாரலுக்குச் சென்று நான் சொல்லும் மூலிகைகளைக் கொண்டு வர வேண்டும். அந்த மூலிகைகள் வந்தால் இவர்கள் அனைவரும் பிழைத்தெழுவார்கள். அதுவும் சூர்யோதயத்துக்கு முன்னால் நீ வந்து சேர்ந்தாக வேண்டும்... இறந்தவர்களைப் பிழைக்க வைக்கும் மிருத ஸஞ்சீவினி, உயிர் பிழைத்து எழுந்த பின் நடமாட உதவும் விசல்யகரணி, நோய்கள் தீர்ந்தபின் புண்கள் ஆறி, அதனால் சருமத்தில் ஏற்பட்ட நிற மாற்றத்தைப் போக்கி, பழைய அழகைத் தரும் ஸாவர்ணியகரணி, காயம் பட்ட சருமத்தைச் சேர்த்து வைத்து ஆற்றும் ஸந்தானகரணி.. இவ்வளவும் வேண்டும்" என்கிறார் ஜாம்பவான்!

நாமாயிருந்தால் என்ன செய்வோம்....? மருந்து பெயர்களை எழுதிக்கொள்ள முதலில் காகிதம் தேடுவோம். பின்னர் பென்சில் அல்லது பேனா. அப்புறம் எழுதிக் கொள்ள வேண்டும். எழுதியதைப் பத்திரமாக, மறக்காமல் எடுத்துக் கொண்டு புறப்பட வேண்டும்.

ஆனால் ஆஞ்சனேயன் என்ன செய்தான் தெரியுமா...? அடுத்தகணமே வான வீதியில் வெகு வேகமாகச் செல்லத் தொடங்கி விட்டான். அந்தக் காட்சியை வால்மீகி எப்படி வர்ணிக்கிறார் பாருங்கள்:

'ஹனுமான் தன் சரீரத்தைப் பெரிதாக்கிக் கொண்டான். திரிகூட மலையின் உச்சிக்கு ஒரு தாவு தாவினான். அங்கிருந்து ஜிவ்வென்று ஆகாயத்தில் கிளம்பினான். அவன் கால்களை அழுத்தி விண்ணில் உயரவும், அம்மலை அவன் பாதங்களால் ஒரு துவை துவைக்கப் பட்டு, கிடுகிடுவென்று நடுங்கியது. ஹனுமான் புறப்பட்ட வேகத்தில் மலைச்சிகர மரங்கள் உராய்ந்து எரிய ஆரம்பித்தன.

சுற்றிலும் கிளம்பிய கண்டமாருதம் போன்ற ஓசையும் அசைவும் கண்டு இலங்கைவாசிகளெல்லாம் திகிலடைந்தனர். வீடுகள், கோபுரங்கள் தடதடவென்று இடிந்து விழுந்தன. ஹனுமானின் இடி போன்ற குரலைக் கேட்டு ராக்ஷஸர்கள் பயந்து நடுங்கி ஓடி ஒளிந்து கொண்டனர்..." என்கிறார் வால்மீகி.

பல மலைகள், நதிகள் கடந்து போய் இமயமலையை அடைந்தான் ஹனுமான். அங்கே தேவதைகளும் ரிஷிகளும் உலவும் ஆசிரமத்தைக் கண்டான். பிரும்மதேவனின் வீட்டையும் கைலாசத்தையும், இந்திர, சூர்ய குபேரர்களின் வாசஸ்தலங்களையும் கடந்து இமயமலைச் சிகரத்தை அடைந்தான்.

அடைந்தவன், அங்கே மூலிகைகளைத் தேட ஆரம்பித்தான். தேவையானவற்றை அவனால் கண்டுபிடிக்கவே இயலவில்லை. பொறுமையிழந்தவன் மலைச் சிகரத்தையே உடைத்து, பெயர்த்து எடுத்துக் கொண்டான். மீண்டும் வான் வழியாகவே பறந்து வந்து யுத்த பூமியை அடைந்து விட்டான்!

யுத்த பூமிக்கு மேலாக, மலைச் சிகரத்தை ஏந்தியபடி அவன் பறந்து வந்தபோதே, வீழ்ந்து கிடந்த வீரர்கள் குணமடைந்து எழ ஆரம்பித்து விட்டார்கள். விபீஷணன் அவனை ஆரத் தழுவினான். இந்த தீரச் செயலை அருணாசலக் கவி எப்படி பாடுகிறார் பாருங்கள்:

விழிபோலும் என் தம்பி மெய்
உயர்போயே
முழுகாதபடி காத்தாய் முழுதும்
காப்பாயே
பழிகாரன் முன் இந்த பயம் தீர்த்தாலே
அழியாத சிரஞ்சீவி ஆயிருப்பாயே
('அனுமானே நீயே' என்ற பாடல்)

சஞ்சீவி மலையைக் கொணர்ந்த தனது பக்தனை 'சிரஞ்சீவியாக இரு' என்று வாழ்த்தினாராம் ஸ்ரீராமன்!

(வளரும்)

# பாடாய்ப் படுத்திய வாஷிங் மெஷின்

"எனக்குப் பிடிச்ச சிவப்பு கலர்ல நான் சொன்ன கம்பெனி வாஷிங்மெஷின் வாங்கிட்டு வந்தாதான் அதை நான் யூஸ் பண்ணுவேன். இல்லேன்னா, அது எவ்வளவு பெரிய கம்பெனி மெஷினா இருந்தாலும் என் கையால தொடமாட்டேன். ஆமா!''

– பிடிவாதக்காரியான என் மனைவியின் பாசம் பொங்கும் கட்டளை இது!

ஆண்டாண்டு காலமாக எங்கள் வீட்டுத் துணிகளைக் கிராமத்திலிருக்கும் சலவைக் காரர் ஒருவர் துவைத்துத் தருவதுதான் வழக் கம். "அழுக்கே போகலை; என்ன துவைக் கறீங்க?'' என்று என் மனைவி சதா நச்சரித் துக் கொண்டே இருக்க, ஒரு நாள் வராமல் போனார் அந்தச் சலவைக்காரர். பிறகு டி.வியில் வரும் 'சோப்'களையும் பவுடர் களையும் பயன்படுத்தித் துணிகளை 'பளிச்' ஆக்கிக் கொண்டிருந்தாள் என் மனைவி. இந்த நேரம் பார்த்தா பக்கத்து வீட்டில் வாஷிங்மெஷின் வாங்க வேண்டும்.' வந்தது தெரிந்த கடையில் அட்வான்ஸ் கொடுத்து விட்டு வந்தேன். இந்த விஷயத்தை என் மனைவியிடம் தெரிவித்தபோதுதான் திடீரென்று அவள் பத்ரகாளியாகி நீங்கள் படித்த முதல் பாராவைச் சொன்னாள்.

இது போன்ற தம்மாத்துண்டு(!) பிடி வாதங்களைத் தவிர என் மனைவி நல்லவள். வேறுவழியின்றி, மனைவி சொல்லே மந்திர மென்று நினைத்து அந்தக் கடையில் அட் வான்ஸைத் திரும்ப வாங்கியபோது கடைக் காரர் சொன்னார்.

"சார் உங்க மனைவி சொல்ற வாஷிங் மெஷின் சுமாரான ரகம்தான். திருப்பூர் போனா மலிவா கெடைக்கும். ட்ரை பண்ணிப் பாருங்க.''

வீட்டுக்கு வந்தபோது, கையில் தினசரி யோடு வாசலிலேயே காத்திருந்தாள் என் மனைவி.

"பாத்தீங்களா... பாத்தீங்களா... நான் சொன்ன வாஷிங்மெஷின், விளம்பரம் பண்ணியிருக்கான் பேப்பர்ல. மலிவா கெடைக்குதாம். அதோட பன்னிரண்டாயிரத் துக்குப் பொருள்கள் வாங்கினா தங்க மோதிரம் உட்பட பன்னிரண்டு பொருட்கள் இலவசமாம். டோர் டெலிவரியும் உண் டாம்...''

அடுக்கிக் கொண்டே போனாள்.

விளம்பரம் கொடுத்திருந்த திருப்பூர் கடைக்குச் சென்றோம். சென்ற பிறகுதான் தெரிந்தது விளம் பரத்திற்கும், தரும் பொருட்களுக்கும் சம்பந்தமே இல்லை என்று. என் மனைவி

வினை. அவர்களின் மெஷினைப் பார்த்து விட்டு, 'அதே கலர், அதே மெஷின், இப் போதே' என்று கோரிக்கை வைத்தாள் என்னிடம். சத்தியமங்கலத்திலுள்ள பல கடைகளில் ஏறி இறங்கி அந்தக் கம்பெனி மெஷின் கிடைக்காததால், அதைவிட தொழில் நுட்பத்தில் பல மடங்கு உசத்தியான ஒரு வாஷிங் மெஷினுக்குத்

கல்கி–ரமணி Vs ரமணி இணைந்து நடத்திய 'தம்பதி தமாஷ்' போட்டியில் ரூ. 2000 மதிப்புள்ள பட்டுப் புடைவையை ஆறுதல் பரிசாகப் பெறும் கட்டுரை.



ஆசைப்பட்ட அந்தக் கம்பெனி வாஷிங் மெஷின் தென்பட ஓடிப்போய் அணைத்துக் கொண்டாள் குழந்தை மாதிரி! பிறகு வாங்கினேன். டோர் டெலிவரி, நாங்கள் கொடுக்கும் பணத்தை வாங்கிக் கொண்டுதான் என்பது தெரிந்து, பஸ்ஸுக்கு வந்தோம். கண்டக்டரிடம் பத்து நிமிடம் பாட்டு வாங்கி, லக்கேஜுக்கு மேல் கொஞ்சம் அழுது மெஷினை ஏற்றிக் கொண்டு சத்தியமங்கலம் வந்து ஆட்டோ பிடித்து வீட்டுக்குவர எக்ஸ்ட்ராவாக நானூற்று ஐம்பது ரூபாய் கரைந்திருந்தது. பர்ஸைப் பார்த்து மனத்துக்குள் அழுது கொண்டு வாஷிங் மெஷினை இறக்கினோம்.

இது வந்த நேரம் வீட்டில் உறவினர் கும்பல்! அவர்களிடம் விலாவாரியாக வாஷிங் மெஷின் பற்றிப் பெருமையடித்து விட்டு மெஷினின் ஒயரை சொருகி ஸ்விட்ச் போடச் சொன்னாள் என் மனைவி. போட்டேன். 'கர்புர்' என்று சின்ன சத்தம். அவ்வளவுதான்! அதற்கு மேல் மெஷினில் மூச்சு பேச்சில்லை!

"ஓடாத மெஷினையா திருப்பூர்லயிருந்து வாங்கிட்டு வந்தீங்க?" என்று உறவுக்காரர்கள் டென்ஷனாக்க, நான் எலெக்ட்ரீஷியனை அழைத்து வந்தேன்.

"சார் இந்த மெஷின்லாம் நம்மூருக்குச் சரியா வராது சார். திருப்பூர்ல, கடையில நல்லா ஓடியிருக்கும். இங்க எப்பவுமே லோவோல்டேஜ்தான். இங்க ஒத்து வராதுங்க; பேசாம வேற வாங்கிருங்க" என்று அவர் கூற, என் மனைவியை நான் 'அக்னிப் பார்வை' பார்த்தேன். அவள் தலைதாழ்த்தாள் 'மன்னிச்சுக்கோங்க' என்பது மாதிரி.

வேறென்ன செய்வது? இந்த மெஷினை ஓரங்கட்டிவிட்டு நான் அட்வான்ஸ் கொடுத்த மெஷினை வாங்கி வந்தேன்.

'அட இது நல்லா ஓடுதுங்க'- இது என் மனைவியிடமிருந்துதான்!

— சக்தி ஏ. ஜே. ஜப்பார்



**மேஷம் :**
உங்க புத்திசாலித்தனமும் திறமையும் பளிச்சிடும் நேரமுங்க! வி.ஐ.பி.களும் மற்ற 'பசையுள்ள' மனுஷங்களும் ஓடி வந்து உதவுவாங்க. அதனால் பணக் கஷ்டம்னா 'கிலோ என்ன விலை'தான். போதாதற்கு திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புக்கூட அடிக்கலாம்! ப்ரண்ட்ஸ் மூலம் அனுகூலம் உண்டு. எதிரிகள் 'கப்சுப்கபர்தார்'னு அடங்கிப் போயிடுவாங்க! அப்பா உடம்பு பத்திரம். பயணம் செய்யும்போது சேஃப்டி ஃபர்ஸ்ட்!



**கடகம் :**
உங்க முக்கியமான எண்ணங்களும் திட்டங்களும் நிறைவேறும். புது பொறுப்புகளும் பதவிகளும் வந்து சேரும். பணம் தாராளமாகப் புழங்கும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டம் கூட அடிக்கலாம். துணிமணி, நகை, அலங்காரப் பொருள்னு வாங்கித் தள்ளுவீங்க. வீட்டில் விசேஷம் நடக்கும். பெத்தவங்களால பிள்ளைகளுக்கும் பிள்ளைகளால பெத்தவங்களுக்கும் பரஸ்பரம் நன்மை உண்டாகும். குறிப்பா பெண்களுக்கு ஜோரான வாரமுங்க.



**மேஷ ராசிக்காரரான கார் ரேஸ் சாம்பியன் பார்த்தீவா சுரேஸ்வரனுக்கு திடீர் அதிர்ஷ்ட வாய்ப்பு இருக்குதாம்!**

**ரிஷபம் :**
சின்னச் சின்னத் தடங்கல்கள். மனசில் குழப்பம், அதிக அலைச்சல். இவை எல்லாம் ஒண்ணாகச் சேர்ந்து காரியங்களை பிளான்படி செய்யவிடாமல் தடுக்கும். எதிர்ப்புகள் ஜாஸ்தியாகும். ஆனால் எல்லாத்தையும் மனசில் ஏற்படுகிற துணிவாலும் தன்னம்பிக்கையாலும் சமாளிச்சிடுவீங்க.

**சிம்மம் :**
பேசிப் பேசியே எதிரிகளை மடக்கிடுவீங்க. துணிச்சலா எல்லா காரியங்களையும் செஞ்சு முடிப்பீங்க. ஜெயிச்சும் காட்டுவீங்க. குடும்பத்தில் மகிழ்ச்சிக்குக் கேக்கவா வேணும்? வீடு, நிலம், கார், வண்டி ஏதாவது ஒண்ணு வாங்கப் போறீங்க. ஆனால் பிள்ளைகளால் மனச சஞ்சலப்படலாம். மறதியால் கூட பிரச்னை ஏற்படலாம்.

**மிதுனம் :**
வீண் அலைச்சல், குழப்பம் இருந்துகிட்டே இருக்கும். கெட்ட சகவாசம், கெட்ட பழக்க வழக்கங்கள், குறுக்கு வழிகள்... இதெல்லாம் நினைச்சுக்கூட பார்க்காதீங்க. எதையும் நல்லா யோசிச்சு செயல்படுங்க. சுமூகமாகப் பேசி சிரிச்சா யாருடைய அதிருப்திக்கும் ஆளாகாமல் பார்த்துக்கலாம். செலவு ஜாஸ்தியாகும். ஆனால் சிக்கனமாக இருந்தால் சமாளிச்சிடலாம்.

**கன்னி :**
உங்க கவுரவம், அந்தஸ்து, புகழ் எல்லாம் ஓஹோன்னு இருக்குமுங்க. உங்க முக்கியமான பிளான் எல்லாம் 'வர்க்-அவுட்' ஆயிடும். நல்ல விஷயங்களில் நாட்டம் ஜாஸ்தியாகும். பணப் பிரச்னை இருக்காது. ஆனால் கணவன்-மனைவி உறவில் சலசலப்பு உண்டாகலாம், பக்குவமா நடந்துக்குங்க. விருந்து, கேளிக்கை, உல்லாசம் எல்லாத்தையும் கொஞ்சம் தள்ளிப் போட்டுடுங்க.

# நடக்குமென்பார், நடக்கும்!



**துலாம் :** சங்கடங்கள், பிரச்னைகளைத் தவிர்க்க முடியாதுங்க. அதனால எடுத்த காரியத்தை முழு ஈடுபாட்டுடன் செஞ்சிடுங்க. அவசரமோ பதட்டமோ பட்டீங்க, காரியம் கெட்டுடும். பண விஷயமும் அவ்வளவு சுகப்படாதுங்க. புது முயற்சி எல்லாம் இப்ப வேணாம். பேச்சில் காரத்தைக் கம்மி பண்ணிடுங்க. பிரயாணமெல்லாம் அப்புறம் பார்த்துக்கலாமே?



**மகரம் :** உங்க திறமை, சாதுர்யம் எல்லாம் வெளிப்படப் போகுதுங்க. உங்க பேச்சு இனிமையா இருக்கும். முகராசி கூடிடும். குடும்பத்தில் சுப காரியம் உறுதி. விருந்து, டூர்னு கலக்கப் போறீங்க. பண நடமாட்டம் திருப்தியாவே இருக்கும்னாலும் வீண்செலவுகளைத் 'தாட்பூட்'னு பண்ணிடாதீங்க. வெளியூர் ஃபிரண்ட்ஸ் அல்லது வெளிநாட்டு ஃபிரண்ட்ஸ் குட் நியூஸ் சொல்வாங்க.



**விருச்சிகம் :** உங்க புத்திசாலித்தனமும் சாமர்த்தியமும் வெளிப்படப் போகுது. நல்லவங்க உங்களுக்கு நல்லது செய்யப் போறாங்க. பணம் தாராளமாகப் புழங்கப் போகுது. துணி, நகை, மிக்ஸி, ஏஸின்னு ஜமாய்க்கப் போறீங்க. வேலையில்லாதவங்களுக்கு வேலை, வேலை இருக்கிறவங்களுக்குப் பதவி உயர்வு நிச்சயம் உண்டு.



**கும்பம் :** எதிர்ப்புகள் இருக்கும். ஆனால் உங்க முக வசீகரம், கவர்ச்சியை வைத்து அனாயாசமாகச் சமாளிச்சிடுவீங்க. வாழ்க்கைத் துணைவரால் அனுகூலம் ஏற்படப் போகுது. பணவரவு சற்று முன்னே பின்னேதான் இருக்கும். செலவுக்குக் குறைவிருக்காது. ஆனால் சுப காரியங்களுக்குத்தான்! குறுக்கு வழிகளில் மட்டும் போயிடாதீங்க.



**தனுசு :** எடுத்த காரியமெல்லாம் ஈஸியாக நிறைவேறிடும். உங்க வசீகரம் அதிகரிப்பது ஒரு காரணம். உங்க உடன்பிறந்தவங்களும் நீங்களும், பரஸ்பரம், ஒருத்தருக்கொருத்தர் உதவியா இருந்துக்குவீங்க. குடும்பத்தில் சுப காரியங்களுக்கு அஸ்திவாரம் போட்டிடுவீங்க. சொந்தக்காரங்க வந்து உங்க மனசில உற்சாகத்தையும் தெம்பையும் ஊட்டப் போறாங்க. ஆனால் கொடுக்கல் வாங்கல் விஷயத்தில் மட்டும் ஒரு தடவைக்கு இரண்டு தடவை யோசிச்சு செய்யுங்க.



**மீனம் :** உங்க நிர்வாகத் திறமை அதிகரிக்கப் போகுது. எடுத்த காரியங்களை ஜம்முனு முடிச்சிடுவீங்க. எதிர்ப்புகளைச் சுலபமாகச் சமாளிச்சிடுவீங்க. ஆன்மீகத்தில் ஈடுபாடு ஜாஸ்தியாகும். அதனால் மனசு தெளிவா இருக்கும். பயணத்தைத் தவிர்த்துடுங்க அல்லது ஒத்திப் போட்டுடுங்க. அதுவும் முடியலைன்னா ரொம்பப் பாதுகாப்பாக பயணத்தை மேற்கொள்ளுங்க. ○

**ஜனவரி 17 முதல் 23 வரை**




• நவீன சீனாவின் இதயத் துடிப்பு

வெளியே குளிரோடு சேர்ந்து காற்றும் தாக்கியது. டாக்ஸியில் ஏறியதும், டியனான்மன் ஸ்கொயருக்கு வந்ததும் கீழே இறங்கியதும்...

காது, தலை எல்லாம் மூடிக் கொண்டு, உடம்பு முழுக்க உல்லன் ஸ்வெட்டர்களால் மூடிப் புதைத்துக் கொண்டு, இறங்கினோம்.

2

# ஐஸ்வர்யா நடனமாடிய புண்ணியஸ்தலம்!

நம்முடைய தில்லி ராஷ்ட்ரபதி பவன் வாயிலில் ஜனவரி மாதம் நடக்கும் நிகழ்ச்சியின் போது பார்த்த விசாலமான வீதி நினைவுக்கு வந்தது.

ஆனால் இது அதைவிடப் பிரம்மாண்டம்!

நவீன சைனாவின் இதயத் துடிப்பு இந்த இடம்தான். சீன மக்கள் குடியரசின் கேந்திரம். பெய்ஜிங்கின் அடையாளம். உலகின் மிகப் பெரிய்ய்ய்ய பப்ளிக் ஸ்கொயர். நாலு லட்சத்து நாற்பதாயிரம் சதுர மீட்டர்கள். பத்து லட்சம் மக்கள் ஒரு சேரக் குவிந்தாலும் தாராளமாக இடம் இருக்கும்!

பகலில் வந்தால் அயல்நாட்டு டூரிஸ்டுகளும், சீன டூரிஸ்ட்டுகளும் ஏராளமாக வருவார்களாம். (89ல் நடந்த கலாசாரப் புரட்சியின்போது மாணவர்கள் தாக்கப்பட்ட இடம் இதுதான்!)

சேர்மன் மா சே துங்கின் சமாதி, அருகேயே இருக்கிறது. அரசாங்க அலுவலகங்கள், மியூசியம் அஃப் சைனீஸ் ஹிஸ்டரி, மியூசியம் அஃப் சைனீஸ் ரெவல்யூஷன் எல்லாம் இங்கேதான்...

டியனான்மன் ஸ்கொயரை ஒரு சுற்று சுற்றி வருவதற்குள், குளிர் இன்னும் கொஞ்சம் பதம் பார்த்தது.

"சாலை ஓரத்துக்கு வந்தால் டாக்ஸி பிடித்து நேரே ஓட்டலுக்குப் போய்விட

சாருகேசி

லாம்!'' என்றார் கோபால்.

ஒரு டாக்ஸியும் நிற்காமல் விரைந்து கொண்டே இருந்தது, பயணிகளுடன்.

"வலது பக்கம் போய் நிற்போம். நிறைய டாக்சிகள் அங்கே வரும்... நடக்க முடியுமா?" என்றார் கோபால்.

கடும் குளிர் அதை இன்னும் உசுப்பேற்றி விடுகிற மாதிரி காற்று.

'89ல் போராடிய மாணவர்களுக்கு மானசீகமாக சல்யூட் அடித்து, கொஞ்சம் நெஞ்சுரம் கடன் வாங்கிக் கொண்டு நடந்தோம்.

மறுநாள் காலை ஹார்பர் பிளாசா ஓட்டலில் இருந்து, எனக்கு ஏற்கெனவே பதிவு செய்யப்பட்டிருந்த ட்வென்டிஃபர்ஸ்ட் செஞ்சுரி ஹோட்டலுக்கு வந்து, அறையில் பெட்டியை வைத்து விட்டு, ட்ராவல் டெஸ்க் உதவியாளரிடம் முன் இரவே சொல்லி வைத்திருந்தபடி சுற்றுலா இடங்களைப் பார்க்கத் தயாரானேன்.

முதலில் ஜேட் என்று சொல்லப்படும் பல வண்ணங்களில் கிடைக்கும் ஒரு வகைக் கல்லிலிருந்து உருவாக்கப்படும் பொருட்களைப் பார்க்க ஒரு பாக்டரி விஸிட். கல் என்றால் சாதாரணக் கல் அல்ல. மார்பிள் மாதிரி விலை உயர்ந்த கல். அதில் சீனக் கலைஞர்கள் செய்திருக்கும் அற்புதமான, கலைநயம் மிகுந்த கைவினைப் பொருட்களைப் பார்த்தால் பிரமிப்பாக இருக்கிறது. பச்சை நிறத்தில் தான் பெரும்பாலும் இந்தக் கல் இருக்கிறது. சொர்க்கத்திலிருந்து வந்த கல் என்கிறார்கள்!



• சீனப் பெருஞ்சுவர்





பேயுவான்லியாங் ஜேடு ஃபாக்டரியில் கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் போல ஆகிவிட்டது.

மோதிரம், வளை, நெக்லெஸ் என்று அலங்கார ஆபரணங்களில் தொடங்கி, பிரும்மாண்டமான புத்தர் சிலைகள் வரை இந்த அற்புதக் கல்லில் தயாரித்துக் குவித்திருக்கிறார்கள். கொத்துக் கொத்தாக வந்து குவியும் வெளி நாட்டு டூரிஸ்ட்டுகளும் சரி, வெளி மாநிலங்களிலிருந்து வந்திருக்கும் சீன டூரிஸ்ட்டுகளும் சரி, டாலர்களாகவும், சீன யுவான்களாகவும் கொடுத்து, ஷோரூம்களில்



• 'மிங் டைனாஸ்ட்டி'யைப் பார்க்க டூரிஸ்டுகள்...

இருக்கும் கைவினைப் பொருட்களைச் சுமந்து கொண்டு செல்லுகிறார்கள்!

"மிங் டைனாஸ்டி அரசர்களின் சமாதிகளைப் பார்த்துவிட்டு வந்துவிடுவோம். இங்கிருந்து சுமார் ஐம்பது கிமீட்டர் தூரம்தான்" என்றார் கைடு. (சீன அரசர் பரம்பரைகளை மிங் டைனாஸ்டி, க்விங் டைனாஸ்டி என்று டஜன் கணக்கில் சொல்லுகிறார்கள்!)

நகரின் விசாலமான, வழுவழுப்பான சாலைகளையும், மேம்பாலங்களையும் விழுங்கிக் கொண்டு வேன் பறந்தது. இரு புறமும் வானத்தைத் தொடுகிற பலமாடிக் கட்டடங்கள்...

இந்த இடத்தைப் பதிமூன்று சமாதிகள் என்றும் சொல்லுவார்களாம். இங்கேதான் மொத்தம் பதினேழு சக்கரவர்த்திகளில், பதிமூன்றுபேரைப் புதைத்துச் சமாதி கட்டியிருக்கிறார்கள். மேலே இருந்து பார்க்கும் போது பச்சைப் பசேல் என்று மரம் செடி கொடிகளாகத் தெரியும் மலைப் பிரதேசம்.

"நாம் பார்க்கப் போவது மிங் டைனாஸ்ட்டியில் 1573 முதல் 1620 வரை அரசாண்ட வான்லி சக்ரவர்த்தியின் சமாதியை. இதுகூடப் புதைந்துபோய்க் கிடந்ததுதான். 1956ல்தான் கண்டுபிடித்தார்கள். இன்னும் இரண்டு சமாதிகளையும் கண்டுபிடித்துவிட்டார்கள். பராமரிப்புப் பணிகள் முடிந்ததும்தான் அவற்றைப் பார்க்க முடியும். பாக்கி சமாதிகள் விரைவில் கண்டுபிடிக்கப்பட்டுவிடும்!"

சமாதி என்றால் நம்மூர் அண்ணா சமாதி, எம்.ஜி.ஆர். சமாதி மாதிரி அல்ல. போகிற வழிக்கு 'ஸ்பிரிட் வே' என்று பெயர் வேறு!

மெகா மண்டபம். மேலே ஏறி, பிறகு கீழே இறங்கி, மறுபடி இறங்கி டூரிஸ்ட்டுகளோடு கூட்டத்தோடு கூட்டமாகப் படிகள் இறங்கி, உள்ளே நீண்ட சதுர அறைக்குப் போனால்–

இத்தனை உயரமாகவா வான்லி சக்ரவர்த்தி இருப்பார் என்று ஆச்சரியப்படுகிற அளவுக்கு நீளமான சமாதி. வழுவழுப்பான கல் மட்டும் இருக்கவில்லை என்றால், நம் வீடுகளில் கார்ப்பரேஷன் தண்ணீர் பிடிக்கக் கட்டியிருக்கும் சம்ப்–தான் இவை என நினைக்கத் தோன்றும்!

லஞ்ச் இடைவேளையில் ஒரு மிகப் பெரிய ஓட்டலுக்கு எல்லாரையும் அழைத்துச் சென்றார் கைடு. முந்நூறு யுவான் கட்டணத்தில் மதிய உணவுக்கான கட்டணமும் சேர்ந்து விடுகிறது. (ஒரு யுவான் என்றால் கிட்டத்தட்ட ஆறு ரூபாய்.)

வெஜிடேரியன் என்றால் திண்டாட்டம்தான். விரல் நீளத்துக்கு ஃப்ரெஞ்ச் ஃப்ரையும், ஒரு கிண்ணத்தில் சாதமும் கலந்து, சாப்பாடு என்று பெயர் பண்ணிவிட்டு, ஒரு பெரிய பாட்டில் மினரல் வாட்டரைக் குடித்துவிட்டு, கையைத் துடைத்துக் கொள்ள வேண்டியதுதான். நல்ல வேளையாக ஆப்பிளும் ஆரஞ்சும் நறுக்கி, தட்டில் அழகாக, அலங்காரமாக வைத்துத் தந்தார்கள். போனஸ் போல! "ஜமாயுங்கள்!" என்று சக டூரிஸ்ட்டுகள் எனக்காக விட்டுக் கொடுத்துவிடவே, ஒரு வெட்டு வெட்ட முடிந்தது.

சாப்பிடப் போகிற இடத்தில் எல்லாம் (விமானம் உட்பட) நோ மீட், நோ எக், நோ ஃபிஷ் என்று தாரக மந்திரம் போல் இடைவிடாமல் உச்சரித்துக் கொண்டே இருக்க வேண்டும். 'ஓகே. பீஃப் கொடுக்கலாமா?' என்று ஒருமுறை ஓட்டலில் கேட்டபிறகு, தாரக மந்திரத்தில் beefஐயும் சேர்த்துக் கொண்டு உச்சரிக்க வேண்டியதாயிற்று!

"நாம் இப்போது படாலிங் வழியாக த கிரேட் வால் அஃப் சைனா பார்க்கப் போகிறோம்!" என்று அறிவித்தார் கைடு.

ஆகா, உலக அதிசயங்களில் ஒன்றான சீனப் பெருஞ்சுவர்! 'ஜீன்ஸ்' படத்தில் ஐஸ்வர்யா ராய் நடனமாடி 'புனிதப்படுத்திய' புண்ணிய ஸ்தலம்!

வந்திருந்த நூற்றுக்கணக்கான டூரிஸ்ட்டுகளுக்கு அந்தப் புனிதம் தெரிந்திருக்க வாய்ப்பில்லைதான். இருந்தாலும் படிகளில் விறுவிறுப்புடன் ஏறுவதில் (என்னைவிட)

அதிகம் உற்சாகம் காட்டினார்கள்! அப்புறம் தான் தெரிந்தது, அவர்கள் ஐஸ்வர்யாராயின் பாதம் பட்டதால் அங்கே வரவில்லை. இங்கிலாந்து அரசி, அமெரிக்கக் குடியரசின் அதிபர்கள், ஜப்பானிய பிரதமர்கள் என்று பல தலைவர்கள் அங்கே வந்து போயிருக் கிறார்கள்!

"இதை கி.மு. ஏழாம் நூற்றாண்டில் கட்டி னார்கள். மொத்தம் 6700 கிலோ மீட்டர்!"

தூக்கி வாரிப் போட்டது. 6700 கிலோ மீட்டர் தூரத்தையும் கைடு பின்னால் போய்ப் பார்த்துக் கொண்டே இருந்தால், எந்த நூற்றாண்டில் இந்தியா போய்ச் சேருவது? சரியான 'வால்'!

"மேலே போய்ப் பார்த்துவிட்டு வாருங் கள். நான் கீழேயே இருக்கிறேன்!" என்றார் கைடு.

அவர் கூடவே வராததன் காரணம், படிகளில் ஏறத் தொடங்கிய போதுதான் தெரிந்தது. ஏனென்றால் எல்லாப் படிகளும் ஒரே உயரத்தில் இல்லை. சில படிகளைக் கால் வைக்க, வாமனர் மகாபலிச் சக்ரவர்த்தி யின் மூன்றடி நிலத்தை அளக்க வைக்கிற மாதிரி, உயரமாகத் தூக்கி வைக்க வேண்டி இருந்தது. மேலே ஏற ஏற, குளிர்காற்று தாக்கி யது. மூச்சு வாங்கியது. ஏறிப் போகப் போக, படிகள் அதிகம் ஆகிக் கொண்டே போவது போல் ஒரு பிரமை. "கடல் மட்டத்திலிருந்து எண்ணூறு மீட்டர்தான் உயரம்!" என்றார் ஒரு டூரிஸ்ட். ('உம்மைக் கடலில் தூக்கிப் போட!' என்று மனசுக்குள் சபித்தேன்!)

கிட்டத்தட்ட உச்சியைத் தொட்ட பிறகு கீழே பார்த்தால் தலை சுற்றியது. ஹிட்ச்காக்கின் 'வெர்ட்டிகோ' நினைவுக்கு வந்தது. இனியும் மேலே ஏறினால் சொர்க்க பூமிவாசிகள் யாராவது ஹலோ சொல்லிக் கையைக் குலுக்கும் வாய்ப்பு இருந்ததால், மெதுவாகக் கீழே இறங்க பளபள வென்றி ருந்த இரும்புக் கைப்பிடிச் சுவரைப் பிடித்த தும் 'ஐயோ' என்று கையை உதற வேண்டி யதாயிற்று. ஏதோ நெருப்பைத் தொட்ட மாதிரிதான் அந்தக் குளிர்ச்சி விரல்களைப் பதம் பார்த்தது!

ஏறுவதுதான் சிரமம்; ஈஸியாக இறங்கி விடலாம் என்பதெல்லாம் சீனப் பெருஞ் சுவரைப் பொறுத்தவரை தவறு. படிகளைப் பார்த்து இறங்காவிட்டால், ஒரேயடியாக உருண்டு, மிங் டைனாஸ்ட்டி சமாதிகளில் ஒன்றில் சங்கமம் ஆகிவிட வேண்டியிருக் கும்!

"பார்த்தீர்களா? நைஸ்? குட்?" என்று கேட் டார் கைடு. (ஏதோ அவர்தான் அந்தச் சுவ ரையே கட்டிய மாதிரி!)

"பெய்ஜிங்கின் வடமேற்குப் பகுதியில் இருக்கும் சீனப் பெருஞ்சுவர் யாங்கிங் கவுண்ட்டியின் மலைப் பகுதியாகும். கொஞ் சம் தெற்கே, சாங்பிங் கவுண்ட்டியின் ஜ்யோங் வான். வடக்கே ஜாங்ஜியாகொவ். புரிந்ததா?"

"புரிஞ்ங்ததுங்கொவ்!"

கடவுள் நமக்கெல்லாம் மூக்கைப் படைத் தது நுகர்ச்சிக்கும், சுவாசத்துக்கும் மட்டுமே என இது வரை நினைத்தது தவறு. பேசும் போது வாய் மட் டுமல்லாது, மூக் கையும் பயன்




படுத்துகிறார்கள் சீனர்கள்– 'ய்ங்' ஒலி அவர் கள் பேச்சில் புகுந்து விளையாடுகிறது. ஒரு சங்கீதம் கேட்பது போலத்தான். அதுவும் அவர்கள் வேகமாகப் பேசும்போது மோர் சிங் வாசிக்கிறார்களோ என்று தோன்றும்!

ஊருக்குத் திரும்பி வந்து 'யங்' இல்லாமல் ஒழுங்காகத் தமிழ் பேச வேண்டுமே என்ற கவலை பிடித்துங்கொங்ண்டது!

– அடுத்த வாரம்



# அவள் வருவாளா?

இலேசாக இருள் கவிந்திருக்கும் மாலை ஆறு மணி. ஜீன்ஸ் டீ ஷர்ட் இளசுகளும் டைட்ஸ், மிடி வாலிபி களும் முண்டியடித்த அந்த அரங்கம் திறக்கப் படுகிறது. அரக்கப் பரக்க ஓடி இடம்பிடிக்கும் இளசுகளின் மொத்தக் கண்களும் ஸ்டே ஜையே வெறித்துக் கொண்டிருக்கின்றன. 'இதோ அந்தக் குயில் வரப் போகிறது' என்று காத்திருந்தவர்களின் பொறுமை எல்லை மீற, தொடர்கிறது காட்டுக் கத்தல். ஏமீ! ஏமீ! ஏமீ! அடுத்த சில நிமிடங்களில் வண்ண விளக்குகள் ஜொலிக்க, முகத்தில் விழும் முடியை ஸ்டை லாகக் கோதியபடி, வழுவழு உடையில் புன் னகை சிந்தும் அந்தக் குயில்!

– ஆசியாவின் நம்பர் ஒன் பாப் பாடகி யான இந்த ஏமீ கடந்த ஆறு மாதமாக முடங்கிக் கிடக்கிறார். காரணம் அரசு போட்ட தடை. ஒரு தேசிய கீதம் பாடப் போய் இந்தத் தடையைச் சந்தித்தாரென்றால் நம்ப முடிகிறதா? – விஷயம் இதுதான்:

தைவானைச் சேர்ந்த ஏமீக்கு ஆசியாவில் ஏகப்பட்ட ரசிகர்கள். குறிப்பாக சீனாவில். இவரின் சி.டி. கேசட்டுகளுக்கு ஏக டிமாண்ட். கடந்த வருடம் தைவானின் புதிய அதிபர் சென் ஷுய்பியன் பதவியேற்பு விழாவில் அந்நாட்டின் தேசிய கீதத்தைப் பாட ஏமீக்கு அழைப்பு விடுக்கப்பட்டது. அதிபர் அழைப் பாயிற்றே, மறுக்க முடியுமா? தமக்குக் கிடைத் தப் பொன் வாய்ப்பாக நினைத்துப் பாடினார் ஏமீ. இங்குதான் ஆரம்பித்தது வினை. அரசி யல்ரீதியாக தைவானுடன் டூ விட்டுக் கொண்டிருக்கும் சீனா, ஏமீயின் நிகழ்ச்சி களுக்குத் தடை விதித்துவிட்டது. எக்கச் சக்கமாக விற்றுக் கொண்டிருந்த அவரது சி.டி. மற்றும் கேசட்டுகளுக் கும் இந்தத் தடை!

கோக் நிறுவனம் 'ஸ்பிரைட்' விளம்பரத்திற்குச் சீனாவில் இவரைப் பயன் படுத்தி வந்தது. அரசியல் பிரஷர் காரணமாக விளம்பரத்தி லிருந்தும் கட்! நொந்து போனார் ஏமீ– இப்படியெல்லாமா பண்ணுவார்கள்? என்று. ஆறு மாத காலம் மனம் புழுங்கிக் கொண்டி ருந்தார் தனியாக. 'அவள் வருவாளா?' என்ற ஸ்டைலில் ரசிகர்கள் ஏக்கம் ஆங்காங்கே பெருக்கெடுக்க, அது ஒரு பெரிய பிரச்னை யையே ஏற்படுத்திவிட்டது.

"ஏமீக்குத் தடைவிதித்தவனைக் கொல்ல வேண்டும்!" என்றெல்லாம் ரசிகர்கள் தெருத் தெருவாய், ஊர் ஊராய், நகர நகரமாய்ப் பேச ஆரம்பித்துவிட்டார்கள். இவர்களின் மனப் புழுக்கத்துக்கு மருந்து தடவுகிற மாதிரி மீண்டும் மேடையேற ரெடியாகி விட்டார் ஏமீ. இந்த முறை அவ• மேடையேறுவது ஆசியாவுக்கு வெளியில்.

"ஏங்க சீனா பக்கம் திரும்ப போவீங்களா?" என்றால்,

"இப்போதைக்கு அங்கு ப்ரோக்ராம்கள் ஏதும் புக் ஆகவில்லையே!'' என்று 'பாலிஷ்'ஆக பதில் சொல்கிறார் ஏமீ.

— ஏக்ஜி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka